# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 19
இதழ் 2

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விகாரி௵
ஆடி௴ 24உ

# சுதந்திர இயக்கம்

பம்பாயில் நடந்த அகில இந்திய சுதந்திரக் கட்சி மகாநாட்டைத் துவக்கி வைத்த ராஜாஜி எடுத்த காரியம் எவ்வளவு மகத்தான பொறுப்பு வாய்ந்த காரியம் என்பதைத் தெளிவாக்கி விட்டார்.

"என்னை இந்தச் சுதந்திரக் கட்சி மகாநாட்டைத் துவக்கி வைக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கின்றனர். இந்தப் பணியை மிக்க மகிழ்ச்சியோடு மட்டுமல்ல; மிகுந்த பொறுப்புணர்ச்சியோடும் செய்கிறேன். நான் இந்தக் கட்சியை, கட்சி என்ற முறையில் மட்டும் துவக்கி வைப்பதாக நினைக்கவில்லை. நான் ஒரு சுதந்திர இயக்கத்தையே துவக்கி வைத்திருப்பதாக நினைக்கிறேன்" என்றார்.

அதுமட்டுமல்ல, பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து நடத்தப்பட்ட சுதந்திர இயக்கத்தை விட மிக மிக முக்கியமான இயக்கம் இது என்று குறிப்பிட்டார்.

இந்த மிகக் கடினமான பொறுப்புள்ள இயக்கத்தை நடத்தத் தேச மக்கள் தயாராக இருக்கின்றனரா என்ற கேள்விக்கு, பம்பாய் மகாநாடு ஆணித்தரமான பதில் அளித்தது. தேச மக்கள் அனைவரும் இவ்வியக்கத்தில் ஈடுபடத் தயாராய் இருக்கின்றனர் என்று சந்தேகமறப் பதில் அளித்தது.

பம்பாயில் நடந்த சுதந்திரக் கட்சி மகாநாட்டுக்குத் தேசத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும், எல்லா ராஜ்யங்களிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். இவர்களில் பலர் பழைய காங்கிரஸ்வாதிகள்; தேசபக்தர்கள். இவர்கள் மட்டுமின்றிப் பொது ஜனங்களிடம் செல்வாக்கு பெற்ற பல தலைவர்கள் இந்த மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். தற்சமயம் சட்டசபைகளிலும், டில்லி மக்கள் சபையிலும் அங்கத்தினர்களாக உள்ளவர்கள் சுதந்திரக் கட்சி மகாநாட்டுக்குப் பிரதிநிதிகளாக வந்திருந்தார்கள்.

இவர்களெல்லாம் தங்கள் சொந்தச் செலவில் வெகு தூரத்திலிருந்து பம்பாய் வந்து தங்கி மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். பம்பாயில் ஒரு நாள் தங்குவது என்றால் எவ்வளவு செலவாகும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

வந்தவர்கள் லட்சாதிபதிகள் அல்ல. பாமர மக்களின் தலைவர்கள்; பாமர மக்களின் கஷ்ட நஷ்டங்களை உணர்ந்தவர்கள்; விவசாயக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள்; மத்தியதர வகுப்பினர்கள். இப்படிப்பட்டவர்கள் சுமார் எண்ணூறு பேர்கள் பிரதிநிதிகளாக வந்திருந்தார்கள்.

இத்தனை பேரும் ஏன் வந்தார்கள்? தேசத்தினிடம் அவர்களுக்குள்ள பக்தியின் காரணமாக வந்தார்கள். காங்கிரஸின் போக்கு எதேச்சாதிகாரப் போக்காக மாறிக் கொண்டு வருகிறது; அதைத் தடுத்து நிறுத்த இதோ வழி பிறந்துவிட்டது என்று நம்பி வந்தார்கள். சீர்குலைக்கப்பட்டு வரும் பழம்பெரும் பாரதப் பண்பாட்டைப் பேணிக் காப்பாற்ற இதோ ஒரு மார்க்கம் இருக்கிறது என்று வந்தார்கள். பறிபோய்க் கொண்டிருக்கும் தனி மனிதனின் சுதந்திரத்தைக் காப்பாற்றச் சுதந்திரக் கட்சியைத் தவிர வேறு வழியில்லை என்று நம்பி வந்தார்கள்.

ஆகவே, பம்பாய் மகாநாடு ஒரு விஷயத்தை நிரூபித்துவிட்டது. பாரதநாட்டு ஏழை மக்கள், நடுத்தர மக்கள் ராஜாஜி சொல்வது போல் ஒரு பெரிய இயக்கமே நடத்தத் தயாராக இருக்கிறார்கள் என்பதைச் சந்தேகமறத் தெரிவித்து விட்டார்கள்.

இந்த மகாநாட்டில் மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ஸ்ரீ கனசியாம்சிங் குப்தா என்ற பெரியார் கலந்துகொண்டார். இவர் பழம்பெரும் காங்கிரஸ்காரர்; தேசபக்தர். மத்தியப் பிரதேச சட்டசபையில் சபாநாயகராக இருந்தவர். மத்தியப்பிரதேச மக்களின் பெருமதிப்புக்குப் பாத்திரமானவர். ஏறத்தாழ ராஜாஜியின் வயதுள்ளவர். பம்பாய் சுதந்திரக் கட்சியின் மகாநாட்டுக்கு ஆசிகூற இந்தப் பெரியாரை அழைத்திருந்தார்கள். அந்தப் பெரியார் கூறிய மொழிகள் பாரத நாட்டு மக்களின் ஏகோபித்த குரலாகவே ஒலித்தன.

'' நான் இரண்டு காரணங்களுக்காக இந்தக் கட்சியை வரவேற்கிறேன். முதலில் ராஜாஜியைப் போன்ற பரிசுத்தமான, தன்னலமற்ற தூய ஆத்மாவை நான் கண்டதில்லை. அவரைப் போன்ற அறிவாளிகள் உலகில் ஒரு சிலரே. அவர் தேச மக்களின் நலனையே என்றும் கருதி வருகிறார். அவர் எந்தக் காரியமும் மக்கள் நன்மைக்காகவே செய்கிறார். அவரிடம் எனக்குப் பக்தியே ஏற்பட்டுவிட்டது. அவர் ஆரம்பித்துள்ள இந்தக் கட்சியை மனமார வரவேற்கிறேன். மற்றொரு காரணம் நமது ஜனநாயகம் தழைக்கப் பலமான எதிர்க்கட்சி வேண்டும். அதற்காகவும் வரவேற்கிறேன்'' என்றார்.

* * *

சுதந்திரக் கட்சியின் கொள்கைகள் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று பிரதமர் நேரு அடிக்கடி சொல்லுகிறார் அல்லவா? அதற்குச் சுதந்திரக் கட்சித் தலைவர் ஸ்ரீ என். ஜி. ரங்கா சரியான பதில் தமது தலைமையுரையில் தந்தார்.

'' அரசாங்கங்கள் தனி மனிதனின் உரிமைகளைப் பறிப்பதும், அதனை எதிர்த்து இயக்கங்கள் நடத்துவதும் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. பண்டை நெடுங்காலம் முதல் வந்துள்ள வழக்கம். சரித்திரம் தெரிந்த நேருஜி இதை எப்படிப் பத்தாம் பசலிக் கொள்கை என்கிறார் என்பது புரியவில்லை. அவர் செய்வதுதான் 19-ம் நூற்றாண்டையதாக இருக்கிறதே தவிர சுதந்திரக் கட்சியின் உதயமும் இயக்கமும் மிக மிக முற்போக்கானவை'' என்று கூறினார்.

'' பம்பாய் நகரில் 1885-ம் ஆண்டு இந்திய தேசிய காங்கிரஸ் ஆரம்பிக்கப்பட்டது. பாரத நாட்டின் சுதந்திர இயக்கம் அப்பொழுது தொடங்கப்பட்டது. இப்பொழுது ஜனநாயக உரிமைகளை, தனி மனிதனின் உரிமைகளை நிலைநாட்ட மற்றொரு இயக்கம் பம்பாயில் ஆரம்பிக்கப்படுகிறது'' என்றார் வரவேற்பளித்த திரு எம். ஆர். மஸானி.

'' சுதந்திரம் நமது பிறப்புரிமை'' என்ற விதையைத் திலகர் பெருமான் பல ஆண்டுகளுக்கு முன் மக்கள் மனத்தில் நட்டார். அந்த ஆல விதை மக்கள் மனத்தில் ஊன்றி வளர்ந்து, மரமாகி அரசியல் சுதந்திரத்தை வாங்கித் தந்தது. அந்த ஆல மரம் அதே திலகர் திருநாளில் 'சுதந்திரக் கட்சி' என்ற விழுது விட்டிருக்கிறது! தனி மனிதனின்—விவசாயி, வியாபாரி, தொழிலாளி எல்லாருடைய சுதந்திரத்தையும் பேணச் சுதந்திரக் கட்சி நாளுக்கு நாள் வளரும் என்ற நம்பிக்கையைச் சுதந்திரக் கட்சியின் முதல் மகாநாடு பாரத மக்களுக்கு அளித்திருக்கிறது.

# கேரளத்தில் ஜனாதிபதி ஆட்சி

கேரளா ராஜ்யத்தின் சோக நாடகம் முடிவு பெற்றது குறித்து, நாடு நிம்மதி கொள்ளலாம். ஜனநாயகத்தை எப்படியும் பாதுகாக்க வேண்டும் என்று அந்தக் கொள்கையை மிகுந்த உன்னதமான லட்சியமாகக் கொண்டுள்ள நம் நாட்டு மக்கள், அதைத் தாற்காலிகமாகப் புறக்கணிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதைக் குறித்து வருந்தவே செய்வார்கள்.

ஜனநாயக முறையில் செயலாற்றிவரும் ஒரு சர்க்காரை, சட்டசபையின் நம்பிக்கை இழக்காமல் இருக்கும்போது, பதவியை விட்டு நீக்க வேண்டிய சூழ்நிலையும் நிர்ப்பந்தமும் ஏற்பட்டது சுதந்திர இந்தியாவின் சரித்திரத்தில் இதுதான் முதல் தடவை எனலாம். ஆனால் ஜனநாயகத்தையும் ஜனநாயக முறைகளையும் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்ற ஆவல் சாதாரண மக்களுக்கு இருப்பது போலவே, கேரள சர்க்காருக்கும் இருந்திருந்தால், மக்களின் எதிர்ப்பு வலுப் பெற்றிருப்பதையும் அவர்களின் நம்பிக்கை குறைந்திருப்பதையும் கணித்து, தாங்களாகவே ஒரு இடைக்காலத் தேர்தலுக்கு இணங்கியிருக்கலாம். ஜனநாயக முறையில் தங்களுக்கும் நம்பிக்கையுண்டு என்பதைக் கம்யூனிஸ்டுகள் எடுத்துக் காட்ட இது ஒரு சந்தர்ப்பமாகவும் அமைந்திருக்கும். இது ஒரு அசாதாரண முறை என்றாலும், மக்களின் ஆதரவினாலேயே சர்க்கார் ஆட்சி புரிகிறது என்ற ஜனநாயக லட்சியத்தை ஏற்றுக்கொண்டதாக இருக்கும். அவ்வாறு செய்யக் கேரள சர்க்கார் இணங்கவில்லை. சட்டப்படி பதவிகாலம் முழுதும் பதவி வகிக்கும் உரிமையைத்தான் பெரிதாக நினைத்தனர். இதனால் தான் ஒருவரும் விரும்பி வரவேற்காத முறையில் ஜனாதிபதியின் தலையீடு ஏற்படலாயிற்று. வியாதி முற்றி 'ஆபரேஷன்' செய்ய வேண்டிய நிலைமை வந்தால் எப்படி மற்ற விஷயங்கள் பின்னடைந்து விடுகின்றனவோ, அப்படித்தான் கேரளாவில் ஏற்பட்ட மத்திய சர்க்காரின் தலையீடு.

வருத்தத்துடன் மேற்கொண்ட இச் செயல் காரணமாக, வேறு விபரீதங்கள் கேரளத்திலும் நாட்டின் இதர பாகங்களிலும் விளையக் கூடாது என்று அமைதியைக் கோரும் எல்லோரும் விரும்புவார்கள். இந்தக் கேரளத் தலையீடு முறையை ஒரு ஆதாரமாக வைத்துக் கொண்டு ஒரு சம்பிரதாயத்தையும் சிருஷ்டித்துவிடக் கூடாது.

சுதந்திரக் கட்சியின் அகில இந்திய முதல் மகாநாடு திலகர் திருநாளாகிய ஆகஸ்டு முதல் தேதியன்று பம்பாயில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மகாநாட்டுக்குச் சுதந்திரக் கட்சியின் தலைவராகிய திரு என். ஜி. ரங்கா தலைமை தாங்கினர். ராஜாஜி மகாநாட்டைத் துவக்கி வைத்தார். இரண்டு நாட்கள் நடந்த இந்த மகாநாட்டில் திரு மீனு மஸானி, திரு எச். பி. மோடி, திரு கே. எம். முன்ஷி, திரு வி. பி. மேனன், திரு எஸ். எஸ். மாரிசாமி முதலியோர் சொற்பொழிவாற்றினர்கள். நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் எழுநூற்றுக்கு மேற்பட்ட பிரதிநிதிகளும் சுமார் ஆயிரம் பிரமுகர்களும் வந்திருந்து மகாநாட்டைச் சிறப்பித்தார்கள்.



# ஆகாச வெடி

''கம்யூனிஸ்டு ஆட்சி நீங்கும் வரை தாடி வளர்ப்பதென்று, கதாசிரியர்கள் சிலர் முடிவு செய்துகொண்டிருந்தபோது, ஜனாதிபதி பிரகடனமும் வெளியாகி விட்டது.''

— தக்கலைச் செய்தி

வளர்த்துவானேன்? கதை முடிந்தது!

★

''இலங்கை ஜனப் பிரதிநிதி சபையில் ஒரு அங்கத்தினரைத் தாக்க மற்றொரு அங்கத்தினர் நாற்காலியைத் தலைக்கு மேல் தூக்கினர்.''

—இலங்கைச் செய்தி

அமரும் பதவியைத் தமக்கு மேலாக நினைக்கும் அங்கத்தினர்கள் அங்கு இருப்பது புலனாகிறது!

★

''கேரள நிலைமை காரணமாக, சென்னைக்குக் கோழி முட்டைகள் வரத்து குறைந்து விட்டது.''

—செய்தி

மார்க்கு போடுவதில் வாத்தியாருக்கு மட்டும் கோழிமுட்டைக்குப் பஞ்சம் ஏன் ஏற்படவில்லை?'' என்று கேட்கிறான் ஒரு பையன்.

''மீண்டும் உங்களைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்குமென்று நம்புகிறேன்'' என்றார் அதிகாரிகளிடம் விடைபெறும்போது கேரள முதன் மந்திரி நம்பூத்ரி பாடு.''

—செய்தி

உங்கள் பெயரிலேயே நம்பிக்கை தொனிக்கிறது என்று அவர்கள் நினைத்திருக்கலாம்.

★

''காங்கிரஸ் ஆட்சியை வெளியேற்ற கலெக்டர் மாளிகை முன்னால் மறியல் செய்யப் போவதாக பி.எஸ்.பி. அறிவித்திருக்கிறது.''

— லட்சுமணபுரி செய்தி

மாளிகையின் பின்புறம் வழியாக நிர்வாகம் வெளியேற, வழியிருப்பது இப்போது தெரிகிறது.

★

''சினிமா பார்க்க வந்த ஒரு ஸ்திரீயிடம் மரியாதையின்றி நடந்து கொண்ட பஞ்சாப் முதன் மந்திரியின் மகனைச் சிலர் நையப் புடைத்துச் சென்றனர்.''

— செய்தி

அடிபட்டது தானல்ல, தனது தகப்பனாரின் பெயர் என்று அவன் சமாளித்துக் கொண்டான் போலும்!



# தோட்டத் தொழிலாளருக்கு வசதி

கொழும்பு, ஜூலை மீ 31 உ

இந் நாட்டிலுள்ள சகல தொழிலாளருக்காகவும் சென்ற வருடம் பிராவிடண்ட் நிதிச் சட்டமொன்றை பார்லிமெண்டு சபை இயற்றியது. அப்பொழுது இந்தச் சட்டம் சம்பந்தப்பட்ட மட்டில் இந்தியர் இலங்கையர் என்ற வேற்றுமை பாராட்டப்பட மாட்டாதென்றும் சகல தொழிலாளருக்கும் பிராவிடண்ட் நிதி ஏற்படுத்தப்படுமென்றும் உறுதி கூறப்பட்டது. அடுத்த செப்டம்பர் மாதத்திலிருந்து தோட்டத் தொழிலாளர் அனைவரும் பிராவிடண்ட் நிதியில் சேர்த்துக் கொள்ளப் படுவார்களென்று அரசாங்கம் அறிவித்திருக்கிறது. இதற்கிடையில் தோட்டத் தொழிலாளர் தங்களை இந்தியர்களென்று எழுதிக் கொடுத்தால் மட்டுமே பிராவிடண்ட் நிதியில் சேர்த்துக் கொள்ளப் படுமென்று கூறப்படுவதாக ஒரு வதந்தி ஏற்பட்டதின் பேரில் இந்திய வம்சாவளியினரிடையில் பெரிய பரபரப்பு உண்டாயிற்று. பிராவிடண்ட் நிதியைக் காட்டி இந்நாட்டுப் பிரஜைகளும் பிரஜாவுரிமைக்குப் போராடிக் கொண்டிருப்பவர்களுமான இந்திய வம்சாவளியினர்களிடம் அவர்களை இந்தியர்களென்று எழுதி வாங்கவும் பிறகு காலக் கிரமத்தில் அவர்களை நாடு கடத்திவிடவும் சதி செய்யப்பட்டு வருவதாகப் பலத்த கண்டனங்கள் எழுந்தன. காங்கிரஸின் ஸ்தாபனங்களும் தமிழரசுக் கட்சியும் இதை வன்மையாகக் கண்டித்தன. அதன் பேரில் தொழில் கமிஷனர் உத்தியோக பூர்வமாக வெளியிட்டிருக்கும் ஒரு அறிக்கையில் சகல தொழிலாளரும் பிராவிடண்ட் நிதியில் சேர்த்துக்கொள்ளப்படுவார்களென்றும் இந்தியர்களென்று தொழிலாளரிடம் எழுதி வாங்கச் சட்டத்தில் இடம் கிடையாதென்றும் அப்படிச் செய்யப்படமாட்டாதென்றும் உத்தியோக ரீதியில் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

சிங்களம் மட்டுமே இலங்கையின் அரசாங்க மொழியாக இருக்க வேண்டுமெனச் சட்டமியற்றி, அதன் பயனைச் சென்ற வருடம் நாடு அமளி துமளிப்பட்டதிலிருந்து அரசாங்கம் ஒரு படிப்பினையைப் படித்துக் கொண்டிருந்தால் மீண்டும் மொழிவெறி தோன்றும் நிலைமையைக் கண்டிப்பாகத் தவிர்க்கும். இதற்கு மாறாக உத்தியோக மொழிக் கமிஷனர் சகல அரசாங்க இலாகாத் தலைவர்களும் இனி சிங்கள மொழியிலேயே குறிப்புகளை எழுத வேண்டுமென்றும், ஆங்கிலத்தில் இலாகாக்களுக்கிடையில் கடிதப் போக்குவரத்து நடந்தால் அதற்கு மறுமொழியளிக்க வேண்டாமென்று தாம் அறிவிக்கப் போவதாயும் தெரிவித்திருக்கிறார். அரசாங்க இலாக்காக்களில் சிங்களவர்கள் மட்டுமல்ல, சிங்களம் தெரியாத தமிழர்கள், பரங்கியர், முஸ்லீம்கள் ஆகிய பலரும் இருக்கிறார்கள். சிங்களத்தில் மட்டும்தான் சகல கடிதப் போக்குவரத்துக்களும் நடக்க வேண்டுமென்று கூறுவதானது இனி அரசாங்க இலாகாக்களில் சிங்களவர்களைத் தவிர வேறு யாருக்கும் இடம் கிடையாது என்று சொல்லாமல் சொல்லுவதாகும்.

பண்டாரநாயகா அரசாங்கம் சென்ற தேர்தலின் போது மதுவிலக்கை அமுல் நடத்தப் போவதாக அறிவித்தது. இதை அனுசரித்து அரசாங்கம் பதவியேற்றதும் உத்தியோக ரீதியான வைபவங்கள் எதிலும் மது உபயோகிக்கப்படாதென்று உத்தரவிட்டது. இங்குள்ள மந்திரிகள் மாத்திரமின்றி வெளிநாடுகளிலுள்ள இலங்கை ஸ்தானிகர்களும் உத்தியோக பூர்வமான வைபவங்களில் மது வழங்குவதை நிறுத்தினார்கள். பார்லிமெண்ட் சபையிலுள்ள ''காண்டீனிலும்'' பார்லிமெண்ட் அங்கத்தினர்களின் விடுதியிலும் இருந்த மதுக் கடைகள் மூடப்பட்டன. இதை அனுசரித்து, அரசாங்கம் நடத்திவந்த சாராய உற்பத்திச் சாலையையும் அவர்கள் மூடிவிடுவார்கள் என்றே பொதுவாகப் பலரும் எதிர்பார்ப்பர். ஆனால் இதற்கு மாறாக, அரசாங்க சாராய உற்பத்திச் சாலையில் சாராய உற்பத்தி முன்பிருந்ததை விடப் பன்மடங்கு அதிகரிக்கப்பட்டது. இப்பொழுது பாட்டில்களில் புளித்த கள்ளை அடைத்து விற்கும் தொழிலையும் அரசாங்கம் தனது சொந்த மேற்பார்வையில் நடத்தத் தொழில் இலாகா ஒரு திட்டம் வகுத்துக் கொண்டிருப்பதாக ஒரு அறிக்கை வெளியாகியிருக்கிறது. சாராய உற்பத்திச்சாலைக்கு அருகிலேயே கள்ளு உற்பத்திச் சாலையையும் ஏற்படுத்த ஒரு இடத்தைத் தொழில் இலாகா தேர்ந்தெடுத்திருக்கிறதாம். ஒரு புறம் மது விற்பனையை அரசாங்கமே மும்முரமாக நடத்தி வருகையில், மற்றொரு புறம் மதுவிலக்கைப் பற்றிப் பேசுவதிலும் உத்தியோக வைபவங்களில் மது வழங்குவதை நிறுத்துவதிலும் என்ன அர்த்தம் இருக்கிறது?

—ரஜனி

# எங்கள்

# ஷோரூம்

# மிகச்சிறந்த இந்திய ஜவுளிகளுக்கு ...



பம்பாயிலிருந்து கல்கத்தாவரையிலும், காஷ்மீரிலிருந்து குமரிவரையிலும், மிகப் பிரசித்திபெற்ற இந்திய மில்களில் தயாராகும் கேர்த்தியான ஷர்ட்டிங், சூட்டிங், வேஷ்டிகள், மற்றும் ஆண், பெண், குழந்தைகளுக்கான துணிமணிகள் எங்கள் ஷோரூமில் நிறைந்திருக்கின்றன.

ஜவுளிகளில் நீங்கள் விரும்புவது சிறந்தவை. எங்கள் ஷோரூமில் இருப்பது இந்திய ஜவுளிகளுக்குள் சிறந்தவை.

நேரில் வந்து பாருங்கள்.

# ஸ்ரீ கிருஷ்ணா டெக்ஸ்டைல்ஸ்

**2. தம்பு செட்டித்தெரு — சென்னை - 1**

[ பேராசிரியர் என். ஜி. ரங்கா முப்பது ஆண்டுகளாக விவசாயத்தில் ஈடுபாடுள்ளவர். முப்பது ஆண்டுகளாக பார்லிமெண்ட் அங்கத்தினராகவும் இருப்பவர். வெளிநாடு சென்று விவசாய சம்பந்தமாகப் பல விஷயங்கள் அறிந்தவர். காங்கிரஸ் பார்லிமெண்ட் கட்சியின் காரியதரிசியாகப் பணியாற்றியவர். கட்சிக் கட்டுப்பாட்டையும் மீறித் தன் கருத்தைப் பகிரங்கமாக எடுத்துக் கூறும் தைரியமுள்ளவர். நாகபுரி தீர்மானத்தின்மீது மக்களின் வாக்கெடுத்தால் காங்கிரஸ் தோல்வியடையும் என்று சவால் விட்டுக் கட்சியை விட்டு வெளியேறியவர். இப்போது சுதந்திரக் கட்சியின் தலைவர். அவருடைய கருத்துக்கள் சிந்தனைக்கு ஒரு அரிய விருந்து. — ஆசிரியர்]

# கூட்டு விவசாயம் நமக்கு வேண்டாம்

**பேராசிரியர் என். ஜி. ரங்கா**

நாகபுரித் தீர்மானத்தை எதிர்த்து நாட்டின் நானா பக்கங்களிலிருந்தும் கிளம்பியுள்ள கண்டனக் குரல்களைக் கேட்டு ஆளும் கட்சியினர் ஆச்சரியமுறுகின்றனர். 'தேசத்தின் நன்மைக்காகவும் உணவு உற்பத்திப் பெருக்குக்கும் கூட்டு முறை அவசியமானதுதானே; சேவா கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் விவசாயிகளின் நிலைமையை அபிவிருத்தி செய்து 1962ம் ஆண்டுக்குப் பின்னர்தானே கூட்டுறவுப் பண்ணை முறைகளை நாடு முழுதும் விஸ்தரிக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது; அதற்காக இப்போதிலிருந்து அர்த்தமற்ற கண்டனங்கள் ஏன் எழுப்பப்படுகின்றன' என்று ஆளும் கட்சியினர் பேசுகின்றனர்.

ஆனால் உண்மை நிலை வேறு. விவசாயத்தை ஒரு வாழ்க்கை முறையாகக் கொண்டு தலைமுறை தலைமுறையாகச் சுயேச்சையுடனும் கண்ணியத்துடனும் வாழ்ந்து வரும் கிராம மக்களின் ஆதாரத்தையே இத் தீர்மானம் அழித்துவிடப் பார்க்கிறது. மற்றவர்களைச் சுரண்டிப் பிழைக்காமல் தன் உழைப்பையே நம்பி, தன் தேவைக்கு வேண்டிய பண்டங்களைத் தானே உற்பத்தி செய்து, நாட்டுக்கும் உணவுப் பொருள்களை வழங்கி, கௌரவமாக நடத்து வரும் விவசாயியின் வாழ்க்கையை வேரறுக்கப் பார்க்கிறது இந்தத் தீர்மானம். எந்த சேவா கூட்டுறவுச் சங்கங்களைத் தங்களது நலத்துக்கும் விவசாயத்தின் முன்னேற்றத்துக்கும் உகந்த கருவிகளென மதித்து வந்தனரோ, அந்தச் சேவா சங்கங்கள், பசுக்களின் கழுத்தில் கட்டப்பட்ட தொழுக் கட்டை போலவும், படுகுழியில் வீழ்த்த அழைத்துச் செல்லும் பழக்கப்பட்ட யானைகளைப் போலவும், தங்களைக் கூட்டுப் பண்ணை என்னும் படுகுழியில் தள்ள அமைந்த முதல் படி என்பதை விவசாயிகள் உணர்ந்து கொண்டனர். ஆளும் கட்சியினர் தங்களுடைய கட்சிக் கட்டுப்பாட்டையும் அதிகாரச் செல்வாக்கையும் பயன்படுத்திக் கொண்டு, விவசாயிகளின் பொருளாதாரத்தைச் சீர்குலையச் செய்து, அவர்களின் தன்னம்பிக்கையை அடியோடு அழித்து, கதிகலங்கிப் பரிதவிக்கும் நிலைக்கு அவர்களைக் கொண்டு விட்டு, அந்த அவல நிலையில் 'கூட்டுறவுப்பண்ணை,' 'சமுதாயப் பண்ணை' ஆகியவைதான் அவர்களுக்கு ஏற்ற வழிகள் என்று ஏமாற்றி விவசாயிகளை உயிருடன் சமாதி செய்துவிடப் பார்க்கிறது இந்த நாகபுரித் தீர்மானம்.

## மகத்தான அநீதி

சுருங்கச் சொன்னால் இதுதான் அந்தத் தீர்மானத்தின் அர்த்தம். இதில் சந்தேகமில்லை. சுதந்திரமாகச் செயல் புரிந்து, தன்னம்பிக்கையுடன் விவசாயத்தை வெற்றிகரமாகப் பல்லாண்டுகளாக நடத்திவரும் கிராம மக்களைப் பார்த்து, "நீங்கள் கையாளும் முறைகள் முன்னேற்றத்துக்கு உகந்த முறைகள் அல்ல; நாட்டின் நலனுக்கு ஏற்றவை அல்ல; நீங்கள் உங்கள் முறைகளை மாற்றிக் கொள்ளவில்லையானால் தேசப் பொருளாதாரத்துக்கு முட்டுக்கட்டை போட்டவர்களாக ஆவீர்கள்" என்று பிரசாரம் செய்வது விவசாயிகளுக்கு இழைக்கும் மகத்தான அநீதி; இந்தியா கொண்டாடும் சுதந்திரத்துக்குக் கொடுக்கும் அடி; ஜனநாயக முன்னேற்றத்துக்குப் போடும் வேலி; பொருளாதார அபிவிருத்திக்கு ஏற்படுத்தும் தடை; இவற்றைத்தான் நாகபுரித்தீர்மானம் செய்யப் பார்க்கிறது. ஆகையால்தான் இந்தத் தீர்மானத்தையும் இதைப் பிரசாரம் செய்வதில் மேற்கொள்ளப்படும் முயற்சியையும் தேசாபிமானமற்ற செய்கை என்று நான் கூறுவேன்.

நாட்டின் பொருளாதாரத்துக்கு நமது விவசாயிகள் இதுகாறும் செய்து வந்துள்ள சேவை மகத்தானது. அவர்களுக்கு உற்சாகமளிக்கும் வார்த்தைகளோ, அவர்களைப் பாராட்டியோ அரசாங்கம் ஒன்றுமே சொல்லவில்லை. மாறாக அரசாங்கமும் திட்டம் வகுக்கும் பெரியோர்களும், தவறான கருத்துக்களை மனத்தில் கொண்டு சின்னஞ்சிறு நிலச்சுவான்தார்களை எல்லாம் பெரிய பண்ணைகளில் இணைத்து விட்டால் உற்பத்தி பெருகிவிடும் என்று கதை சொல்லுகிறார்கள்.

## மாற்று வேலை கிடைக்குமா?

நிலத்தையெல்லாம் கூட்டுப் பண்ணையில் சேர்த்து விட்டபின் வேலையின்றித் தவிக்கும் விவசாயிகளுக்கு எந்த விதத்தில் எந்த அளவுக்கு மாற்று வேலை வாய்ப்புக்கள் ஏற்படுத்திக் கொடுக்க முடியுமென்பதைப் பற்றி அரசாங்கத்தினருக்கே தெளிவான அபிப்பிராயம் கிடையாது. இதிலிருந்து சிறு நிலச்சுவான்தார்களுக்காக அரசாங்கம் வடிக்கும் கண்ணீர் முதலைக் கண்ணீர் என்பது விளங்கும். இப்போது கிடைத்துக்

கொண்டிருக்கும் அரை வயிற்றுக் கஞ்சியும் அரைநாள் வேலையும் போய், நிர்வாகத்தில் தனக்கு எவ்வித சம்பந்தமும் இல்லாத கூட்டுப் பண்ணையைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் வடிக்கும் நிலைமைக்கு இது வரையிலும் சுதந்திரமாகவும் கண்ணியமாகவும் வாழ்ந்து வந்த விவசாயி வந்து விடுவான். இந்த நிலை வரவேற்கத் தக்கதுதானா? மற்றத் துறைகளில் போதிய மாற்று வேலைகள் கிடைக்கும் வரையில் இப்போது கிடைக்கும் அரை வயிற்றுக் கஞ்சிக்கு அதிகமாக இதர துறைகளில் கிடைக்க வாய்ப்புகள் ஏற்படும் வரையில், இப்போது விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் கிராமவாசிகளைத், தங்கள் தொழிலிலிருந்து அப்புறப்படுத்துவதைப் போல் தீமையான செயல் வேறு இருக்க முடியாது. ஜனநாயகத்துக்கும் சுதந்திரத்துக்கும் இதைவிட அதிக கேடு விளைவிப்பது ஒன்றுமில்லை.



திரு என். ஜி. ரங்கா

இதுதான் பிற்போக்கான நடவடிக்கை. நாகபுரித் தீர்மானத்தை எதிர்ப்பவர்கள் பிற்போக்காளர்கள் அல்ல. அதை நிறைவேற்றி அமுல் செய்யப் பார்ப்பவர்கள்தான் பிற்போக்காளர்கள். ஜனநாயகத்துக்கு அசையாத அஸ்திவாரமாக இருப்பவர்கள் விவசாயிகள். இதைத் தெரிந்து கொள்ளாதவர்கள்தான் பிற்போக்காளர்கள். விவசாயிகளின் சுயநலமற்ற வாழ்க்கையும், அவர்களுடைய சுதந்திரமான தொழில் முறைகளையும் புரிந்து கொள்ளாதவர்கள் வகுக்கும் சோஷலிஸப் பாதை பொருளாதார அடிமைத்தனத்தில்தான் கொண்டுவிடும். சமூக நீதியின் அடிப்படையில் முழு வளர்ச்சி பெற்ற ஜனநாயகம் உருவாக வேண்டுமானால் லட்சக்கணக்கான விவசாயிகளின் ஊக்கமும் உற்சாகமும், செயல் திறனும் குன்றாமல் பார்த்துக்கொண்டு அவர்களுடைய பலதரப்பட்ட உற்பத்தி சாமர்த்தியங்கள் செழிப்புறும்படி செய்ய வேண்டும்.

## தீமையே மிகுதியாக உண்டு

இந்தச் சீர்திருத்தங்களிலும் எந்தவகையில் பார்த்தாலும் தீமையைத் தவிர நன்மை காணப்படவில்லை. முதலாவதாக, ஐரோப்பிய நாடுகளிலும் சோவியத் ருஷ்யாவிலும் இம்மாதிரி சீர்திருத்தங்களிலிருந்து கண்ட அனுபவத்தைப் பார்த்தால் கூட்டுப் பண்ணைகளிலும் கூட்டுறவு விவசாயத்திலும் தனி விவசாயிகளின் நிலைமை அடிமையின் நிலைமைக்குச் சமானமாகவே இருக்கிறது. இரண்டாவதாக, கூட்டுப் பண்ணை நிர்வாகத்தில் பங்கு கொள்ளும் மானேஜர்களும், மேற்பார்வையாளர்களும் கொள்கைகளை வகுக்கும் அதிகாரிகளும், தொழிலாளி நிர்வாகத்தினர்களும், ஆபீஸ் சிப்பந்திகளும் அணி அணியாகப் பெருகி, அதிகாரமும் அந்தஸ்தும் விரிவடைந்து போகும். சாதாரண விவசாயி அநுபவிக்கும் சிறு சுதந்திரம் கூட இந்த அதிகார வர்க்க சமுத்திரத்தில் மறைந்து விடும். மூன்றாவதாக, எந்த முதலாளித்துவ முறைகளும் மத்தியகால சகாப்த ஜமீன்தாரி முறைகளும் விவசாயத்தில் கூடாதென்று கண்டிக்கப்படுகின்றனவோ, அதே முறைகள், பன்மடங்கு கடுமையாகவும் ஈவிரக்கமில்லாமலும் இப்போது புகுந்து விடும். தேர்தல்களின் முடிவுகளைக் கவனத்தில் வைத்துச் செயல்புரிய வேண்டியிருக்குமாதலால், கொள்கைகளும் கோட்பாடுகளும் அடிக்கடி மாறுதலடைந்து விவசாயிகளின் மன அமைதியைக் குலைத்தவண்ணமிருக்கும். நான்காவதாக, தன்னிலிருந்து பிரிக்க முடியாத சுதந்திரமும், தன் வாழ்க்கையைத் தானே வகுத்துக் கொள்ளும் உரிமையும், தானே தனக்கு எஜமானன் என்னும் நிலைமையிலுள்ள பலவித நன்மைகளும்தான் பாரத சரித்திரத்தில் பல்வேறு சகாப்தங்களில் ஏற்பட்ட புரட்சிகளை எதிர்த்துப் பல போராட்டங்களிலும் வெற்றி கொள்ளத் துணையாக நின்றன. இவற்றையெல்லாம் அவர்கள் இப்போது இழக்க நேரிடும். ஐந்தாவதாக, எந்த சோஷலிஸ சமூகத்துக்கும் இன்றியமையாதவர்கள் சுயேச்சையுடன் தொழில் புரியும் உழைப்பாளிகளே என்ற உண்மையைத்தான் சோவியத் புரட்சி சரித்திரமும், சோஷலிஸப் பாதையில் பரீட்சைகள் நிகழ்த்திய மற்ற நாடுகளின் சரித்திரமும் எடுத்துக்காட்டுகின்றன. சரித்திர உண்மைகளுக்கு எதிராகச் செல்லுவது விவசாயிக்கும் தீமை. நாட்டுக்கும் தீங்கு. ஆறாவதாக நார்வே, ஸ்வீடன் போன்ற சிறிய நாடுகள் முன்னேற்றச் சமுதாய நாடுகளுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. அதற்குக் காரணம் ஜனநாயக முறையில் விவசாயிகளின் வாழ்க்கை அங்கே சீர்குலையவில்லை. சேவா கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் விவசாயிகள் வாழ்க்கை பலப்படுத்தப்பட்டுள்ளது.

## எல்லாம் ஏமாற்று வார்த்தைகளே

கூட்டுறவு விவசாய முறை சுதந்திரத்தின் அடிப்படையிலேதான் உருவாக்கப்படும் என்று திரும்பத் திரும்ப வலியுறுத்தப் படுவதைக் கேட்கிறோம். இது உண்மையென்றும் சேவா கூட்டுறவு முறையை முதற்படியாக அமைத்து, நாளடைவில் இறுதியாகக் கூட்டுப்பண்ணையை அமைப்பதுதான் திட்டத்தின் செயல்முறை: அதன்படிக்குத்தான் சேவா கூட்டுறவு இயக்

கத்தை முதலில் ஆரம்பிக்க வேண்டும் என்று பிரதமர் ஜவாஹர்லாலும் திட்டக் குழுவினர்களும் ஏன் அடிக்கடி சொல்லி வருகின்றனர்?

கூட்டுப் பண்ணையில் சேர்ந்தால் விவசாய அங்கத்தினர்களின் பட்டாக்கள் ரத்து செய்யப்படமாட்டாது. விஸ்தீரணத்துக்கு ஏற்றபடி மொத்த மகசூலில் பங்கு கிடைக்கும் என்றெல்லாம் உறுதியளிக்கப்படுகிறது. இதைக் கேட்டு யாரும் ஏமாறக் கூடாது. முதலாவது, இதர ஆலைத்தொழில்களில்கிடைக்கும் அளவுக்குத் தொழிலாளிகளுக்குக் கூலி கிடைக்குமா? போனஸ்கள், பஞ்சப்படிகள், இதரவித சலுகைகள், வட்டிப் பணம், தேய்மான நிதிக்குப் பணம், இதர பல்வேறு நிதிகளுக்குப் பணம் -இப்படி விநியோகம் செய்த பிறகு விவசாய அங்கத்தினர்களுக்குப் பங்கிடுவதற்கு, ஏதாவது மிச்சம் இருக்குமா என்பதே சந்தேகம். இரண்டாவதாக, அப்படி ஏதாவது மிச்சம் இருக்கும் என்று வைத்துக் கொண்டாலும், உற்பத்தியை உண்டாக்கக் காரணமாக இருக்கும் விவசாயத் தொழிலாளிகளுக்கு அதிகப் பங்கு கூலி கொடுக்கவேண்டும், ஆகவே சொந்தக்கார அங்கத்தினர்களுக்குக் குறைவாக அளித்தால் போதும் என்று சொல்ல நமது அரசாங்கத்துக்கு அதிக காலம் பிடிக்காது. முதல் ஐந்து வருஷங்களுக்குப் பட்டாதார்களுக்கு ஓரளவு பங்கு கிடைக்கிறதென்று வைத்துக் கொள்ளுவோம். தொழிலாளிகளிடமிருந்து கிளர்ச்சி ஏற்பட்டு அதிகக் கூலி கேட்பார்களென்று நிச்சயமாக எதிர்பார்க்கலாம். அந்நிலையில் சமூகத்தில் நிலச் சொந்தக்காரர்களுடைய உரிமை உழைப்பவர்களுடைய உரிமைக்கு ஈடாகாது என்று சொல்லி முதலுக்கே மோசம் வரும்படி அரசாங்கம் செய்துவிடும். பட்டா நிலத்தின் மதிப்பே போனபிறகு, பட்டா மாற்றும் உரிமையை வைத்துக்கொண்டு என்ன செய்ய முடியும்? ஆகையால் கூட்டுறவு விவசாயப் பண்ணையில் சேருவதால் தனிப்பட்ட பட்டாதார்கள் உரிமைகள் பாதுகாக்கப்படும் என்று ஆரம்பத்தில் சொல்லப்படும் உறுதிமொழிகளைக் கேட்டு யாரும் ஏமாந்து போக வேண்டாம்.

### விலகிக் கொள்வது சுலபமல்ல

கூட்டுமுறைப் பண்ணைகள் எப்போது அமுலுக்கு வந்தாலும் உழைக்கும் விவசாயிகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் அளிக்கப்படுமேயன்றி நிலத்தைக் கொடுத்த பட்டாதாரர்களுக்கு அல்ல. அங்கத்தினர்கள் பண்ணைக்காக ஏதாவது சேவைகள் புரிந்தாலும், உழைப்புக்குத் தக்கபடியே அதன் மதிப்பீடு செய்யப்படுமே தவிர நிலத்தின் பரப்பை யொட்டி இருக்காது. மேலும், ஒரு பண்ணை ஆரம்பிக்கப்பட்டதும், அதிலிருந்து எந்த அங்கத்தினரும் விலகிக் கொள்ளுவது சுலபமல்ல. ஏனெனில் ஊரில் மற்றவர்களின் நிலங்களெல்லாம் பண்ணையில் அகப்பட்டபோது, அதிலிருந்து விலகி விவசாயம் நடத்துபவனுக்கு எந்தவிதச் சலுகையும்

அளிக்கப்படாமல் நிர்ப்பந்தங்களுக்குள்ளாக வேண்டிவரும். ஸோவியத் ருஷ்ய அனுபவத்திலிருந்து இந்த உண்மை நன்கு புலப்பட்டது. இங்கும் அப்படித்தான் நிகழும்.

ஜவாஹர்லால்ஜியும் அவருடைய இரண்டாவது ஆத்மாவாக இருக்கும் ஸ்ரீமந் நாராயணனும் இந்த இறுதி லட்சியமான கூட்டுப் பண்ணையில் முதலில் சேர்ந்துவிட்டால் அதிலிருந்து ஐந்து வருஷங்களுக்கோ, பத்து வருஷங்களுக்கோ அல்லது குறிப்பிட்ட காலத்துக்கு அதிலிருந்து விலகிக்கொள்ள முடியாது என்று சொல்லியிருக்கின்றனர். இக்கால வரம்புக்குப் பின் விவசாயி விலகினாலும், முதலில் கூட்டுப் பண்ணையில் சேர்ந்துவிட்ட அவருடைய சொந்த நிலங்கள் திரும்பக் கொடுத்துவிடப்படும் என்ற நிச்சயமில்லை. நிலத்துக்குப் பதிலாக அப்போதுள்ள மார்க்கெட் மதிப்புப்படி ஈடாகப் பணமாவது கொடுக்கப்படும் என்ற நிச்சயமுமில்லை. இந்த லட்சணத்தில் சுதந்திரமும் சுயேச்சையும் எங்கே இருக்கின்றன?

## அடிமை வாழ்வு வந்தே தீரும்

கூட்டுப்பண்ணையில் சேர வேண்டுமென்று எந்தவிவசாயியும்நிர்ப்பந்தப்படுத்தப்படமாட்டான் என்று பேச்சளவில் சொல்லிவிடலாம். ஆனால் நடைமுறையில் சாத்தியமல்ல. அரசாங்க யந்திரம் முழுதும் கூட்டுமுறை விவசாயத்தை ஆதரித்து அதை உருவாக்குவதிலேயே கடன், மான்யம், சலுகைகள் முதலியவை அளிக்கப்பட்டு வரும்போது ஒரு சில பட்டாதார்கள் மட்டும் தங்கள் சொந்த முயற்சியால் அதிகார வர்க்கத்தின் எதிர்ப்பைச் சமாளித்துச் செயல் புரிவது சுலபமல்ல. அப்படிப்பட்ட அவர்களுக்குக் கூட்டுப்பண்ணையிலிருந்து கிடைக்கும் மகசூலைக் காட்டிலும் அதிகம் கண்டு முதல் ஆனாலும் அதைப் பற்றி அரசாங்கத்தின் பிரசார வேகத்தில் ஒருவரும் கவனிக்கமாட்டார்கள். ஆகவே ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் தனிப்பட்ட பட்டாதாரர்களும் கும்பலுடன் சேர்ந்து எல்லோரும் அனுபவிக்கும் அடிமை வாழ்வைத் தாங்களும் அனுபவிக்கத் தயாராவார்கள்.

கூட்டுறவுப் பண்ணை நிர்வாகம் விவசாயி அங்கத்தினர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களால், ஜனநாயக முறையிலேயே நடைபெறுமென்றும் அதிகாரிகளின் தலையீடு இருக்காதென்றும் சொல்லப்படுகிறது. இந்தக் கூற்றை எவ்வாறு நம்புவது? நம்முடைய ஐம்பதாண்டு அனுபவத்தில் கூட்டுறவுச் சங்கங்கள் பதிவு செய்தல், செயல் முறைத் திட்டங்கள், நிர்வாகம், சர்க்கார் மேற்பார்வை, தணிக்கை முறை முதலியவற்றில் கண்டதையும் நாடு சுதந்திரம் பெற்ற பின் சர்க்கார் கட்டுப்பாடு, இலஞ்ச ஊழல்கள், கட்சிச் சண்டைகள், பிளவுகள் முதலிய லட்சணங்களைக் கூட்டுறவுச் சங்க நடவடிக்கைகளில் பார்த்ததையும் கவனித்தால் இனிமேல் வரப்போகும் கூட்டுறவுப் பண்ணைகளிலும் மந்திரிகள், மந்திரிகளைச் சேர்ந்தவர்கள், அதிகார வர்க்கத்தினர், அவர்களுக்கு வேண்டியவர்கள். இப்படிப் பலருடைய தலையீடு இருக்காது என்று என்ன நிச்சயம்? மேற்கு நாடுகளில் ஜனநாயக முறை இயங்குகிறது என்பது உண்மையே. நீதிமன்றங்களுக்கும் கூட்டுறவுச் சங்கங்கள் மீது ஆதிக்கம் உண்டு. நம் நாட்டில் நம்முடைய சம்பிரதாயங்கள் மாறுபட்டவையாக இருக்கின்றன. நமது சர்க்கார்களும் கூட்டுறவுச் சங்க அரசியல்களிலிருந்து விடுபடுவதை விரும்புவதில்லையே. சமூக நலத் திட்ட இலாக்காவும், விவசாய உணவு இலாக்காக்களும் மத்திய சர்க்கார் அந்தஸ்திலும் ராஜ்ய சர்க்காரின் அந்தஸ்திலும் அதிகார வர்க்கத்தை மேலிருந்து 'அடித்தளம் வரையிலும் விஸ்தரிப்பதிலேயேதான் கண்ணாயிருக்கின்றனர். நமது ஆளும் கட்சியினரும் இதை ஒரு கட்சிப் பிரச்னையாகவே மாற்றிவிட்டனர். இலாக்கா சிப்பந்திகள் விஸ்தரிப்பு போதாதென்று, கட்சித் தலைவர்கள், பிரசாரகர்கள் கிராம சேவக சேவிகைகள், குட்டித் தலைவர்கள். இப்படிப் பல பேர்கள் இப்போது பயிற்சி பெற்றுக் கிராமங்களில் புகுந்து கூட்டுறவு முறைக்குப் புது ஊக்கமளித்து நாட்டை முன்னேற்றத் திட்டமிட்டிருக்கின்றனரே. இவையனைத்தும் நம் கண் முன்னே நிகழும் போது, சுதந்திரமாகவும், சுயேச்சையுடனும்தான் கூட்டுப்பண்ணை இயங்குமென்றால் எப்படி நம்பிக்கை பிறக்கும்?

## சச்சரவுகளுக்கு இடம் உண்டு

மேலும், கூட்டுப் பண்ணையில் சண்டை சச்சரவுகளுக்கு அமோகமாக வாய்ப்புகள் இருக்கின்றன. சூபரவைசருக்கும் பட்டாதார் அங்கத்தினர்களுக்கும் அல்லது சூபர்வைசர்களுக்கும் நிர்வாகக் கமிட்டிக்கும் அல்லது சூபர்வைசர்களுக்கும் உழவர்களுக்கும், அடிக்கடி கருத்து வேற்றுமைகள் ஏற்படும். தற்போது நாட்டின் பல பாகங்களில் செயலாற்றி வரும் கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகளைக் கவனித்தால், கூட்டுமுறை விவசாயப் பண்ணைகளில் தேர்தல் சண்டைகள் நிதி நிர்வாகத் தவறுகள், பொறுப்பற்ற மேற்பார்வை, தொழிலாளிகளுடன் சண்டைகள், சாகுபடித் திட்டங்களில் குறைபாடுகள் முதலிய பலவித தொல்லைகளும் மனஸ்தாபங்களும் மலிந்து கிடப்பதைக் காணலாம். ஒவ்வொரு சச்சரவையும் தீர்த்துவைக்க அதிகாரிகளின் தலையீடு அவசியமாகும். அதைத் தொடர்ந்து 'கட்சிப் பிரிவினைகள், ஜாதிச் சண்டைகள், பட்சபாதங்கள் இப்படி விரும்பத்தகாத பலவித விளைவுகள் ஏற்படும். எல்லாவற்றுக்கும் மேலாக இப்போது காசில்லாமல் கிடைத்துக் கொண்டிருக்கும் மேற்பார்வை நிர்வாகம் முதலிய இனங்களுக்குப் பெரிய பண்ணைகளாகிய கூட்டுப் பண்ணையில் தனியாகப் பணம் கொடுக்க வேண்டும். இதைப் பொதுவாக மேற்பார்வைச் செலவு (Overhead charges) எனலாம். ஆகையால் கூட்டுறவு முறையிலும் தனி விவசாயிகளின் உற்சாகம் குன்றி உற்பத்தி குறைவதுடன், உற்பத்திச் செலவும் உயர்ந்து சிக்கல்களும் சச்சரவுகளும் பிரச்னைகளும் மலிந்துவிடும் என்று நிச்சயமாக எதிர்பார்க்கலாம்.

## புது வர்க்கம் உருவாகும்

மேலும் இதனால் ஒரு புது வர்க்கமே சிருஷ்டிக்கப்பட்டு விடும். அரசியல் கட்சி

அதிகாரிகள், சூபர்வைசர்கள், நிர்வாகஸ்தர்கள், ஆலோசகர்கள், திட்டம் வகுப்பவர்கள், கணக்கர்கள், தணிக்கையாளர்கள் — இப்படிப் பலர் சேர்ந்த ஒரு இனம் உற்பத்தியாகிப் பழங்கால ஜமீன்தாரி முறையில் இருந்த கெடுதல்களைக் காட்டிலும் அதிகமான இன்னல்களை விளைவிக்கும்.

உதாரணமாக, 3000 கூட்டுறவுப் பண்ணைகளை நிர்வகிக்க 400 இன்ஸ்பெக்டர்களும், 3000 பண்ணை மானேஜர்களும் குறைந்த பட்சமாகத் தேவைப்படுவார்கள் என்று மத்திய அரசாங்கம் ஒரு கணக்குக் கொடுத்திருக்கிறது. அதாவது ஒவ்வொரு பண்ணைக்கு ஒரு மானேஜரும், எட்டுப் பண்ணைகளுக்கு ஒரு இன்ஸ்பெக்டரும் அவசியம் என்ற அடிப்படையில் இப்படிக் கணக்கிடப்பட்டிருக்கிறது. அவர்கள் எல்லோருமே காரியாலய வேலை மனப்பான்மையை அகற்றுவதற்காகப் பண்ணையிலும் "சிறிது வேலை" செய்வார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இப்படிப் புதிதாக சிருஷ்டி செய்யப்பட்ட அதிகார வர்க்கத்துக்காகப் பிடிக்கும் செலவு யார் தலைமீது விடியப் போகிறது? அந்தந்தப் பண்ணைகளின் மீது தானே? இந்தச் செலவு இல்லாமலேயே இதைக் காட்டிலும் சீரான முறையில் மேற்பார்வை நிர்வாகம் இப்போது நடைபெற்றுக் கொண்டுதானிருக்கிறது.

ஆகையினால் இப்போதுள்ள விவசாயிகளின் பொருளாதார நிலையைக் குலைக்க எவ்வித நியாயமும் இல்லை. அப்படிச் செய்தால் இது வரை அவர்கள் செய்துள்ள மகத்தான நற்பணியைப் புறக்கணிப்பதாகும்.

## என்ன சாதிக்கப் போகிறார்கள் ?

கூட்டு விவசாய முறையினால் நமது திட்டக் குழுவினர் என்ன சாதிக்கப் போகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். உற்பத்தியைப் பெருக்குவதற்கு அல்ல; உற்பத்திப்பெருக்கு ஏற்படாதென்பது அனுபவத்தில் கண்ட உண்மை. கிராம மக்களுக்கு அதிக வேலை வாய்ப்புகள் கிடைக்கும் என்பதற்காகவும் அல்ல; ஏனென்றால் பண்ணையின் அளவு பெருகப்பெருகப் பண்ணையில் வேலை செய்பவர்களின் எண்ணிக்கை குறையவே செய்யும். தனி விவசாயிகளின் வருமானத்தை அதிகப்படுத்தி அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் அல்ல, ஏனெனில் அதிக உற்பத்தியாகும் என்பதே சந்தேகம். தனி விவசாயிகளின் ஊக்கமும் உற்சாகமும் அதிகரிக்கும் என்பதற்காகவும் அல்ல, ஏனெனில் சொத்துரிமை சந்தேகமாயிருக்கும்போது ஊக்கம் எப்படிப் பிறக்கும்? யந்திர சாதனம் மூலம் சீரிய முறை விவசாயத்தை மேற்கொள்ளலாம் என்பதற்காகவும் அல்ல. ஏனென்றால் ஜனத்தொகை அதிகமாயுள்ள பின்தங்கிய நாடுகளில் யந்திர சாதனங்களைக் கண்டபடி உபயோகிக்க இயலாது என்று ஜவாஹர்லால்ஜியே சொல்லியிருக்கிறார். சிக்கனமாகப் பயிர்த்தொழில் நடத்தலாம் என்பதற்காகவும் அல்ல; ஏனென்றால் அதிகாரவர்க்கம் அதிகரித்தால் சிக்கனத்தை எதிர்பார்க்க முடியாது. உழவர்களுக்குத் தட்டு ஏற்பட்டது. அதைச் சமாளிக்க இந்த ஏற்பாடு என்று சொல்லுவதற்குமில்லை, ஏனெனில் நம் உழவர்களுக்குப் போதிய வேலை இல்லை என்பதுதானே நமது குறை? இப்படி நிலைமை இருக்கும்போது இதைப் பற்றி ஏன் இவ்வளவு பிடிவாதம்?

## உண்மை நோக்கம்

இதற்குக் காரணம் அரசியல். நாட்டின் விவசாயப் பொருள்களின் உற்பத்தி முழுவதையும் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து, அதை ஆதாரமாக வைத்துத் தொழில் வளர்ச்சியைத் துரிதப்படுத்த வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் உண்மையான நோக்கம். உணவுப் பண்டங்களுக்கும் விளை பொருள்களுக்கும் விவசாயிகளுக்குக் கட்டுபடியாகக் கூடிய விலை நிர்ணயிக்காமல், குறைந்த விலையை நிலைநாட்டி, நாட்டிலுள்ள 20 கோடி சுதந்திர விவசாயிகளை வயிற்றில் அடித்து, உணவுப் பண்டங்களின் விலையைச் சமநிலையில் வைத்து விட்டால், தொழிற்துறையில் கிளர்ச்சிகளைத் தவிர்த்துவிட முடியும். அதனால் தொழில் அபிவிருத்தி வேகமுறும். இதற்கு ஐந்து அல்லது பத்து லட்சம் கூட்டுப் பண்ணையில் 20 கோடி மக்களை அடைத்து அவர்களைக் கண்காணிக்க மானேஜர்களையும் சூபர்வைஸர்களையும் சர்க்கார் ஆதரவில் நியமித்து விட்டால், பாரதத்தில் விவசாயவர்க்கமே சர்க்கார் ஆதிக்கத்தின் கீழ் வந்து விடும். இந்த முறையைக் கையாண்டுதான் கம்யூனிஸ்டு நாடுகள் தொழில் துறையில் வேகமாக முன்னேறி இருக்கின்றன. அதேமுறையைத்தான் நம் நாட்டிலும் ஆளும் கட்சியினர் கையாளப் பார்க்கின்றனர். நமது ஆட்சியாளர்களின் திட்டங்களையும், கருத்துக்களையும் நடவடிக்கைகளையும் ஒரு வருஷகாலம் நெருங்கியிருந்து கவனித்த ஆஸ்திரேலியப் பேராசிரியர் டாக்டர் எச். எ. வோல்ட்ஸோன் (Dr. H. A. Woltsohn) இதுதான் நமது அரசாங்கத்தின் உட்கருத்து என்பதை எடுத்துக் காட்டியுள்ளார். (ஹிந்து 28-6-59 இதழில் இது பற்றிய விவரம் வெளிவந்துள்ளது). அரசாங்க வர்த்தகத்தின் நோக்கமும் இதுதான். வர்த்தகத்தைச் சர்க்கார் கையில் ஏகபோக உரிமையுடன் வைத்துக்கொண்டு வர்த்தக சமூகத்தினரையும், கூட்டுப் பண்ணை மூலம் நாட்டின் விவசாய மக்கள் சமூகத்தையும் தங்கள் பிடியில் இறுக்கிக்கொள்ளவே ஏற்பட்டது இவ்விரண்டு முறைகளும். இவ்விரண்டும் நமது ஆளும் கட்சியினர் கனவு காண்பதுபோல் நிறைவேறி விட்டால் விவசாயி மக்களும் வர்த்தக சமூகத்தினரும் நேராக நரகத்துக்குச் சென்று படுகுழியில் விழுவதற்கு ராஜபாட்டை திறந்துவிட்டது போலத்தான். இதுதான் நம் மக்களை நோக்கி நிற்கும் எதிர்காலம். இந்த மாதிரி இருட்டு சூழ்ந்த எதிர் காலத்தையா நம் மக்கள் விரும்புகின்றனர்? ஒருபோதும் விரும்பமாட்டார்கள் என்றே நான் நம்புகிறேன். ருஷ்ய முறையைப் பின்பற்றியுள்ள இந்தக் கூட்டுப் பண்ணைக்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்க விவசாயி மக்கள் தைரியமாக முன்வர வேண்டும்.

[பிரதமர் நேருஜியின் சீற்றத்துக்கு ஆளானவர்களில் திரு மினு மஸானியும் ஒருவர். அவர் சொல்லும் கருத்துக்களைப் பொருட்படுத்த வேண்டாம் என்று நேருஜி சொல்லியதற்காகவேனும் அவர் கட்டுரையைப் படிக்க வேண்டும். கூட்டு விவசாயம் கூடாது என்பதற்கு அவர் காட்டும் காரணங்கள் மறுக்க முடியாதவை.
ஆசிரியர்]

# கூட்டுமுறை விவசாயத்தின் அபாயங்கள்

எம். ஆர். மஸானி, லோக் சபை அங்கத்தினர்

உண்மைக் கூட்டுறவு பல விதங்களில் தோற்றமளிக்கும். கூட்டுறவுக் கடன்; கூட்டுறவு சப்ளை; கூட்டுறவு விற்பனை; கூட்டுறவு சேமிப்பு; கூட்டுறவு சிக்கனம் — இப்படிப் பல வடிவங்களில் கூட்டுறவு இயக்கம் செயல்படும். இதன் மூலம் ஒரு ரயத்து அல்லது பட்டாதார் தனக்குத் தேவையான நல்ல விதை, ரசாயன உரம் பெறலாம்; கடன் எழுப்பிக் கொள்ளலாம்; மற்றவர்களிடமிருந்து டிராக்டர் கூட அவசியமானால் பெற்றுக் கொள்ளலாம். இக் காரியங்களைத் தனித்தும் செய்து கொள்ளக் கூடும். அல்லது ஒரு சங்கமே எல்லாவித வேலைகளையும் செய்யலாம். இதற்கு அடிப்படையாக இருப்பது விவசாயியினுடைய சுதந்திரத் தன்மையும் சொத்து உடைமையும் தன்னுடைய நிலத்தைத் தான் பயிரிட்டு ஜீவிக்கும் சுதந்திர விவசாயிகளுக்குள் தான் கூட்டுறவு நிகழும். அடிமைகளிடம் கூட்டுறவு நடைபெறாது. ''இது என்னுடைய நிலம். இதை நானும் என் குடும்பத்தினரும் பயிர் செய்கிறோம்; இதிலிருந்து கிடைக்கும் மகசூலைப் பெருக்க, என்னைப் போலவே இருக்கும் மற்ற விவசாயிகளுடன் கூட்டுறவு செய்ய நான் முன் வருகிறேன்'' என்று சொல்லக் கூடிய நிலையில் இருப்பவர்கள் தான் கூட்டுமுறையை மேற்கொள்ளத் தகுந்தவர்கள்.

கூட்டுறவில் வேறொரு முறை உண்டு. பெயரளவில் அதையும் கூட்டுறவு என்று சொன்னாலும் உண்மையில் அது கூட்டுறவே அல்ல. அதுதான் ருஷ்ய-சீன மோஸ்தர் கூட்டுப் பண்ணை முறை. சீன முறையைப் பற்றி மார்ஷல் டிட்டோ சொல்லியபடி, 'இந்தக் கூட்டுப் பண்ணைக்கும், மார்க்ஸிஸம் அல்லது சோஷலிஸத்துக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை.' குடிகளிடமிருந்தும் விவசாயிகளிடமிருந்தும் முடிந்தவரையில் உபரி உழைப்பின் மூலமோ, உபரி தானியங்கள் மூலமோ கட்சியின் பலத்தைப் பெருக்கிக் கொள்ள ஏற்பட்டது இந்த முறை. இம்முறையின் கீழ் விவசாய மக்கள் அகப்பட்டுக் கொண்டு சீனாவிலும் ருஷ்யாவிலும் தத்தளித்துக் கொண்டிருக்கின்றனர். சீனாவில் யுத்தத்தின் விளைவாக, சமூக அமைப்பே அழிந்துபோய் விட்டது. கம்யூனிஸ்டு கட்சி இந்நிலையில் சமூகப் புனரமைப்பைத் தனக்கு எப்படித் திருத்தி அமைத்துக் கொண்டால் நல்லதோ அப்படி மாற்றி அமைத்துக் கொண்டு விட்டது.

## கூட்டுப் பண்ணையா, கூட்டுறவுப் பண்ணையா ?

இந்த இரண்டு முறைகளுக்குமுள்ள வித்தியாசத்தை மனத்தில் கொண்டு நாகபுரித் தீர்மானக் கூட்டுறவு முறை விவசாயத்தை ஆராய்ந்து பார்க்க வேண்டும். இரண்டுக்குமுள்ள வித்தியாசம் இதுதான். ஒரு விவசாயியின் நிலத்தை அவனிடமே விட்டு வைத்து அதன் எல்லைகளைக் குலைக்காமல், தன்னுடைய சொந்த உழைப்பினாலோ, தனது குடும்பத்தினர்களுடைய உழைப்பினாலோ அல்லது கூலிக்கு அமர்த்தப்பட்ட மற்றவர்கள் உழைப்பினாலோ அந் நிலத்தை அவனே பயிரிடும் நிலைமையில் இருந்தால் அவன்தான் உண்மையான கூட்டுறவின் அங்கத்தினனாவான். மாறாக, அவனுடைய நிலத்தின் எல்லைகளை யெல்லாம் அப்புறப்படுத்தி, வரப்புகளை அகற்றி, எல்லா நிலங்களையும் ஒரே சதுரமாகச் செய்து ஒரு பெரிய பண்ணையை உண்டாக்கி, அதைக் கூட்டுறவுப் பண்ணை என்று பெயரிட்டு அழைத்தால் மேற்பார்வைக்கு முன்போலவேதான் இருக்கும். எவ்வித மாறுதலும் இல்லை. இதுவும் கூட்டு முறை விவசாயம் என்றே சொல்லலாம். ஆனால் உண்மையில் கூட்டுறவு விவசாயம் என்ற பெயர் இந்த முறைக்குப் பொருந்தாது. முதல் சொன்னதற்குக் கூட்டுறவு என்ற பெயர் பொருந்தும்; இரண்டாவதாகச் சொன்னதற்கு இந்தப் பெயர் பொருந்தாது. இதற்குப் பெயர் கூற வேண்டுமானால் சமுதாயப் பண்ணை எனலாம். கூட்டுப்பண்ணை என்றும் சொல்லப்படுகிறது. இதுதான் இரண்டுக்குமுள்ள வித்தியாசம். இந்த வித்தியாசத்தைக் கவனத்தில் வைத்து நாகபுரித் தீர்மானத்தைப் பரிசீலனை செய்ய வேண்டும்.

''வருங்கால விவசாயம் கூட்டுப் பண்ணை முறையாகத்தான் இருக்க வேண்டும். இதன்படி நிலங்களெல்லாம் கூட்டுப் பயிருக்காக ஒன்று சேர்க்கப்படும்; பட்டாதாரர்களுக்குச் சொந்தக்காரர்களென்னும் சொத்துரிமை இருக்கும்; மகசூலில் அவர்கள் நிலப்பரப்புக்குத் தக்கபடி பங்கு கிடைக்கும்; மேலும் நிலத்தில் வேலை செய்பவர்கள், நிலமுள்ளவர்களானாலும் நிலமில்லாதவர்களானாலும், தங்கள் உழைப்புக்குத் தகுந்தபடி வருமானத்தில் பங்கு கொள்வார்கள்.

''கூட்டுப் பண்ணை ஆரம்பிப்பதற்கு முன் முதல் நடவடிக்கையாக, நாடு முழுவதிலும் சேவா கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்பித்து அமைக்கப்பட வேண்டும். இந்தக் கட்ட நடவடிக்கை மூன்று ஆண்டுகளுக்குள் முடிந்து விட வேண்டும். இதற்குள் எங்கெல்லாம் சாத்தியமோ, எங்கெல்லாம் விவசாயிகள் சம்மதிக்கின்றனரோ அங்கெல்லாம் கூட்டு விவசாயம் ஆரம்பிக்கலாம்.''—இது நாகபுரித் தீர்மான வாசகத்தின் ஒரு பகுதி.

## காகிதத்தில்தான் உரிமை !

இதன்படி பார்த்தால் சொத்துரிமைக்கே அர்த்தமில்லாமல் போய்விடுகிறது. நிலத்தின்

வரம்புகள் அகற்றப்பட்ட பின்னர். முன்னம் ஆறு, எட்டு, பத்து அல்லது இருபது சிறு பண்ணைகளாக இருந்த பரப்பு ஓர் பண்ணையாக மாறி டிராக்டர்களும் யந்திரங்களும் தடங்கலின்றி இப்போது ஓடத் தொடங்கும் போது, சொத்துடைமை என்பது பட்டாதாரர்களுக்குக் கொடுக்கப்படும் ஒரு துண்டுக்காகிதம் தானே யொழிய வேறல்ல. "நீங்கள் முன்பு குறிப்பிட்ட அளவு உடைமையுள்ளவர்களாக இருந்தீர்கள். இப்போதும் உங்கள் சொத்து அப்படியேதான் இருக்கிறது" என்று அவனுக்கு ஆறுதல் சொல்லுவதற்காக வழங்கப்படும் சீட்டு இந்த உரிமைப் பத்திரம். அப்படித்தான் சீனவிலும் இதர கம்யூனிஸ்டு நாடுகளிலும் முதலில் நடந்தது. கொஞ்ச நாட்கள் சென்றதும், 'நிலம் வைத்துக் கொண்டிருப்பவன் என்பதற்காக வேலை செய்பவனைக் காட்டிலும் அதிக சொத்துடையவனுக்குப் பண்ணையில் வேலை செய்யாவிட்டாலும் ஏன் பங்கு கொடுக்க வேண்டும்?" என்ற கேள்வி கேட்கப்படும். இது நியாயமே.

ஏனெனில் வேலையொன்றும் செய்யாத சொந்தக்காரன் உண்மையில் சொந்தக்காரனே அல்ல. அவன் சொத்து அவனிடமிருந்து அவனிடம் சொல்லாமலே பறிக்கப்பட்டுவிட்டது. காகிதத்தில் மட்டுமே அங்கீகரிக்கப்பட்ட உரிமையை மற்றொரு அரசாங்கம் "இது அக்கிரமமானது, அநீதியுடையது" என்று கூறி அகற்றிவிட அதிக காலம் பிடிக்காது. ஏனெனில் எந்த நிமிஷத்தில் தன்னுடைய நிலத்தை இழந்து விட்டானோ, அந்த நிமிஷத்தில் சமூகத்துக்கு அவனால் கிடைக்கும் உபயோகம் முடிந்து விட்டது.



திரு எம். ஆர். மஸானி

## சீனமுறையின் நகல்

இதை நாகபுரித் தீர்மானம் நிறைவேற்றியவர்கள் உணர்ந்தார்களா இல்லையா என்பது சந்தேகம். எப்படியும் இதில் உருவாக்கப்பட்டுள்ள கூட்டுறவுப் பண்ணை-இதைச் சமுதாயப் பண்ணை என்று வேண்டுமானாலும் கூறலாம்—ருஷ்ய-சீன முறையைப் பின்பற்றியதே தவிர, உண்மையான கூட்டுறவு முறை அல்ல. ஆகவே ஜனநாயகத்தில் உண்மைப் பற்றுள்ள ஒவ்வொருவனும் இதை எதிர்க்க வேண்டும்.

இந்தக் கூட்டுப் பண்ணை விவசாயம் அவசியமானதுதான் என்பதற்குச் சில காரணங்கள் காட்டப்படுகின்றன. அவற்றைச் சற்றே கவனிப்போம். முதலாவதாக இதன் மூலம் உற்பத்தி அதிகரிக்கும் என்று சொல்லப்படுகிறது. ஒவ்வொரு நாட்டின் அனுபவமும் இதற்குமாறாகவே இருக்கும் போது நமது அரசாங்கம் மட்டும் கிளிப் பிள்ளையைப் போலப் பழைய தவறான பாட்டைப் பாடிக் கொண்டிருப்பது வியப்பை யூட்டுகிறது. கம்யூனிஸ்ட் நாடாயினும் சரி, இதர நாடாயினும் சரி, இந்த முறையினால் உற்பத்தி பெருகவில்லை என்பதே எல்லாரும் கண்டு கொண்ட முடிவு.

## தவறான எண்ணம்

பெரிய பண்ணைகளாக இருந்தால் உற்பத்தி பெருகும் என்ற எண்ணமே தவறு. கோதுமை நெல் இவ்விரண்டு தானியங்களை மட்டும் கவனிப்போம். உலகத்திலேயே மிகவும் பெரிய பண்ணைகள் உள்ள நாடுகள் ஐக்கிய அமெரிக்காவும் ஸோவியத் ருஷ்யாவும். இந்த இரண்டு நாடுகளிலும் குறைந்த அளவு கோதுமைதான் விளைகின்றது. அமெரிக்காவில் இரண்டே கால் ஏக்கர் கொண்ட ஹெக்டாருக்கு 12·2 குவிண்டால்தான் சராசரி உற்பத்தியாகிறது.* ருஷ்யாவில் இதே விஸ்தீரணமுள்ள நிலப் பரப்புக்கு 9·3 குவிண்டால்தான் மகசூலாகிறது. இங்கிலாந்தில் சின்னஞ் சிறு பண்ணைகள் தாம் இருக்கின்றன. அங்கே ஒரு ஹெக்டாருக்கு 28·5 குவிண்டால் உற்பத்தியாகிறது. டென்மார்க்கில் பண்ணைகளின் பரப்பு மிகவும் சிறியது. அங்கே ஒரு ஹெக்டாருக்கு 34·4 குவிண்டால் உற்பத்தியாகிறது. ஜப்பானில் ஒரு பண்ணையின் சராசரி விஸ்தீரணம் இந்தியாவிலுள்ளதைவிடக் குறைவு. அங்கே உற்பத்தி 22·6 குவிண்டால். அதாவது அமெரிக்க உற்பத்தியை விட இரு மடங்கு, ருஷ்யா உற்பத்தியை விட இரண்டரை மடங்கு கிடைக்கிறது.

அரிசி உற்பத்தியிலும் இதே போலத்தான். அமெரிக்கா 28·3 குவிண்டாலும் ருஷ்யா 25 குவிண்டாலும் உற்பத்தி செய்கின்றன. சீன

---

*குறிப்பு: குவிண்டால் சில நாடுகளில் 100 பவுண்டு எடையையும், சில நாடுகளில் 112 பவுண்டு எடையையும் குறிக்கும். ஒரு ஹெக்டாருக்கு 12·2 குவிண்டால் மகசூல் என்பது ஏக்கராவுக்கு 485 பவுண்டு கணக்காகும். 112 பவுண்டு கணக்குப்படி பார்த்தால் 543 பவுண்டு ஆகும். ருஷ்யாவில் கண்டு முதலாகும் 9·3 குவிண்டாலை ஏக்கரா கணக்கில் சொன்னால் 376 அல்லது 422 பவுண்டுகள் ஆகும்.

ளத் சிறு பண்ணைகள் உள்ள ஜப்பான் சராசரி 48·5 குவிண்டால் உற்பத்தி செய்கிறது.

இந்தியாவில் இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம் கரும்புச் சாகுபடி சம்பந்தமாக நடத்திய ஒரு ஆராய்ச்சியிலிருந்து சில உண்மைகள் தெரிய வந்தன. உழவு மாடுகளைக் கொண்டு உழுது பயிரிடப்பட்ட நிலத்திலிருந்து 410 மணங்கு கரும்பு கிடைக்க டிராக்டரைக் கொண்டு ஆறு அங்குல ஆழம் உழுது பயிரிட்ட நிலத்திலிருந்து 361·5 மணங்கு கரும்பு மட்டுமே கிடைத்ததாம்! மற்றொரு நிலத்தில் 10 அங்குல ஆழம் உழுது பயிர் செய்ததில் 356 மணங்கு கரும்புதான் கிடைத்ததாம். இதிலிருந்து உழவு மாடுகள் கொண்டு செய்யப்படும் விவசாயம் அதிக பலனைத் தருகிறதென்றும், டிராக்டர் விவசாயம் இன்னும் குறைவான பலனையே அளிக்கிறதென்றும் உணரலாம்.

## அனுபவம் ஒத்துவரவில்லை

கூட்டுப் பண்ணை விவசாயத்தை அமல் நடத்திய நாடுகளிலெல்லாம் இம் முறை தோல்வியிலேயே முடிந்தது. ருஷ்யாவில் ஒரு ஏக்கராவுக்கு ஒரு மனிதனுக்குக் காணும் உற்பத்தியின் அளவு (per capita production) உலகத்திலேயே மற்றத் தேசங்களில் காணும் உற்பத்தியைக் காட்டிலும் குறைவு. யூகோஸ்லேவியா கூட்டுமுறை விவசாயத்தை 1948-ல் மேற்கொண்டது. 1957-ல் இது திருப்திகரமாக இல்லை என்று கைவிட்டு விட்டது. சட்டமூலம் கூட்டுறவுப் பண்ணை ரத்து செய்யப்பட்டது என்று யூகோஸ்லேவிய அரசாங்கம் அறிவித்து விட்டது. அங்கே விவசாயிகளின் ஊக்கம் குன்றி விட்டதாகவும் உற்பத்தி குறைந்து விட்டதாகவும் சொல்லப்படுகிறது. ருஷ்யாவின் சார்பு நாடு என்று பெயர் பெற்ற போலந்திலும் இரண்டு, மூன்று வருஷங்கள் பரீக்ஷை செய்து பார்த்துக் கூட்டுப் பண்ணைகள் கலைக்கப் பட்டன. மோட்டார் டிராக்டர் ஸ்தலங்கள் மூடப்பட்டு விட்டன. டிராக்டர்களும் தனிப்பட்ட விவசாயிகளுக்கு விற்கப்பட்டு விட்டன. கூட்டுறவுப் பண்ணைகளுக்காக ஆரம்பத்தில் அளிக்கப்பட்ட வரிச் சலுகைகளும் கோமுல்கா அரசாங்கத்தால் ரத்து செய்யப்பட்டு விட்டன. தனி விவசாயிகளுக்கும் கூட்டுறவு விவசாயத்துக்கும் போட்டியிருக்க வேண்டுமென்று போலந்து பிரதமர் கோமுல்கா விரும்பினார்.

உலக அனுபவம் இவ்வாறு இருக்க நமது அரசாங்கமும் காங்கிரசுக் கட்சியும் விவசாயிகளுக்கு உண்மையில் தேவைப்படும் பாசன வசதி விதை விவசாயக் கருவிகள் உரம் பயிர் முறை முதலியவற்றில் கவனம் செலுத்தாது வறட்டுத் தத்துவத்தைக் கட்டிக் கொண்டு அனாவசியமான விஷயங்களில் காலத்தையும் பணத்தையும் விரயம் செய்து வருவது வருந்தத் தக்கதே.

## வேலை வாய்ப்புகள் குறையும்

கூட்டுறவு விவசாய முறையினால் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கக் கூடும் என்று சொல்லப்படுகிறது. இது தவறு. கூட்டுப் பண்ணையினால் வேலை வாய்ப்புகள் குறையத்தான் செய்யும். நிலங்களை ஒன்றுசேர்ப்பதானாலும், யந்திரச் சாகுபடி முறையைப் புகுத்துவதனாலும் மனித உழைப்புக்குத் தேவையில்லாமல் தான் போகும். மற்றெந்த விளைவு ஏற்பட்டாலும் ஏற்படாவிட்டாலும் கூட்டு முறை விவசாயத்தினால் கிராமங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கும் என்பது நிச்சயம்.

வேலை வாய்ப்புகளை அதிகரிக்க மகாத்மா காந்தி சொல்லிய ஒரே வழிதான் உண்டு. அதாவது கிராமாந்தரங்களில் தொழில் ஸ்தாபனங்களை நிறுவுதல். மின்சார வசதியுடனோ அது இல்லாமலோ தொழிற்சாலைகளைக் கிராமங்களுக்கு எடுத்துச் செல்ல வேண்டும். அதுதான் அவர் சொன்னது. நான் சொல்லுவதும் அதுவே. சில பெரிய தொழிற்சாலைகள் அடர்ந்து செயல்படுவதைக் காட்டிலும் பல சிறிய தொழிற்சாலைகள் பரவலாக வியாபித்து சாதாரண மக்களும் மின்சாரக் கருவிகளின் துணை கொண்டு வேலை செய்யும் வாய்ப்புள்ளவர்களாக ஆக வேண்டும். நாம் எல்லோரையும்விடக் காந்திஜி பல தலைமுறைகள் முற்போக்குள்ளவர் என்பதே என் நம்பிக்கை.

## கூட்டாக சொத்தை அனுபவிப்பதா ?

முன்னேற்றமுள்ள சமூக அமைப்புக்குக் கூட்டு முறை விவசாயம் தான் ஒரு சின்னம் என்றும், உயர்தர சமூகத்தின் லக்ஷணம் என்றும் சோஷலிச சமுதாயத்துக்கு இது ஒரு முக்கியமான அம்சம் என்றும் சொல்லப்படுகிறது. இது உண்மையல்ல; உலகத்தில் சுதந்திரமான எந்தப் பகுதியிலும், ஜனநாயக சோஷலிசம் உலவும் எந்தத் தேசத்திலும் கூட்டு முறைகளில் சொத்துக்களை அனுபவிப்பதென்பது கிடையாது.

விருப்பத்துடனேதான் விவசாயிகள் கூட்டுப் பண்ணையில் சேருகின்றனர் என்று மற்றொரு வாதம் செய்யப்படுகிறது. இது விஷயத்தில் அபார அறிவும் இணையற்ற அனுபவமும் பெற்ற உத்தரப் பிரதேச மாஜி மந்திரியும் காங்கிரஸ் கட்சியின் ஒளிச்சுடராக இருப்பவருமான திரு சரண்சிங் இதுபற்றிக் குறிப்பிடுகிறார் :—" மனிதத் தன்மையின் போக்கே ஒரு மாதிரியானது. குடும்பத் தலைவன் மரணமடைந்து விட்டாலோ அல்லது இதர காரணங்களினாலோ குடும்பச் சொத்தைப் பராமரிக்க முடியவில்லையானாலும் உடன்பிறந்த சகோதரர்களிடையே பாகப் பிரிவினை ஏற்படுகிறது. மனித சுபாவம் இப்படியிருக்கும் போது, ஒரு சாதாரண குடும்பத் தலைவன் தனது சுயநலத்தை முற்றிலும் மறந்துவிட்டுத் தனது வாழ்க்கைக்கு முற்றிலும் புதியவர்களான சுமார் முந்நூறு கிராமஸ்தர்களுடன் ஒன்றிப் போய் இணைந்து செயல்புரிவான் என்று எதிர்பார்ப்பது வீண். நிலத் தகராறுகள் காரணமாகத் தாயாதிகளிடையே அடிதடி சண்டைகளும் கொலைகளும்கூட நடந்து வருவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டு விட்டது, அல்லது ஒரு சட்டம் அமுலுக்கு வந்து விட்டது என்பதற்காக மனித சுபாவம் ஒரே நாளில் மாறிப் போய், தங்களுக்கு நிலத்தின் மீதுள்ள ஆசையை விட்டுவிட்டு, கூட்டுப்

பண்ணையில் நிலத்தைச் சேர்க்க முன்வருவார்கள் என்று எதிர்பார்ப்பது தவறு. மனிதத் தன்மை அவ்வளவு விரைவில் மாறக் கூடியதல்ல. ஒரே ஒரு வழியால்தான் அம் மாதிரி மாற்றத்தைக் கொண்டு வர முடியும்—பலாத்காரத்திலும் நிர்ப்பந்த முறையிலும் தான்.'' இதில் பொதிந்துள்ள கருத்துக்கள் சிந்தனைக்கு உகந்தது.

## கிராம தானங்கள் விஷயம்

நமக்குத் தெரிந்த ஒரு உதாரணத்தின் மூலம் இதை விளக்கலாம். கிராம தானங்களைப் பற்றி எல்லோருக்கும் தெரியும். ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த கோராபுட் ஜில்லாவில் ஆச்சாரிய வினோபாவும் திரு ஜெயப்பிரகாச் நாராயணனும், அந்த ஊர் மக்களை நோக்கி, ''நிலங்களைப் பிரித்துக் கொடுக்கும்படி வற்புறுத்த வேண்டாம். இந்த முழு கிராமத்தையும் நீங்கள் கூட்டாகப் பயிரிட்டுக் கொள்ளுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார். ஆனால் ஒருவரும் முன்வரவில்லை. இது பயன் தரவில்லை என்பதை ஜெயப்பிரகாச் நாராயணனே ஒப்புக் கொண்டார். எந்த விவசாயியும் பொதுவாக நிலத்தைப் பயிரிட விரும்பவில்லை. தனக்கென்று ஒரு சிறிதளவேனும் வேண்டுமென்றுதான் அவன் விரும்புகிறான். அதுதான் மனித சுபாவம். நாம் எல்லோருமே நமக்கென்று தனியாகச் சிறிதளவாவது இருக்க வேண்டுமென்றுதான் விரும்புகிறோம். எதையும் மற்றவர்களுடன் சரி சமமாகப் பங்கு கொள்ள நாம் விரும்புவதில்லை. சுய நலத்தைப் பூராவாகக் கொன்றுவிட்டாலும் ஒவ்வொரு மனிதனுக்கும் சுயநலம் என்பது சிறிதளவாகிலும் உண்டு. ஆகவே, நாம் சாதாரண மனிதர்களுக்குத் தான் சட்டமியற்ற வேண்டுமே தவிர உலகத்தில் காணப்படாத தேவ மக்களுக்காக அல்ல.

## மனித உணர்ச்சி திட்டத்திற்கடங்காது

மேலும், சென்ற ஏப்ரல் மாதம் மத்திய அரசாங்கம் விடுத்த ஒரு அறிக்கையில் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட கால முடிவுக்குள் 3000 கூட்டுறவுப் பண்ணைகள் இயங்க வேண்டுமென்றும் 1958-59 ஆண்டு இறுதிக்குள் 600 கூட்டுப் பண்ணைகளாவது ஆரம்பிக்கப்பட வேண்டுமென்றும் வரம்பு கட்டப்பட்டது. சுயேச்சை கூட்டுறவும் லட்சிய வரம்பும் ஒன்றுக்கொன்று முரணானது. இரண்டும் கூடிச் செயல்முறையில் நிகழாது என்பதைப் போலந்து நாட்டுப் பிரதமர் கோமுல்கா எடுத்துக் காட்டியுள்ளார். ''உற்பத்தியாளர்களுக்குள் கூட்டுறவு முயற்சியின் அளவைத் திட்டத்துக்கு இணங்கி உருவாக்க முடியாது. ஏனெனில் சுயேச்சையுடன் கூட்டுறவு முறையில் புகுவதைத் திட்டமிடுவது மனித உணர்ச்சியைத் திட்டமிட்டு வளர்ப்பது போலாகும். இது சாத்தியமில்லாத காரியம்'' என்று அவர் சொன்னார்.

அது ஒருபுறம் இருக்கட்டும். லக்ஷக்கணக்கான விவசாயிகளை அவரவர்கள் நிலத்திலிருந்து வெளியேற்றி, அவர்கள் நிலங்களைக் கூட்டுப் பண்ணையில் இணைத்து, மூன்று வருஷங்களுக்குப் பின் இந்தப் பிரும்மாண்டமான ஒரு பரிசோதனையை வெற்றிகரமாக நடத்தி வைப்பதற்கு நம்மிடம் இருக்கும் நிர்வாக சாமர்த்தியம் என்ன? விவசாய நிர்வாகக் கமிட்டி சமீபத்தில் சமர்ப்பித்த தனது யாதாஸ்தில், ''விவசாய இலாகாவில் திறமை வாய்ந்த அநுபவமுள்ள உயர் அதிகாரிகள் மிகச் சிலரே இருக்கின்றனர். இவர்களுக்குப் பின் இவர்களுடைய வேலையைச் சரிவரச் செய்யத் தகுதி வாய்ந்த அதிகாரிகள் இல்லை; அப்படியிருந்தால் தற்போதுள்ளவர்களில் குறைந்தது 30 அல்லது 40 சதவீத சிப்பந்திகளை நீக்க வேண்டியிருக்கும்; 30 வருஷம் உத்தியோகம் பார்த்த பின்னரும் 400 ரூபாய் சம்பளமுள்ள கெஜட் பதிவுள்ள அதிகாரியாக ஆவது இந்த இலாகாவில் அபூர்வம்'' என்றெல்லாம் சொல்லியிருக்கிறது.

## கூட்டுறவின் லட்சணம்!

கூட்டுறவு இயக்கத்துக்கே தமது வாழ்நாள் முழுவதையும் செலவிட்டவர் மால்கம் டார்லிங் என்ற அறிஞர் சமீபத்தில் அரசாங்கத்தாரால் நம் நாட்டில் கூட்டுறவு இயக்கம் எப்படி நடக்கிறதென்பதை ஆராய்ந்து ஆலோசனை சொல்லும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். நிலைமையைச் சரிவரப் பரிசோதித்த பின்னர், ''ஒவ்வொரு ராஜ்யத்திலும் கூட்டுறவுச் சங்கங்கள் சென்ற வழியெல்லாம் அவற்றின் பாழடைந்த சின்னங்களைத் தான் காண்கிறேன்'' என்று கூறினார். இந்தப் பாழடைந்த புழுதியின் பேரில்தான் இப்போது நம்முடைய காங்கிரஸ் அரசாங்கம் கூட்டுறவுப் பண்ணை என்னும் சமாதியைக் கட்டப் பார்க்கிறது.

## புதிய ஜமீன்தார்கள்

கூட்டுப் பண்ணைகள் சுயேச்சையாகவே இருக்கும் என்பதை அடிக்கடி வலியுறுத்துகின்றனர். இதை நினைத்தால் உண்மையில் இது சுயேச்சைதானா அல்லது அப்பாவி விவசாயிகள் மீது திணிக்கப்பட்ட ஒரு புது ஜமீன்தாரி முறையா என்று ஐயமே உண்டாகும். சமீபத்தில் கூட்டுறவுச் சட்டக் கமிட்டி தனது சிபாரிசுகளை வெளியிட்டது. இக் கமிட்டியில் கூட்டுறவுச் சங்கங்களின் ரிஜிஸ்திரார்கள், மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் கூட்டுறவுப் பண்ணைகளை மேற்பார்வையிடவிருக்கும் பல பிரமுகர்கள் முதலியவர்கள் அங்கத்தினர்களாக இருந்தார்கள். அவர்கள் செய்த சிபாரிசுகளில் சிலவற்றைக் கீழே தருகிறோம்:—

(1) எந்தச் சங்கத்தின் கணக்கையும் 'தன்னுடைய சொந்த அதிகாரத்திலும் கட்டுப்பாட்டிலும்' தணிக்கை செய்யவும், அதன் விளைவாகச் சங்கத்தின் நடவடிக்கைகள் சரிவரத் திருத்தி நிர்மாணிக்கப்பட வேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கவும் ரிஜிஸ்ட்ராருக்கு அதிகாரம் உண்டு.

(2) எந்தவிதமான சச்சரவுகளைத் தீர்த்து வைக்கவும், தீர்த்து வைப்பதற்காக மாற்று அதிகாரிகளை நியமனம் செய்யவும் அல்லது

ஒரு மத்தியஸ்தரை நியமிக்கவும் ரிஜிஸ்திராருக்கு அதிகாரம் உண்டு. இந்தச் சச்சரவு சம்பந்தமாக எந்த விதமாக அப்பீலோ, ஆட்சேபமோ எந்த கோர்ட்டிலும் செல்லாது. (இதன்படி ஜனநாயகத்தில் சட்டம் ஆட்சி புரிகிறது என்ற சம்பிரதாயத்தையே ரிஜிஸ்திரார் ஒரே வரியில் நீக்கி விட்டார் என்பது இங்கே கவனிக்கத் தக்கது.)

(3) எந்த சொஸைட்டியையும் செயலற்றுப் போகும்படி செய்ய (Supersede) ரிஜிஸ்திராருக்கு அதிகாரம் உண்டு. அப்படிச் செயலற்றுப்போன சங்கத்தைத் தனது மேற்பார்வையில் இரண்டு வருஷ காலத்துக்கு நடத்தவும் அவசியமானால் இக்காலத்தை நான்கு வருஷங்களுக்கு நீடிக்கவும் அவருக்கு அதிகாரம் உண்டு. (வெளியிலிருந்து நியமிக்கப்பட்ட ஒரு அதிகாரி நாலு வருஷங்களுக்கு ஒரு சங்கத்தை நிர்வகிப்பதென்றால் இதைக் கூட்டுறவுச் சங்கம் என்று சொல்லுவது? இதைவிடக் கூட்டுறவுச் சங்கத்துக்குச் சமாதிவைத்தாகிவிட்டது என்று சொல்லிவிட்டுத் தொல்லையை ஏன் ஒப்புக் கொள்ளக் கூடாது?)

(4) எந்தச் சங்கத்தையும் கலைத்துவிட வேண்டும் என்று உத்தரவு போடுவதற்கு ரிஜிஸ்திராருக்கு அதிகாரம் உண்டு.

(5) ராஜ்ய அரசாங்கம் எந்தக் கூட்டுறவுச் சங்கத்திலும் அங்கத்தினராக ஆக உரிமையுண்டு. அப்படி அங்கத்தினராக ஆகும்போது, அரசாங்கத்தின் சார்பில் நியமிக்கப்பட்ட ஒவ்வொரு நபருக்கும் கமிட்டிக் கூட்டங்களில் ஓட்டுரிமை உண்டு.''

விவசாயக் கூட்டுப் பண்ணைகளை வருங்காலத்தில் நிர்வகிக்கப் போகும் பெரியோர்களிடமிருந்து இம்மாதிரி சிபாரிசுகளைக் கொண்ட ஒரு யாதாஸ்து வெளிவந்திருப்பது ஆச்சரியத்துக்குரிய விஷயமல்லவா? இந்தச் சிபாரிசுகளை ஏற்றுக் கொண்டால் என்ன விளைவு ஏற்படும்? வானளாவப் புகழும் கூட்டுறவுச் சங்கங்களையெல்லாம் பிற்போக்குள்ள அதிகாரிகள் கூடிய அப்பாவிக் கூட்டங்களாகச் செய்து அவர்களுடைய தன்னம்பிக்கையையும், சுய உணர்வையும் அறவே அழித்து, அவர்களை இஷ்டப்படி நிர்வாகம் செய்யவும், கட்டுப்படுத்தவும், தணிக்கை செய்யவும், மேற்பார்வை நடத்தவும், செயலறச் செய்யவும், மத்தியஸ்தம் செய்யவும், கலைத்து விடவும், சர்வாதிகாரங்கள் ஒரு மூலையில் 'கூட்டுறவுச் சங்கங்கள் ரிஜிஸ்திரார்' என்ற அதிகாரியின் கையில் குவிந்துள்ள ஒரு நிலைக்கு இந்தச் சங்கங்களைக் கொண்டு வரும் ஒரு முறையில் ''சுயேச்சை இருக்கிறது'' என்றால் வியப்புறவே தோன்றுகிறது.

மக்களை எதிர்நோக்கி நிற்பது அரசாங்கம் மேற்கொள்ளவிருக்கும் நடவடிக்கைகள், விவசாயிகளின் சுதந்திர வாழ்க்கையை அறவே ஒழித்துக் கட்டும் நடவடிக்கை. இன்னும் மூன்று வருஷங்களுக்குள் தீவிரமாக அமுல் நடத்தப்பட்டுச் சமுதாயப் பண்ணை முறை ஏற்படுத்தப்படலாம். இந்த மாதிரி நடவடிக்கை மேற்கொள்ள மாட்டார்கள் என்றே எனது நம்பிக்கை. ஒருகால் மேற்கொள்ளப்பட்டால், பலாத்காரத்தினாலும் நிர்ப்பந்தத்தின்பேரிலும் தான் இது நடைபெறும். நிர்ப்பந்தத்தின் பேரில் இதைப் புகுத்தினால் உள்நாட்டுக் கலகமும் யுத்தமும் ஏற்பட்டு ரத்தம் சிந்தி ஆயிரக்கணக்கான மக்கள் மடிவார்கள். நல்ல வார்த்தைகள் மூலம் தங்கள் நில உடைமைகளை அரசாங்கத்தினிடம் ஒப்படைத்து விட்டு, தாங்கள் நிலமில்லாத அடிமைக் கூலிகளாக வாழச் சம்மதிக்கும்படி கிராமவாசிகளைச் செய்து விடலாம் என்று நினைப்பவர்கள், எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும் கனவு உலகத்திலேயேதான் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் செய்ய முற்பட்டிருக்கும் நடவடிக்கையின் விளைவுகளைப் பற்றி நமது அரசாங்கத்தை எச்சரிப்பதற்காகவே இதில் பொதிந்துள்ள அபாயங்களைப் பற்றி இவ்வளவு தூரம் எடுத்துச் சொல்லுகிறேன். ஆரம்பித்து விட்டுப் பாதி வழியில் இதைக் கைவிட்டு விட்டாலும்கூடச் சொல்லொணாத் துயரமும் நஷ்டமும் ஏற்படும் என்பது நிச்சயம். கம்யூனிஸ்டு நாடாகிய போலந்தில் 9.2 சதம் பரப்புள்ள நிலம் மட்டுமே சமூகப் பண்ணையில் சேர்க்கப்பட்டது. இதற்குள்ளாகவே தனியார் பண்ணைகளில் தங்கள் நிலங்களுக்கும் கூடிய சீக்கிரத்தில் ஆபத்து வருமோ என்ற பயத்தில் உற்பத்தி குறைய ஆரம்பித்து விட்டது. உற்பத்திக்கு வேண்டிய ஊக்கமும் உற்சாகமும் குன்றிவிட்டன. கூட்டுப் பண்ணை வரப் போகிறதென்ற பிரசாரத்தினால் ஏற்படும் அபாயம்கூடப் பெரியது.

## நீதிக்குப் புறம்பானது

நமது ஆளும் கட்சியினர் தவறான பாதையில் செல்லுவதற்காக அடியெடுத்து வைத்து விட்டார்கள். பொது மக்களின் நீதி உணர்ச்சிக்கு இந்த நடவடிக்கை ஏற்றதல்ல; சுதந்திர சமுதாயத்துக்கும் ஒவ்வாதது. சுயநலக் கோட்பாடுகளுக்காகவும் கூட இந் நடவடிக்கை மேற்கொள்ளக் கூடாது. ஏனெனில் சிறுபான்மையினராகிய ஒரு சமூகத்துக்காகப் பெரும்பான்மையினராகிய சமூகத்துக்குத் தீங்கிழைப்பது நீதியல்ல. சில ஆண்டுகளுக்கு முன் எடுத்த கணக்குப்படி நம் பாரதத்தில் ஐந்து பேர்கள் கொண்ட நிலமுள்ள குடும்பங்கள் ஆறரைக் கோடி இருக்கின்றன. நிலமில்லாத குடும்பங்கள் ஒன்றரைக் கோடி. அதாவது நிலமில்லாதவர்கள் நிலமுள்ளவர்களில் ஐந்தில் ஒன்றுதான். ஐந்து பேர்களைத் துன்புறுத்தி ஒருவருக்கு நன்மை செய்வது எவ்வாறு நீதியாகும்?

மற்றொரு கணக்குப்படி நிலம் வைத்துக் கொண்டு விவசாயத்தைப் பிழைப்பாகக் கொண்டவர்கள் மக்களில் 53·7 சத விகிதத்தினர். அதாவது பாதிக்குமேல் நிலமில்லாது விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் 12·6 சத விகிதத்தினர். இதிலிருந்தும் அநீதியின் அளவு எவ்வளவு என்பது தெரிய வரும். இவ் விவசாயிகள் வைத்திருக்கும் நிலங்கள் சிறு சிறு துண்டு நிலங்கள்தானே என்று கேட்கலாம். உண்மைதான்; ஆனால் சிறிய நிலமாயிருந்தாலும் அது அவர்கள் சொந்த நிலமல்லவா? அதை அவர்கள் அன்புடன் போற்றுகின்றனர். சிறிய குழந்தையென்றாலும் பெற்றோருக்கு அதனிடம் அன்பு உண்டு.

[இக்கட்டுரை வழங்கும் திரு சித்ரா எஸ். நாராயணஸ்வாமி பல தொழில் ஸ்தாபனங்களுடன் தொடர்பு கொண்டவர். தென்னிந்திய வர்த்தக சங்கத்தின் முக்கிய நிர்வாக அங்கத்தினர். பொருளாதாரத் துறையில் ஆழ்ந்த அறிவாளி. உணவு தானிய விலை ஏற்றத்துக்கு வியாபாரிகள் மீது குற்றம் சாட்டுவது தவறு; தவறான அடிப்படையின் மீது எடுக்கப்படும் நடவடிக்கையும் தவறு என்று எடுத்துக் காட்டுகிறார். ஆசிரியர்]

# உணவுத் தானியங்களில் அரசாங்க வர்த்தகம்

எஸ். நாராயணஸ்வாமி
(சித்ரா அண்டு கம்பெனி)

உணவுத் தானியங்கள் வர்த்தகத்தை ராஜ்ய அரசாங்கங்கள் மேற்கொள்ள வேண்டும் என்று புது தில்லி சர்க்கார் சமீபத்தில் தீர்மானித்தபோது இந்த நடவடிக்கைக்கு ஆதாரமாகச் சில காரணங்கள் காட்டப்பட்டன. முதலாவது, உணவுத் தானியங்களில் பற்றாக்குறை ஏற்படக் கூடும் என்று தெரிந்ததும் நகர்ப்புறங்களிலுள்ள வியாபாரிகள் சுவிரக்கமின்றி விலைகளை ஏகத்தாறாக உயர்த்திக் கொள்ளை லாபம் அடிக்க முற்படுகின்றனர். இதை எப்படியும் தவிர்க்க வேண்டும். இரண்டாவது, இம்மாதிரி அநுவசியமாக விலைகளை உயர்த்தி, சாதாரண மக்களுக்கு இன்னல் விளைவிக்கும் துன்மார்க்க மனப்பான்மையை ஒழிக்க வேண்டுமானால் இவ் வியாபாரத்திலிருந்து வர்த்தகர்களை அடியோடு விரட்டியடித்தால் மட்டும் சாத்தியமே தவிர வேறு எந்த விதத்திலும் நிலைமையைச் சமாளிக்க முடியாது. ஆகையால் அரசாங்கத்தின் தலையீடு அவசியம்.

மேலும் உணவுப் பொருள் விலை ஏறிவிட்டதால், தொழிலாளர்களிடமிருந்தும் காரியாலயச் சிப்பந்திகளிடமிருந்தும் சம்பளம், பஞ்சப்படி உயர்வு முதலிய கோரிக்கைகள் வந்த வண்ணமிருக்கின்றன. (உணவுத் தானியங்களின் விலை மட்டுமல்ல; உணவுப் பண்டங்கள் எல்லாமே விலை உயர்ந்துள்ளன என்பதை இங்கே கவனிக்க வேண்டும். (பருப்பு வகைகள், எண்ணெய் இனுகள், விறகு, கரி, மாட்டுத் தீவனம் முதலிய எல்லாப் பொருள்களின் விலை உயர்ந்து விட்டாலும் அரிசி, நெல், விலை உயர்வு மட்டுமே சர்க்கார் கண்களை உறுத்துகிறது. ஏனெனில் இவையெல்லாம் நமது இன்றியமையாத உணவுப் பண்டங்கள்.

இது விஷயமாக நிலைமையைச் சமாளிக்க முடியாமல் அத்துமீறிப் போகும் போதும், சர்க்காரின் கோபம் உச்ச கட்டத்தை அடையும்போதும், யார் மீது குற்றம் சாட்டலாம் என்று சர்க்கார் தேடி அலைவார்கள். இப்படித் தேடியதில் அகப்பட்டுக் கொண்டவர்கள் நகர்ப்புறத்திலுள்ள வியாபாரிகள். ஏற்கனவே அவர்கள் மீது பொதுவாக மக்கள் மனத்தில் அர்த்தமற்ற கெட்ட அபிப்பிராயம் நிலவி வருகிறது. சந்தேகப் பேர்வழிகளைக் குற்றவாளியாக்குவது சுலபமல்லவா? சினத்தை யெல்லாம் தணலாக்கி வியாபாரிகள் தலையில் கொட்டி, அவர்கள் செய்த அல்லது செய்ததாகக் கருதும் பதுக்கல்களையும், கொள்ளை லாப விற்பனைகளையும் கேட்போர் மனம் கொதிக்கும்படி சர்க்கார் விளம்பரப்படுத்தி வருகிறார்கள்.

## அகப்பட்டுக்கொண்டவன் வியாபாரி!

இதற்கிடையில் அகப்பட்டுத் திணறிப் போன வியாபாரிகள், பதுக்கல் செய்யப் போதிய பண வசதி தங்களுக்கு இல்லை, நகரங்களில் பதுக்கி வைக்கப் போதிய ஸ்தல வசதி இல்லை, பாங்கிகள் இம்மாதிரி காரியங்களுக்குத் தேவையான பண வசதி தருவதில்லை, தங்களால் பதுக்கல் செய்ய வேண்டுமென்றாலும் செய்ய முடியாது, தங்கள் மீது சுமத்தப்பட்ட பழி அபாண்டம் என்றெல்லாம் எடுத்துச் சொல்லவும் முடிகிறதில்லை. அர்த்தமற்ற பழியைச் சுமக்க வேண்டிய அவல நிலைமையில் அவர்கள் இருக்கின்றனர்.



திரு எஸ். நாராயணஸ்வாமி

ஆனால் விலைகள் உயர்ந்துதானே நிற்கின்றன? இதற்குக் காரணம் என்ன? இதை எளிதில் விளக்கி விடலாம். உண்மை என்னவென்றால் எந்த விவசாயிக்காக எல்லோரும் அல்லும் பகலும் கண்ணீர் வடிக்கின்றனரோ, அந்த விவசாயி, உணவுத் தானியத்தை உற்பத்திசெய்யும் அடித்தளத்திலுள்ள விவசாயி, தன்னைப் பற்றிய பொருளாதார நிலைமை மிக நன்றாகவே அறிந்திருப்பதுடன் பேரம் பேசித் தனக்குச் சாதகமாக நடந்து

கொள்ளும் திறமையும் உள்ளவன். அவன் கிராமத்தில் தனது சொந்த வீட்டில் வசித்தாலும், உடைகளுக்கு அதிக செலவு செய்யத் தேவையில்லையென்றாலும், தான் உற்பத்தி செய்யும் பண்டங்களைத் தவிர வாழ்க்கைக்கு அவசியமான இதரப் பொருள்கள் பலவற்றை விலை கொடுத்தே வாங்க வேண்டிய நிலைமையில் இருக்கிறான். எல்லாப் பொருள்களுக்கும் அவன் மிகவும் அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. அவற்றில் பெரும்பாலான வகைகளில் ஏற்பட்டுள்ள விலை உயர்வுக்குச் சமமாக உணவுத் தானியங்களின் விலைவாசிகள் உயரவில்லை; உயரவும் முடியாது. மேலும் கிராமவாசிகள் இப்போதெல்லாம் நவீன சுகசாதனங்களை விரும்பி அனுபவிக்கத் தொடங்கி விட்டார்கள். மின்சார வசதி கிராமங்களுக்கு வேகமாகப் பரவி வருகிறது. நமது சென்னை மாநிலத்தில் மின்சார போர்டின் முற்போக்குக் கொள்கையின் பயனாகவும் சுறுசுறுப்பான நடவடிக்கையின் விளைவாகவும் சராசரி ஒரு நாளுக்கு ஒரு கிராமம் என்னும் கணக்கில் மின்சார வசதி பரவி வருகிறது. கிராமத்தில் மின்சாரம் என்றால் மின்சார விளக்குகள், மின்விசிறிகள், ரேடியோ செட்டுகள், முடியுமானால் வெந்நீர் சாதனங்களும் பம்பு செட்டுகளும்கூட வைத்துக் கொள்ளக் கிராமவாசி ஆசைப்படுகிறான். இம்மாதிரி நாகரிக வசதிகளை வைத்துக் கொள்ள வேண்டுமானால் வீடு மட்டும் பழங் குடிசையாக இருந்தால் பொருத்தமாக இருக்குமா? வீடுகளின் தன்மை, தரம், அமைப்பு எல்லாமே மாறிக் கொண்டு வருகின்றன. கடந்த ஐந்தாண்டுகளில் இந்த வகைகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் கணிசமானது. இந்தச் சூழ்நிலையில் தான் வாங்கும் எல்லாப் பொருள்களுக்கும் அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கும்போது தான் உற்பத்தி செய்த தானியத்தை மட்டும் ஏன் குறைந்த விலைக்கு விற்க வேண்டுமென்று அவன் எண்ணத் தொடங்கிவிட்டான். வாழ்க்கையில் முடிவாகப் பார்க்கப் போனால் எல்லா விவகாரங்களும் பண்டமாற்றத்தில் தானே முடிவடைகின்றன? தன்னுடைய உற்பத்திப் பொருள்களுக்குக் கிடைக்கும் தொகைக்கும் தன்னுடைய தேவைப் பொருள்களுக்குக் கொடுக்கும் பணத்துக்கும் ஏதாவது ஒரு நிலையில் சமன்பாடு செய்துதானே ஆக வேண்டும்?

## முரணான நடவடிக்கைகள்

கிராமவாசிகளிடம் அரசாங்கத்துக்கும் பரிவு அதிகம். அவர்களுக்கு எல்லா வாழ்க்கை வசதிகளும் இருக்க வேண்டும்; அவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயர வேண்டும்; அவர்களுடைய சுகாதார வாழ்வுக்கு உகந்த வசதிகள் இருக்க வேண்டும்; என்றெல்லாம் அரசாங்கம் விரும்புகிறது. ஆனால் சர்க்கார் என்ன செய்தார்கள்? இறக்குமதிப் பொருள்கள்மீது சுங்க வரியை உயர்த்தினார்கள். தொழில் ஸ்தாபனத்தில் நம் நாட்டிலேயே உற்பத்தியாகும் பொருள்கள்மீது எக்ஸைஸ் வரிகளைப் படிப்படியாக உயர்த்தினார்கள். தொழிலாளிகள், சம்பள உயர்வு கோரிக்கைகள் விடுக்கும் வண்ணம் சூழ்நிலையை உருவாக்கி அக்கோரிக்கைகளுக்கு இணங்கும்படி தொழிலதிபர்களை நிர்ப்பந்தப்படுத்தினார்கள்; இப்படி அதிக வரியாலும் சம்பள உயர்வாலும் இறக்குமதிப் பொருளானாலும் சரி, நம் நாட்டு உற்பத்தியானாலும் சரி, எல்லாப் பண்டங்களின் விலையும் உயர வகை செய்து விட்டனர். ஒரு பக்கத்தில் கிராமவாசிகளின் வாழ்க்கைத்தரமும் வருமானமும் உயர்ந்து பண்டங்களை வாங்கும் சக்தி அதிகரிக்க ஓரளவுக்கு வகை செய்யப்படுகிறது. மறுபுறம் வரி விதிப்பு ஏற்றத்தின் மூலம் வாங்க வேண்டிய பொருள்களின் விலைகள் உயர்த்தப்படுகின்றன. இப்படி மாறுபட்ட நடவடிக்கையிலுள்ள முரண்பாட்டை நமது அரசாங்கம் இன்னும் தெளிவாக உணரவில்லை. இதில் முரண்பாடு இருக்கிறதென்பதே அவர்களுக்கு இன்னும் விளங்கவில்லையென்று தோன்றுகிறது.

அதைப் பற்றிக் கிராமவாசிக்குக் கவலையில்லை. நாட்டில் எல்லா மக்களுக்கும் இன்றியமையாததும் தான் உற்பத்தி செய்வதுமான ஒரு வஸ்துவைத் தான் மட்டும் ஸ்திரமான ஒரே விலைக்கு ஏன் கொடுக்க வேண்டும் என்று அவன் இப்போதெல்லாம் கேட்கத் தொடங்கி விட்டான். அவன் கெட்டிக்காரனாகி விட்டான் என்று வேண்டுமானாலும் சொல்லுங்கள். மற்றத் துறைகளில் எந்த உற்பத்தியாளரும் செய்யாததை, செய்ய வேண்டுமென்று வற்புறுத்தப்படாத இந்த விற்பனை விலைக் கட்டுப்பாட்டை, தான் மட்டும் விவசாயத் துறையில் ஏன் கடைப்பிடிக்க வேண்டும், கடைப்பிடிக்க வேண்டுமென்று வற்புறுத்தப்பட வேண்டும் என்று கேட்கத் தொடங்கி விட்டான். அவன் கேட்பது நியாயந்தானே?

## "எனக்கு மட்டும் ஏன் கட்டுப்பாடு?"

மற்றத் துறைகளில் உற்பத்தியாளர்களைப் போலத் தனது பொருள்களுக்கும் அதிக விலை கொடுக்க வேண்டுமென்று இப்போது விவசாயி கேட்கிறான். ஒரே நாளில் பணக்காரனாகி விட வேண்டும் என்பதற்காக அவன் அவ்வாறு கேட்கவில்லை. சிறுகச் சிறுகத்தான் செல்வந்தனாக ஆகலாமே என்ற எண்ணம்கூட அவனுக்கு இல்லை. தான் பணம் கொடுத்து வாங்கும் பொருள்களுக்குக் கொடுக்க வேண்டிய அதிக விலையைப் பெறுவதற்காகவே அவன் கேட்கிறான்.

இதைக் குற்றம் என்று சொல்ல முடியுமா? அல்லது இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவடையும் சமயத்தில் விவசாயியைப் பார்த்து, "நீ நாகரிகப் பொருள்களை வாங்கக் கூடாது. அதற்காக அனாவசியச் செலவு செய்யக் கூடாது. அப்படிச் செய்யாமலிருந்தால் உங்களுக்கும் அதிக பணம் தேவைப்படாது. உங்கள் உணவுத் தேவைக்கு வேண்டிய தானியத்தை மட்டும் வைத்துக் கொண்டு உபரியாக உள்ளதைக் குறைந்த விலைக்கு எங்களுக்குக் கொடுத்து விடவும்" என்று அரசாங்கத்தினர் சொல்ல முடியுமா? இப்படிச் சொன்னால்தான் அதைக் கேட்டுக் கொண்டு அந்த விவசாயி சும்மா இருப்பானா?

அரசாங்கத்தைப் பார்த்து, "தொழில் அபிவிருத்தி வெகு வேகமாக விஸ்தரிக்கப்பட்டது யாருக்காக? ஆலைகள் ஓய்வின்றி வேலை செய்து திட்டங்களின் லட்சியத்துக்கேற்ப உற்பத்தி செய்த அதிகப்படி துணிகளும், சக்கரையும், சிமிட்டியும், எஃகுப் பொருள்களும் யாருக்காக? இப்பொருள்களெல்லாம் யாருடைய உபயோகத்துக்காக?" என்று திருப்பிக் கேட்க மாட்டாரா? விவசாயிகள் எழுத்தறிவு இல்லாதவர்களானாலும் பகுத்தறிவு பெற்றவர்கள் என்பதை மறந்துவிட வேண்டாம். "இத்தனை வருஷ காலமாக உலகத்தாரிடம் இந்த ஏழை விவசாயியைச் சுரண்டியே எல்லாரும் பிழைக்கின்றனர்; அவனுடைய தானியங்களுக்குச் சரியான விலை கிடைப்பதே இல்லை; தேவைகளுக்குக் கூடச் செலவு செய்யக் கையில் பணம் இருப்பதில்லை; அரைப் பட்டினியாகவே அவன் வாழ்நாளைக் கழிக்க வேண்டியிருக்கிறது என்றெல்லாம் சொன்னீர்களே. இப்போதுமட்டும் எங்கள் பொருள்களைத் தொழிற்சாலைப் பண்டங்களுக்குள்ள விலைக்குக் குறைவாக விற்கும்படி கேட்பது என்ன நியாயம்? இப்போதுதான் எனக்கும் நல்ல காலம் வராதா என்று எதிர்பார்த்தது, பலிப்பது போலத் தோன்றுகிறது. வாழ்க்கையில் சிறிதே சுகம் அனுபவிக்கலாம் என்றிருக்கும்போது 'தேவையைக் குறைத்துக் கொள். அதிகம் செலவு செய்ய வேண்டாம்' என்று கூறுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது? நாங்கள் எப்போதும் அரை வயிற்றுடன் தானே இருந்து வந்திருக்கிறோம்" என்றுதான் அவர்கள் கேட்கிறார்கள்.

விலை உயர்வுக்கு உண்மையான காரணம் காணவேண்டுமானால் விவசாயிகளிடம் செல்ல வேண்டும். அப்படிச் சென்றால் அடுத்த தேர்தலில் விவசாயிகளின் ஆதரவை இழக்க வேண்டிவரும். இந்தப் பயத்தில் அரசாங்கம் உணவுத் தான்ய விலை உயர்வுக்கு உண்மைக் காரணத்தை விட்டு, உற்பத்தியாளருக்குப் பதில் வியாபாரியைக் குற்றவாளியாக்கினார்கள். ஆனால் இதை அவர்கள் தெரிந்துகொண்டு செய்தார்களென்றால் அதற்குப் பொருள் உண்டு. சர்க்காரின் சாமர்த்தியத்தைப் பாராட்டலாம். ஆனால் நமது அரசாங்கம் இந்த விஷயத்தில் உண்மை நிலையை உள்ளபடி அறிந்து கொள்ளவே இல்லை என்பது என் எண்ணம்.

## முதற்படியிலேயே தேக்கம்

ஒவ்வொரு விவசாயிக்கும் தனியாகக் களத்துடிகள் உண்டு. அங்கேயே தானியக் குவியல்களை அம்பாரங்களாகக் கட்டிவைக்க அவனால் முடியும். சிலர் மண்ணினாலான குதிர்களிலும் வைக்கோல் உறைகளிலும், பூமிக்கடியில் பத்திரமான களஞ்சியங்களிலும் தானியத்தைச் சேமித்து வைக்கிறார்கள். விலை உயர்வை எதிர்பார்த்துத் தானியத்தை இருப்புக் கட்டும் சக்தி ஒரு வியாபாரியைக் காட்டிலும் விவசாயிக்கு மிகவும் அதிகம். ஏனெனில் ஒவ்வொருவனும் இருப்பு வைக்க வேண்டிய தானியம் மிகவும் கொஞ்சம்தான். விவசாயச் செலவுக்கும் சாகுபடிச் செலவுக்கும் போக மிச்ச தானியத்தை அவனால் தேக்கி

### சோஷலிஸப் பாதை

தனி மனிதனுடைய சுதந்திரத் தன்மையை அடியோடு அழிக்காமல், அவனுடைய சிந்தனாசக்தியைச் செயலற்றுப் போகும்படி ஆக்காமல், சமூகம் முழுவதையும் அடிமைக் கூட்டங்களாக மாற்றி அமைக்காமல், அரசாங்க யந்திரத்தை இயக்கச் சலுகை பெற்ற ஒரு தனி வர்க்கத்தினரை ஏற்படுத்தாமல், உலகத்தில் எந்த நாடும் சோஷலிஸத்தை நிலைக்கச் செய்து சோஷலிஸ லட்சியத்தை ஸ்தாபித்ததில்லை. இந்தியாவில் இந்தப் பரீட்சை ஒரு வேளை வெற்றி பெற்றாலும், அது முடிவில் மேலே விவரித்த நிலைமைக்குத்தான் கொண்டுவிடும். —ராஜாஜி

வைக்க முடியும். நகர்ப்புறங்களிலுள்ள வியாபாரிகளின் நிதிவசதி அப்படி ஒன்றும் பிரமாதமானது அல்ல. பர்மா போன்ற நாடுகளில் அரிசி ஏற்றுமதி வர்த்தகம் ஒரு தனித் தொழிலாக நடத்தப்படுவதுடன் பெருவாரியான முதலீடுகளும் தொழில் ஸ்தாபனங்களால் செய்யப்படுகின்றன. அங்கு வர்த்தகர்களின் நிலைமை வேறு. ஆனால் இந்தியாவில் வியாபாரிகள் நிதி வசதி யுள்ளவர்கள் அல்ல. நகரங்களில் கிடங்கு வசதிகளும் குறைவு; வாடகையும் அதிகம். ஏற்றுமதிப் பண்டங்களுக்கும் தொழிற்சாலைப் பொருள்களுக்கும் தான் தாற்காலிக வசதிக்காகக் கிடங்குகள் கிடைக்கின்றன. உணவுத் தான்யத்தைப் பதுக்கி வைக்க இவ் வசதிகள் கிடையாது. நகர்ப்புற வர்த்தகர்கள் பதுக்கி வைத்திருக்கும் தானியம் எவ்வளவு, விவசாயிகளிடமே தங்கிப் போன தானியம் எவ்வளவு என்று அரசாங்கம் கணக்கெடுத்தால், விலை உயர்வுக்கு உண்மைக் காரணம் எங்கே இருக்கிறதென்று தெரியவரும். பதுக்கி வைத்து விலை ஏற்றத்தை உண்டுபண்ணக் கூடிய அளவுக்குப் பணம் வர்த்தகர்களிடம் இல்லை. பாங்கிகளும் இதற்காகக் கடன் கொடுப்பதில்லை.

## உணவு மண்டலத்தின் விசித்திரம்

புதிதாக ஏற்படுத்தப்பட்ட உணவு மண்டலங்கள் விசித்திரமான வகையில் செயலாற்றின. சென்னை ராஜ்யம் உணவுத் தானியங்களைப் பொறுத்த வரை ஒரு பற்றாக்குறை ராஜ்யம். நமது அரசாங்கமோ இதைச் சுயதேவைப் பூர்த்திபெற்ற ஒரு மாநிலம் என்று ஸ்தாபிக்கின்றது. இங்கே கன்னியாகுமரி, மற்றும் இதர மாவட்டங்களின் மூலமாக நெல் கேரளத்துக்குச் சென்று கொண்டிருக்கிறது: சென்னைமா நகரிலும் செங்கல்பட்டு ஜில்லாவிலும் ஆந்திரா அரிசிதான் மாமூலாக வந்து கொண்டிருக்கிறது. உண்மையில் சென்னை நகரம் நெல்லூர் அரிசி சாப்பிட்டே வளர்ந்து வந்திருக்கிறது. கேரளமோ தனக்குத் தேவையான அரிசியை அரசாங்கம் மூலம் எங்கு கிடைக்கிறதோ அங்

லிருந்து தருவித்துக் கொள்ளுகிறது. முக்கியமாக ஆந்திராவிலிருந்து அது வாங்குகிறது. ஆந்திரா அரிசி அண்டையிலுள்ள பம்பாய் ராஜ்யத்துக்குத் திருட்டுத்தனமாக வேறு போய்க்கொண்டிருக்கிறது. ஆந்திர ராஜ்யம் ஒன்றுதான் உபரியாக உள்ள பிராந்தியம். கேரளம் நிரந்தரமாகப் பற்றாக்குறை ராஜ்யம். சென்னையோ பற்றாக்குறை ராஜ்யமாயினும் சுயதேவைப் பூர்த்தியான பிராந்தியம் என்று வாதிக்கப்படுகிறது. கேரளத்துக்குச் செல்லும் அரிசி பற்றியோ ஆந்திராவிலிருந்து கிடைக்கும் அரிசிபற்றியோ புள்ளிவிவரங்கள் ஒன்றுமில்லை. இதற்கிடையில் இருப்பது, பாகுபாடு செய்ய முடியாத மைசூர் ராஜ்யம். எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்தால் தென் மண்டலம் ஏற்படுத்தப்பட்டபோது எதிர்பார்த்ததை விட அதிகமான அளவில் பற்றாக்குறை மண்டலமாகவே காட்சியளிக்கிறது.

### சர்க்கார் அறிக்கை மகத்துவம்!

சாதாரணமாகவே சாகுபடி சமயத்தில் தானிய விலைகள் குறையும். ஆனால் உணவு தான்ய வர்த்தகத்தைச் சர்க்கார் மேற்கொள்ளப் போகிறார்கள் என்று அறிவித்த உடனே விலைகள் குறைவதற்குப் பதிலாக உயரத் தொடங்கி விட்டன. உற்பத்தியையும், உபரியையும்,பற்றாக்குறையையும் அனுசரித்து விலை ஏற்றத் தாழ்வு ஏற்படும் என்னும் நிலைமைக்குப் பதில் அரசாங்கம் அறிவிக்கும் மதிப்பீடுகளையும் அவற்றை யொட்டி எடுக்கப்படும் நடவடிக்கைகளையும் அனுசரித்தே விலை ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறது என்பதைத்தான் அநுபவத்திலிருந்து காண்கிறோம். ''ப்ரொக்யூர்மெண்ட்'' முறையை ரேஷன் இருந்த காலத்தில் அரசாங்கம் அமுல் நடத்திய அனுபவத்திலிருந்து, உபரிதானியத்தைச் சேமிப்பதிலும், விநியோகிப்பதிலும், முடிவில் ஏலத்தில் விடுவதிலும் நாட்டுக்கு எவ்வளவு நஷ்டம் ஏற்படக் காரணம் உண்டு என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறோம். லெவி முறையை அமுல் நடத்திக் கொள்முதல் செய்யப்படும் என்று சர்க்கார் அறிவித்தும் கூட இன்னமும் எதிர் பார்த்த அளவு தானியம் கிடைக்கவில்லை. விலையும் இறங்குவதாகக் காணோம். விலைவாசிகளை இறங்கச் செய்து பற்றாக்குறை ஜில்லாக்களுக்கு உபரி தானியத்தை வழங்க வேண்டும் என்ற நோக்கத்துடனேதான் அரசாங்கம் தானிய வர்த்தகத்தை மேற்கொள்ள உத்தேசிக்கிறது. ஆனால் இந்த நோக்கங்கள் நிறைவேறாமல் போவதுடன், எதிர்பாராத விபரீத விளைவுகளும் தோன்றுகின்றன. அதாவது, சிவப்பு நாடா, காலதாமதம், படிப்படியாக உயரும் அதிகார அமுல்—இவைதான் அரசாங்க வர்த்தகத்தின் சின்னங்களாக அமைகின்றன. நிதி சம்பந்தமாக என்ன விளைவுகள் ஏற்படும் என்று அதிகம் யோசிக்க வேண்டாம். அரசாங்க வர்த்தகத்துக்குத் தேவைப்படும் அபரிமிதமான மூலதனம் அனுபவமில்லாத அதிகாரவர்க்கத்தினர் கையில் அகப்பட்டுத் தவிக்கும். இப்புது முறை நிர்வாகம் மக்களின் முக்கிய பண்டமாகிய உணவுத் தானியத்தில் எத்தகைய இன்னல்களை விளைவிக்கும் என்பதை விவரிக்க வேண்டியதே இல்லை.

### பணம் சுரண்டப் புது வழி

உணவுத் தானிய விலைகள் உயர்ந்து கொண்டே போவதற்கு மூலகாரணத்தை அறிந்து அதை நிவர்த்தி செய்யவோ, அல்லது கட்டுப்படுத்தவோ முயல வேண்டும். பணவீக்கத்தின் காரணமாக எல்லாப் பொருள்களின் விலைகளும் உயர்ந்திருக்கின்றன. அதன் ஒரு தோற்றம்தான் உணவுத்தானிய விலை உயர்வு. இதைக் கட்டுப்படுத்த அரசாங்கத்தினிடம் மேலும் ஒரு புதிய அதிகாரத்தை அளித்து விட்டால் போதும், சர்க்கார் நடவடிக்கை எடுக்கத் தலைப்பட்டதும் நிலைமை திருந்தி விடும் என்று எதிர்பார்ப்பது தவறு. இதன் மூலம் எந்தப் பிரச்னைக்கும் தீர்வு காண முடியாது. மாறாக, அரசாங்கத்தின் நோக்கங்களைப் பற்றி மக்கள் மனத்தில் அவநம்பிக்கைதான் வளரும். பணம் சுரண்டப் புது வழிகளைக் கையாளுகின்றனரோ என்று சந்தேகம் தான் எழும். அவ்வாறு அவர்கள் நினைக்கப் போதிய முன் அனுபவங்கள் இருக்கின்றன. ஆனால் இந்த நடவடிக்கை, மற்ற நடவடிக்கைகளைப்போல் அல்லாது, உணவுத் தானியத்தைப் பற்றியதாகையால் எல்லா மக்களையும் பாதிக்கும். அனாவசியமான ஒரு பழிக்கு அரசாங்கத்தை உள்ளாக்கும். இதை அரசாங்கம் உணர்ந்து, தங்களது சிகிச்சை முறையினால் நோயின் கடுமை அதிகரிக்கிறதே தவிர, குறையவில்லை யென்பதைத் தெரிந்து, இந்தப் பரிசோதனையை உடனே இல்லாவிட்டாலும் சீக்கிரத்தில் கைவிடும் என்றே நம்புகிறேன்.

# வேங்கையின் மைந்தன்



**பதினோராம் அத்தியாயம்**

## கலையாத திலகம்

நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் தெற்குக் கடலில் அடிவானத்தை ஊடுருவிச் செல்பவைபோல் வரிசையாகக் கப்பல்கள் சென்று கொண்டிருந்தன. நாகைப்பட்டினத்தை விட்டுப் புறப்பட்டபின் ஓர் இரவு கழிந்து, மறுநாள் புலர்ந்து விட்டது. இளஞ்சூரியனின் பொன்னொளியில் பாய்மரச் சேலைகள் அன்னப் பறவைகளின் வண்ணச் சிறகுகளைப் போல் படபடத்தன.

கடைசிக் கப்பலின் மேல் தளத்தில் நின்றவாறே உற்சாகப் பரபரப்புடன் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான் தென்னவன் இளங்கோவேள். குதூகலத்தால் ஆர்ப்பரித்துக் கொப்பளித்த பேரலைகள் அவன் மேல் நுரை முத்துக்களை வாரி இறைத்து விளையாட்டுக் காட்டின. மேலே நீல வானம்; சுற்றிலும் நீல நீர்ப்பரப்பு; அவன் வாயில் கடற்காற்று தந்த உவர்ப்புச் சுவை. கருமீன் குஞ்சுகள் ஆங்காங்கே நீரிலிருந்து மேலே எழும்பிக் குதித்து, மீண்டும் அலைகளில் துள்ளிப் புரண்டு நெளிந்தன.

இவையெல்லாம் இளங்கோவுக்குப் புதிய அனுபவங்கள். மற்றொரு புதிய அனுபவமும் அவனுக்கு ஏற்கனவே கிடைத்திருந்தது. முதல் நாள், அவன் புறப்படும்

**அகிலன்**

வேளையில், அருள்மொழி அவனுக்குத் திலகமிட்டு அனுப்பி வைத்தாளல்லவா? இப்படி அவள் தன் மென்விரலால் திலகமிட்டு அனுப்புவாளென்றால் தினமும் ஓர் போர்க்களத்துக்குச் செல்லலாமே!

'களாமுக சமயத்தைச் சேர்ந்தவர்கள் சில சமயங்களில் பெண்களையே கோவில்களில் வைத்து ஆதிசக்தியின் அவதாரங்கள் என்று வழிபடுவார்களாம். நேற்று வரையில் அது எனக்கு விந்தைப் பழக்கமாகத் தோன்றியது. ஏன், வழிபட்டால் என்ன? அருள்மொழியும் அத்தகைய ஒரு பெண் தெய்வமல்லவா? மின்வெட்டும் நேரத்தில் என்னை ஆவேசமுறச் செய்து விட்டாளே!'

மரப்படிகளில் சத்தம் கேட்கவே, இளங்கோ திரும்பிப் பார்த்தான். கப்பலின் கீழ்த்தளத்திலிருந்து மேலே வந்து கொண்டிருந்தார் வல்லவரையர் வந்தியத் தேவர். வந்தவர் அவனை உற்றுப் பார்த்துவிட்டு, தமக்குள் கேலிச் சிரிப்புச் சிரித்தார். அவனுக்கு அதன் காரணம் விளங்கவில்லை.

"இளங்கோ! ஏது, உன் நெற்றிப் பொட்டு இன்னும் அப்படியே இருக்கிறதே! நேற்று அருள்மொழி வைத்துவிட்ட பொட்டல்லவா இது?"

"குளிக்கும்போது நான் நெற்றியை அழுத்தித் துடைக்கவில்லை" என்றான் இளங்கோவேள்.

"ஏதும் காரணம் இருக்குமோ?"

"ஆம்; ஈழத்து மண்ணில் காலடி எடுத்து வைக்கும் வரையில் அதை நான் அழிக்கப் போவதில்லை."

"அப்படியென்றால் அருள்மொழியின் விரல் உன் நெற்றியில் அழுத்தமாய்ப் பதிந்து விட்டதென்று சொல்!" வல்லவரையர் புன்னகை பூத்துவிட்டு, "அதனால்தான் உனக்குத் திடீரென்று ஆவேசம் வந்துவிட்டதோ?" என்று கேட்டார்.

"போங்கள், தாத்தா!" என்று வெட்கத்துடன் கூறினான் இளங்கோ.

"அந்தக் காலத்தில் குந்தவையிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளும் போது எனக்கு இப்படி ஆவேசம் வருவதுண்டு" என்று தமது அந்தக் காலத்துக் காதலை மறைமுகமாகத் தொடங்கினார் வந்தியத்தேவர்.

"தாத்தா! தாங்கள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை. வயதில் சிறியவரானாலும் நங்கையார் என் வணக்கத்துக்குரியவர். குந்தவை தேவியாருக்கும் தங்களுக்கும் இருந்த அன்போடு இதை ஒப்பிடாதீர்கள்."

"ஓ! அதுவும் நல்லதுதான்; அப்படியானும் பிரிவுத்துயரம் உன்னை வாட்டப் போவதில்லை!" என்று கூறி நகைத்தார் வந்தியத்தேவர்.



பிறகு தம்முடைய கிழவி தமக்கு விடை கொடுத்தனுப்பிய காட்சியை அவனிடம் வர்ணிக்க வேண்டுமென்று அவருக்குத் தோன்றியது. "உன் பாட்டி யிருக்கிறாளே, மிகவும் பொல்லாதவள்! பெண்களும் போர்க்களத்தில் குதிக்கலாம் என்று வழக்கம் இருந்திருந்தால், அவளும் என்னோடு ஒன்றாய் ஈழத்துக்குப் புறப்பட்டிருப்பாளாம். வரமுடியவில்லையே என்று வருத்தப்பட்டு உருகி விட்டாள். அசாத்தியத் துணிவு அவளுக்கு!"

கலகலவென்ற கம்பீரச் சிரிப்பொலி அவர்களுக்குப் பின்னாலிருந்து கேட்கவே, வந்தியத்தேவர் தமது வாயை அத்துடன் மூடிக்கொண்டு அங்கிருந்து நழுவப் பார்த்தார்.

அங்கு வந்து நின்ற இராஜேந்திரர் அவரை விடவில்லை. "மாமா! அத்தையும் உங்களோடு போர்க்களம் புகுந்து விட்டால் பிறகு அங்கே என்ன நடக்கும், தெரியுமா? இருவருமே எதிரிகளோடு வாட்போர் புரிவதை மறந்து விட்டு, உங்களுக்குள் சொற்போர் தொடங்கி விடுவீர்கள். உங்கள் சண்டையைத் தீர்த்து வைப்பதற்கே எங்களுக்குப் பொழுதிருக்காது!"

மற்றவர்களைப் பரிகாசம் செய்வதில் வல்லவரான வல்லவரையர், தாமே நகைப்புக்கிடமாவதைக் கண்டவுடன், அந்த இடத்துக்கே புறமுதுகு காட்டிப் பின் வாங்கி விட்டார்.

நேரம் சென்றது. இளம் சூரியன் மெல்ல மெல்லக் கொடும் சூரியனாக மாறிக்கொண்டு மேலே வந்தான். பாய்மரச் சேலையின் நிழலில் கிடந்த ஆசனங்களில் மாமன்னரும் இளங்கோவும் வந்து உட்கார்ந்தார்கள்.

"இளங்கோ!"

அவனைப் பார்க்காமல் எதையோ யோசனை செய்துகொண்டே அவனிடம் பேசினார் இராஜேந்திரர்.

"நூற்றுக்கணக்கான மரக்கலங்கள், பல்லாயிரக்கணக்கான வீரர்கள், மதிப்பிட முடியாத உணவுக்குவியல், இன்னும் லட்சக் கணக்கான போர்க் கருவிகள் இவற்றோடு நாம் ஏன் இப்போது ஈழத்துக்குப் புறப்பட்டுப்போய்க் கொண்டிருக்கிறோம், தெரியுமா?"

"தமிழ் மன்னன் ஒருவன் அங்கே விட்டு வந்த மணிமுடியை மீட்பதற்காக" என்றான் இளங்கோவேள்.

"பழைய முடி அது; நூறு ஆண்டுகளுக்கு



முன்பு செய்ததாக இருக்கும். அல்லது அதைவிடப் பழையதாகக்கூட இருக்கலாம். வணிகர்களின் கணக்குப்படி அதை மதிப்பிட்டுப் பார்த்தால், நம்முடைய ஒரு மரக்கலத்தின் விலைக்குக் கூட அது சமமாகாது. அதை மீட்பதற்காக நாம் இவ்வளவு பொருட்சேதம், உயிர்ச் சேதம், காலவிரயம் செய்யலாமா?— யோசித்துப் பார்!"

யோசிக்கத் தொடங்கிய இளங்கோவுக்குப் பெரும் குழப்பமே மிஞ்சியது. பாதி வழி தாண்டிய பிறகு மாமன்னர் ஏன் இப்படி மாறுபடப் பேசுகிறார் என்பது அவனுக்கு விளங்கவில்லை. "பெரிய சக்கரவர்த்தி ராஜராஜ அருள்மொழித் தேவர் தமது கடைசி நாளில் கூறிய மொழிகளை நினைத்துப் பாருங்கள், சக்கரவர்த்தி!" என்றான் இளங்கோ. அதோடு அவன் தன் பெரிய பாட்டனார் கொடும்பாளூர்ச் சிறிய வேளார் ஈழத்தில் உயிர் துறந்ததையும் நினைத்துக் கொண்டான்.

"என் தந்தையார் எதற்காகக் கூறினார் என்பதைச் சிந்தித்துப் பார்!"

இளங்கோவேள் சிந்தித்துப் பார்த்தான். 'கோழைத்தனமாக எவனோ ஒரு பாண்டியன் தன்னுடைய நாட்டு மணிமுடியைப் பிறநாட்டு மன்னனிடம் கொடுத்து விட்டு வந்து விட்டான். அவனுக்கு அடைக்கலம் கொடுப்பதாக வாக்களித்தவர்கள் அவனுடைய சொந்த உடைமைகளைக் கூடத் தங்களுடையதாக எடுத்துக் கொண்டார்கள். இதற்காக இத்தனை போர்களா? இரண்டு பக்கங்களிலும் இதுவரையில் எத்தனை எத்தனை வீரர்கள் தங்கள் உயிர்களைப் பலி கொடுத்திருப்பார்கள்? இனியும் அந்த முடி எத்தனை உயிர்களைக் காவு கொள்ளக் காத்திருக்கிறதோ?'

"என்ன, இளங்கோ! மறுமொழியைக் காணோமே?" என்று கேட்டு, அவன் சிந்தனையைக் கலைத்தார் மாமன்னர்.

"நம்முடைய புகழையும் பெருமையையும் நிலைநாட்டிக் கொள்ள நாம் தொடுக்கும் போர் இது" என்று எதையோ சொல்லி வைத்தான் இளங்கோவேள்.

"ஆம், உண்மைதான்; அது தமிழ் மன்னனின் முடி என்பதுதான் முக்கியமான காரணம்" என்று சொல்லிவிட்டு மேலே கூறலானார் மாமன்னர்:—

"மேலைச் சளுக்கர்கள் தமிழ் நாட்டைச் சூறையாடுவதற்கு எந்தக் கணத்திலும் காத்திருக்கிறார்கள். பண்போடு போர் செய்யும் முறை அவர்களிடம் கிடையாது. ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்துவார்கள். பெண்டிரின் மானத்தைப் பறித்து அவர்களை அடிமைகளாக இழுத்துச் செல்வார்கள். வீரர்களை அங்க ஈனம் செய்து விளையாடுவார்கள். இன்னும் நினைத்துப் பார்க்க முடியாத இழிசெயல்களையெல்லாம் அவர்கள் செய்யத் தயங்க மாட்டார்கள்."

'மேலைச் சளுக்கர்களுக்கும் இப்போது ஈழநாடு செல்வதற்கும் என்ன சம்பந்தம்?' என்று இளங்கோவேள் நினைக்கத் தொடங்கியபோது, மாமன்னர் மேலே தொடர்ந்து பேசினார்:

"நம்முடைய மக்களை அவர்களைப் போன்ற வெறியர்களிடமிருந்து காப்பாற்ற வேண்டுமானால், நம்முடைய மண்ணில் பிறந்த ஒவ்வொருவருக்கும் நாம் போராட்டச் சக்தியை ஊட்ட வேண்டும். ஊக்கமும் உற்சாகமும் தர வேண்டும். மக்களின் மன எழுச்சியைக் கிளறி அவர்களுக்குப் புத்துயிர் தரும் சக்தி நாம் கொண்டுவரப் போகும் மணிமுடியிடமே இருக்கிறது!"

"என்ன?"

"ஆமாம்; மணிமுடி என்பது வெறும் தங்கமோ, தங்கத்தில் பதித்த நவரத்தினக் கற்களோ அல்ல! ஒரு நாட்டின் அரசுரிமைச் சின்னம் அது. அதனால் தான் தமிழ்நாடு முழுவதும் இப்போது சோழப் பேரரசுக்குள் இருக்கிறதென்றாலும், பாண்டியப் பகுதி மட்டும் இன்னும் தங்களிடமே இருக்கிறதென்று ரோகணத்தரசர் பறைசாற்றிக் கொண்டிருக்கிறார். நமக்குத் திறை செலுத்தும் மூன்று பாண்டியர்களும் அதை ஒப்புக்கொண்டு அதனால் பெருமை வேறு பேசுகிறார்கள். அந்த அரசுரிமைச் சின்னங்கள் நம்மிடம் வரும் வரையில் அப்படித்தான் அவர்கள் பேசுவார்கள்."

"விந்தையாக இருக்கிறதே!" என்று நகைத்தான் இளங்கோ.

"இளங்கோ! மூன்று முறை போர் தொடுத்தும் நம்மால் அதைக் கொண்டு வர முடியவில்லையே என்ற தளர்ச்சி இன்னும் நமது மக்களிடையே பரவியிருக்கிறது. அந்தத் தளர்ச்சியை நீக்கித் தமிழர் கூட்டத்தைத் தலைநிமிர்ந்து நடக்கச் செய்யும் மந்திர சக்தி அந்த மணிமுடியிடம்தான் இருக்கிறது. அதை இங்கே கொண்டு வந்து விட்டால் இந்த நாடே அதனால் புது வாழ்வு பெற்று விடும். ஒவ்வொரு தமிழ் மகனும் தன் தலையில் அதைச் சூடிக் கொண்டதைப் போல் பெருமை பெறுவான். பகையரசர்கள் இச்செய்தி கேட்டு நடுநடுங்கிப் பதுங்குவார்கள். — இந்தப் பரம்பரையையே பகையஞ்சாப் பரம்பரையாக மாற்றும் திறன் அந்த ஒரே ஒரு மணிமுடிக்கு இருக்கிறது, இளங்கோ!"

# மேலான வாழ்க்கைக்கு மேன்மையான தயாரிப்புகள்



தரத்திற்கும் குறைந்த விலைக்கும் பெயர்போன நேஷனல்-எக்கோ ரேடியோக்களும் க்ளியர்டோன் தயாரிப்புகளும் நீங்கள் இஷ்டம் போல் தேர்ந்தெடுத்துக் கொள்ள விதவிதமானவை கிடைக்கின்றன.

## நேஷனல் எக்கோ

### ரேடியோக்கள்



**நேஷனல்-எக்கோ மாடல் A-732:** அதன் தரத்தில் தலைசிறந்த ஏஸி செட். 6 வால்வுகள், 3 பாண்டுகள். சிறப்பான தொனி. "மான்ஸூனைஸ்" செய்யப்பட்டது. ரூ. 335/- செட்



**நேஷனல்-எக்கோ மாடல் A-731:** இந்த "கிங் பிரமுக்" ரேடியோ, 7 வால்வுகளும் 8 பாண்டுகளும் கொண்ட சிறந்த ஏஸி செட். தெளிவாகக் குரலை பிரதிபலிக்கக்கூடியது. ஆர்.எப்.ஸ்டேஜுடனும் ட்யூன் செய்யப்பட்டது. வெளி ஸ்பீக்கரும் கிராமபோன் பிக்கப்பும் இணைக்க வசதியுள்ளது. "மான்ஸூனைஸ்" செய்யப்பட்டது. ரூ. 625/- செட்




க்ளியர்டோன் லாம்புகளும் உபகரணங்களும்



**க்ளியர்டோன் வாட்டர் பாயிலர்:** வெந்நீர் மற்றும் தண்ணீரும் ஜலம் வெகுசீக்கிரத்தில் தயார் செய்யக் கூடியது. ஸைஸுகள்: 3.5 காலன் மற்றும் 8 காலன். ஏஸி கரண்டில் இயங்குகிறது.



**க்ளியர்டோன் வீட்டு இஸ்திரிப்பெட்டி:** 7 ராத்தல் எடை, 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ். ஏஸி/டிஸி பேக்லைட் பிடி. பிரத்தியேகமான பட்டன் கருக்கள்.



**க்ளியர்டோன் பல்புகள் ப்ளோரஸண்ட் டியூபுகள் மற்றும் உபகரணங்கள்:** சிக்கனமானவை: பிரகாசமான ஒளிகொடுக்கச் சிறந்தவை.



**க்ளியர்டோன் எலக்ட்ரிக் கெட்டில்:** மூன்று பைண்ட் பிடிக்கக் கூடியது. க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 230 வோல்ட்ஸ், 750 வாட்ஸ். ஏஸி/டிஸி.



**க்ளியர்டோன் ட்வின் ஹாட் ப்ளேட்டுகள்:** சமையலுக்கு. இரண்டு ஹாட் ப்ளேட்டுகளுக்கும் தனித்தனி கண்ட்ரோல்கள் உள்ளன. 230 வோல்ட்ஸ். ஏஸி/டிஸி 3,500 வாட்ஸ்வரை மின்சாரப் பளுவைத் தாங்கக்கூடியது.



**க்ளியர்டோன் மடக்கு ஸ்டீல் நாற்காலிகளும் மேஜைகளும்** விதவிதமான வர்ணங்களில் கிடைக்கும். மிகுந்த சுகந்தரும் அமைப்புடன் கூடிய நாற்காலிகள். மெத்தையுடனோ அல்லது இல்லாமலோ கிடைக்கும்.




ஜெனரல் ரேடியோ அண்டு அப்ளையன்ஸஸ் பிரைவேட் லிட்.
ஆபேரா ஹவுஸ், பம்பாய்-4 • 3 மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா-13 • ப்ரேஸர் ரோட், பாட்னா • 1/18, மவுண்ட் ரோட், மதறாஸ்-2 • 36/79, ஸில்வர் ஜுபிலி பார்க் ரோடு, பெங்களூர் • ஜோக்கியன் காலனி, சாந்தினி சௌக், டெல்லி • ராஷ்டிரபதி ரோட், செகந்திராபாத்

GRA.

வியப்பு மேலிட்டால் இளங்கோவின் வாய் அடைத்து விட்டது. சில விநாடிகளுக்கு முன்பு அவனுள் எழுந்த அரைகுறைச் சிந்தனைகளை நினைத்தபோது அவனுக்கே வெட்கமாக இருந்தது. மலை போல் வீற்றிருந்த அநுபவத்தின் சிகரமான மாமன்னர் தன்னையும் ஒரு பொருட்டாக மதித்துப் பேசியதால் அவன் பெருமகிழ்ச்சி கொண்டான்.

"இளங்கோ! உன்னிடம் நான் இவ்வளவையும் விளக்கிச் சொல்வதற்குத் தகுந்த காரணம் இருக்கிறது" என்றார் சக்கரவர்த்தி.

இளங்கோ தன் தலையை உயர்த்தி அவர் முகத்தைப் பார்த்தான்.

"நீதான் மன்னர் மகிந்தனிடம் தூது செல்லப் போகிறாய்! தூதில் வெற்றி பெறவிட்டால் வாள் முனையில் அவரைச் சந்திக்கப் படை நடத்திச் செல்பவனும் நீதான்!"

மெய் சிலிர்த்தது இளங்கோவுக்கு.

"முன்னரே என் தந்தையார் காலத்தில் என்னிடம் புறமுதுகு காட்டி ரோகணத்துக் காட்டுக்குள் நுழைந்தவர் அவர். அவருடைய படையில் இருப்பவர்களில் பலர் சேர-பாண்டியப் பகுதிகளைச் சேர்ந்த தமிழ் வீரர்கள். கோழையான மகிந்தனுக்கு எதிராகவும் அவரைக் காக்கும் தமிழர்களுக்கு எதிராகவும் நான் வாள் பிடிக்க விரும்பவில்லை.—பொறுப்பு உன்னுடையது; வல்லவரையர் உனக்குத் துணையாக நின்று வழிகள் சொல்வார்."

மாமன்னருடைய மாண்பு ஒருபுறமும் தன்னிடம் அவர் கொண்டுள்ள நம்பிக்கை மறுபுறமும் இளங்கோவைப் பிரமிக்க வைத்தன. நன்றிப் பெருக்கால் அவன் கண்கள் கலங்கின. "மாபெரும் பாக்கியம் செய்திருக்கிறேன், சக்கரவர்த்தி! வெற்றி பெற வேண்டுமென்று இப்போதே ஆசீர்வதித்தருளுங்கள்!" என்று அவர் முன்பு மண்டியிட்டு வணங்கினான் இளங்கோ.

அவனுடைய தோளைத் தமது அன்புக் கரத்தால் பற்றி, "எம்பெருமான் நமக்கு வெற்றிதருவார்" என்று உள்ளம் குழைய வாழ்த்தினார் இராஜேந்திரர்.

வாழ்த்தி விட்டு, "போர் நடக்குமானால் நானும் வீரர்களுக்கு மத்தியில் எப்போதும் உலவிக் கொண்டுதான் இருப்பேன்; வாளெடுக்க மாட்டேனே தவிர, முன்னணியில் உன் அருகில் அடிக்கடி என்னைக் காணலாம்" என்றார். "கூடுமான வரையில் என் விரதத்தைக் காப்பாற்றுவதற்கு நீ முயல வேண்டும்."

"தாங்கள் என்ன கூறுகிறீர்கள் சக்கரவர்த்தி?" என்று கேட்டான் இளங்கோ.

"ஒருவேளை, உனக்கும் வல்லவரையருக்கும் என் துணை அவசியம் என்று தெரிந்தால், அப்போது நான் வாளெடுத்துத்தானே தீரவேண்டும்? மன்னர் மகிந்தனைக் கோழையென்று பார்த்தால் முடியுமா? அவருடைய படைவீரர்களில் பலர் தமிழர்கள் ஆயிற்றே என்று தயங்கினால் முடியுமா?"

"அந்த நிலை வராமல், தங்கள் விரதத்துக்குப் பங்கம் நேராமல் நாங்கள் இருவரும் பார்த்துக் கொள்ளுகிறோம், சக்கரவர்த்தி!"

"பொது மக்களின் உயிரைப் பொன்னாக மதிக்க வேண்டும் என்பதையும் மறந்து விடாதே. நம்முடைய வீரர்களில் எவனாவது சிறுவர், முதியோர், பெண்டிர் இவர்களுக்குத் தீங்கு செய்ய முனைந்தானானால் அதே இடத்தில் அவன் தலையைத் தரையில் உருளச் செய்துவிடு!"

"சித்தம், சக்கரவர்த்தி!"

பகல் இரவாகி, மறுநாள் காலைப் பொழுது பலபலவென்று விடியத் தொடங்கியது. தெற்கு வான வீதியில் கூட்டங் கூட்டமாகக் கடற் பறவைகள் பறந்தன. பசுமையான திட்டைப் போல் ஏதோ ஒன்று தொலை தூரத்தில் தெரிந்தது. "அதோ பார், ஈழ மண்டலம்!" என்று இளங்கோவுக்குச் சுட்டிக் காட்டினார் இராஜேந்திரர்.

பரபரப்போடு இளங்கோவேள் வல்லவரையரிடம் ஓடிப் போய், "தாத்தா! தாத்தா! இன்னும் என் நெற்றிப் பொட்டு அழிந்துவிடாமல் இருக்கிறதா, தாத்தா?" என்று கேட்டான்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# வாள் முனையும் வேல் விழியும்

முதற் கப்பலில் சென்ற கடற்சேனை மாதண்டநாயகரான மாவலிவாணராயர், மற்ற மரக்கலங்களையும் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தச் செய்து விட்டு, மாமன்னரின் கட்டளைக்காகக் காத்து நின்றார். சக்கரவர்த்தியையும் வீரர்களையும் வரவேற்பதற்காக ஜனநாதமங்கலத்திலிருந்து ஈழத்துப் பிரதிநிதி தாழிகுமரனும் பெருங் கூட்டத்துடன் வந்திருந்தார். வரவேற்பு ஆரவாரங்களும், குதூ

கலக் குரல் ஒலிகளும், முரசுகளின் முழக்கங்களும், ஈழத்து யானைகள் துதிக்கைகளை வளைத்துத் தூக்கிப் பிளிறிய பிளிறல்களும் ஒன்றோடொன்று போட்டியிட்டுக்கொண்டு ஒலித்தன.

மாமன்னரின் சிரத்தில் மலர் தூவி, அவரை மண்டியிட்டு வணங்கி, அவருக்கு நல்வரவு கூறியது ஜனநாதமங்கலத்து மாளிகையின் கொம்பன் யானை.

"மாவலி வாணராயரே! சரி பாதிக் கப்பல்களைத் தெற்கே ரோகணத்துக் கடற்கரைக்குக் கொண்டு போய்ச் சேருங்கள். எங்கெல்லாம் நங்கூரம் பாய்ச்ச முடியுமோ அங்கெல்லாம் பாய்ச்சி நிறுத்தி வையுங்கள். நம்மை யாரும் எதிர்க்கத் துணியாத வரையில் நம்முடைய வீரர்களில் எவரும் ஆயுதங்களைத் தொட வேண்டாம். அமைதியா, போர்தானா என்பதைத் தெரிந்து கொண்டு உங்களுக்கு ஆள் அனுப்புகிறேன். அவசியமென்றால் தெற்கிலிருந்து நம் வீரர்கள் **கப்பகல்லகம்** கோட்டையை நோக்கி முன்னேறலாம்."

தாழிகுமரன் அனுப்பி வைத்த வழிகாட்டிகளை உடன் அழைத்துக் கொண்டு மாமன்னரின் கட்டளையை நிறைவேற்றுவதற்காகக் கடற்சேனைத் தலைவர் மீண்டும் தம் கலமேறினார்.

எஞ்சியிருந்த வீரர்களில் ஒரு பகுதியினர் அங்கேயே தங்க, ஏனையோர் ஜனநாதமங்கலம் நோக்கிப் புறப்பட்டார்கள். சிறிய மரக்கலங்களில் மாவலி கங்கை நதியின் வழியாகச் செல்வோரும் யானைகளிலும் புரவிகளிலுமாகத் தரைமார்க்கமாகச் செல்வோருமாகப் பெருந்திரளான வீரர்கள் கிளம்பினர். சோழ நாட்டு இளம் காளையர்கள் நிறைந்த கூட்டத்தால் அந்த நகரமே பொங்கி வழிந்தது.

மறுநாள் கிழக்கு வெளுத்தது. ஜனநாத மங்கலத்து அரச மாளிகையிலிருந்து ஒரு முதியவரும் இளைஞன் ஒருவனும் தெற்கு நோக்கிக் குதிரைகளில் கிளம்பினார்கள். சாமந்தநாயகருக்குரிய ஆடை அணிகள் வந்தியத் தேவரிடம் இல்லை; கொடும்பாளூர் இளவரசனுக்குள்ள அலங்காரங்கள் இளங்கோவிடம் இல்லை. எளிய உடைகளுக்குள்ளே பதுங்கியிருந்த இரு வலிய மனிதர்களும் ரோகணத்து மன்னர் மகிந்தனிடம் தூதுவர்களாகச் சென்றார்கள்.

குதிரைகள் விரைந்து சென்றபோது, ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ள முடியவில்லை. வந்தியத்தேவருடன் ஒன்றாகச் செல்லும்போதுதான் அவருடைய இளமையை அவனால் கணக்கிட முடிந்தது. எப்போதாவது குதிரையின் வேகத்தைக் குறைத்து அவனிடம் பேச்சுக் கொடுப்பார். மீண்டும் அவனிடம் பந்தயத்துக்குச் சவால் விடுவதுபோல் அதனை விரட்டுவார். மேல்மூச்சுக் கீழ் மூச்சு வாங்க அவரைப் பின்பற்றுவான் இளங்கோவேள்.

புரவிகள் சிறு நடை போட்டன. "ஏன் தாத்தா உங்கள் உருவத்தையே மாற்றிக்கொண்டு மாறுவேடத்தில் வருகிறீர்கள்?" என்று கேட்டான் இளங்கோ. அவன் உடை மாற்றிக் கொண்டுவர, அவரோ தம் உருவத்தையே அடியோடு மாற்றிக் கொண்டிருந்தார்.

"எனக்கு இது பழக்கமான இடம். மகிந்தனுக்கும் அவருடைய அதிகாரிகளுக்கும் என்னை இன்னாரென்று தெரியும். முதன் முதலில் ராஜராஜர் காலத்தில் வந்திருக்கிறேன். பிறகு ராஜேந்திரருடன் வந்து போர்க்களத்தில் அவர்களைச் சந்தித்திருக்கிறேன். என்னை இலேசில் மறந்திருக்க மாட்டார்கள் அவர்கள்!"

பயங்கரமான காடுகள் குறுக்கிட்டன; செங்குத்தான மலைகள் எதிர்ப்பட்டன; சிற்சில இடங்களில் அருவிகள் சீறிக் கொண்டு பாய்ந்தன. ஒரு கல் தொலைவைக் கடப்பதற்காக மலையைச் சுற்றி வளைத்துக்கொண்டு ஒன்பது கல் தூரம் அலையவேண்டியிருந்தது. புரவிகளிலிருந்து கீழே குதித்துச் சில இடங்களில் கடிவாளங்களைப் பிடித்து இழுத்துக் கொண்டு நடந்தார்கள்.

"இந்தப் பகுதிக்குத்தான் மலையரதம் என்று பெயர். இந்த மலைநாடு குறுக்கே இருப்பது ரோகணத்துக்குப் பெரிய பாதுகாப்பு. ஒரு பக்கம் மலைகளும் மற்றப் பக்கங்களில் கடல்களும் இருப்பதால், அவர்கள் காலங்காலமாக இங்கே மணிமுடியைப் பதுக்கி வைத்துக்கொண்டு நம்மைத் திருப்பி அனுப்புகிறார்கள்."

"அரண்மனையில் தானே முடியை வைத்திருப்பார்கள்?" என்று கேட்டான் இளங்கோவேள்.

"யார் கண்டார்கள்? அரண்மனையிலும் இருக்கலாம். ஏதாவது ஒரு மலைக் குகையிலும் இருக்கலாம். அல்லது புத்த விஹாரங்களில் ஒன்றைத் தேடிப்பிடித்து அதற்குள் ஒளித்து வைத்தாலும் வைத்திருக்கலாம்."

"புனிதமான புத்தர்பிரானின் ஆலயங்களை இது போன்ற காரியங்களுக்குப் பயன்படுத்தலாமா, தாத்தா?"





"இந்தக் கேள்வியை நீ என்னிடம் கேட்டால் நான் எப்படிப் பதில் சொல்வேன்? பார்க்கப்போனால், அவர்களுக்கு மற்ற எல்லா இடங்களையும்விட மிகவும் பத்திரமான இடம் அதுதான்! நம்முடைய பேரரசோ மற்றவர்களுடைய சமயப் பழக்க வழக்கங்களில் தலையிடாதது. வழிபாடு நடக்குமிடம் என்று தெரிந்தால், காதவழி ஒதுங்கி நடக்கச் சொல்லி நம்முடைய வீரர்களுக்குக் கட்டளை. நம்முடைய பெருந்தன்மையை அவர்கள் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டால் அதில் என்ன தவறு?"

"போங்கள், தாத்தா!" என்று சிணுங்கினான் இளங்கோ. "துறவிகளுக்கு ஒரு தொல்லையும் கொடுக்காமல் சோதனை யிட்டுப் பார்க்க முடியாதா?"

"அடேயப்பா, என்ன துணிச்சல் உனக்கு!" என்று சிரித்தார் கிழட்டுத் தூதர். "பிறகு அவர்கள் என்ன செய்வார்கள், தெரியுமா? 'இந்தச் சோழ நாட்டுக் கிராதகர்கள் அரக்கர்களைப் போல் பாய்ந்து வந்து விஹாரங்களை இடித்தார்கள். துறவிகளை இம்சித்தார்கள், புத்தர்பிரானுக்குச் சொந்தமான பொன்னையும் மணிகளையும் கொள்ளை யடித்தார்கள்' என்றெல்லாம் கதை கட்டி விடுவார்கள். பிறகு அந்தக் கட்டுக் கதைகளையே சரித்திர உண்மைகளாக்கி விடுவார்கள்."

வழியில் தென்பட்ட மலைக்குகைக்குள் நுழைந்து ஆராய வேண்டுமென்ற துடிப்பு அப்போதே இளங்கோவுக்கு ஏற்பட்டது. வந்த வேலையை அவனுக்கு நினைவுபடுத்தி, அவனைக் கட்டுப்படுத்தி அழைத்துக்கொண்டு போவதற்குள் கிழவர்பாடு பெரும்பாடாகி விட்டது. "இந்த இளமைப் பருவமே பொல்லாத பருவம்! எடுத்த காரியத்தை மறந்து விட்டு குறுக்கே எங்கெங்கோ பாயப் போகிறாயே? பேசாமல் என் பின் வா."

அவர் பின்னால் பேசாமல் அவனால் போக முடியவில்லை. வழியில் எதிர்ப் பட்டவர்களிடமெல்லாம் அவர் தங்களைப் பற்றி வேறு வேறு கதைகள் சொல்லிக்கொண்டு போனார். வாள் வீசவேண்டிய நெருக்கடியான கட்டங்கள் சில ஏற்பட்டன. வாய் வீச்சினாலேயே அவற்றைச் சாமர்த்தியமாகத் தாண்டிக் கொண்டு போனார் கிழவர்.

"தூதுவர்கள் என்று உண்மையைச் சொன்னால் என்ன வந்துவிடும்?" என்று கேட்டான் இளங்கோ.

"சொல்ல வேண்டிய இடத்தில்தான் உண்மையைச் சொல்ல வேண்டும்."

வழியில் அவர் நடத்திச் சென்ற நாடகங்கள் அவனுக்கு வயிறு வெடிக்குமளவுக்குச் சிரிப்பு மூட்டின. அவர் விழித்த விழிப்பால் சிரிப்பை அடக்கிக்கொண்டு அவரைப் பின்பற்றினான்.

அன்றைய இரவை ஓர் மலைச்சாரல் பிளவில் கழித்துவிட்டு, அடுத்த நாள் முற்பகல் கப்பகல்லகம் கோட்டை வாயிலுக்குள் நுழைந்தார்கள் இருவரும். அதற்கு முன்பாகவே அவனிடம் ஓலையைக் கொடுத்து, "நீதான் தூதுவன்; நான் உன்னோடு துணைக்கு வந்தவன். தெரிந்ததா? இனிமேல் நீதான் பேச வேண்டும்" என்றார். மேலும் அவனிடம் ரகசியமாக, "அரண்மனைக்குள்ளேயும் வெளியிலும் கண்ணோட்டம் விட்டு, வழி வாயில்கள், சுற்றுச் சுவர்கள் முதலியவைகளைக் கவனித்துக்கொள்; திரும்பவும் இங்கு வரவேண்டியிருந்தால் வழி தெரியாமல் விழிக்கக் கூடாது" என்றார்.

தூதுவர்கள் வந்திருக்கும் செய்தி காவலர்களின் வாயிலாக அரண்மனைக்குள் எட்டியது. மன்னர் மகிந்தன் உடனடியாக அதிகாரிகளைச் சபாமண்டபத்தில் கூட்டுவித்தார். தெற்குக் கடற்கரையை நோக்கிச் சோழ நாட்டுக் கப்பல்கள் வந்துகொண்டிருக்கும் செய்தி அவருக்கு அன்று காலையில்தான் கிடைத்தது. இதனால் ஏற்கனவே பரபரப்படைந்திருந்தவர் தூதுவர்களின் வருகை கேட்டவுடன் இடிந்து போய் விட்டார். என்றாலும் அவரது மதிமந்திரிகள் அவருக்குத் துணிவூட்டினர்.

சபைக்குள் நுழைந்து வணக்கம் செலுத்தினார்கள் தூதுவர்கள். அரசவையை ஒட்டினாற்போல் இருந்த மேன்மாடத்தையோ அதில் நின்றுகொண்டு வேல் விழிகளால் தன்னைப் பார்த்துக் கொண்டிருந்த எழில் மங்கையையோ இளங்கோ கவனிக்கவில்லை. வல்லவரையர், அவளையும் அவளருகே சிறிய குத்துவாளுடன் நின்று கொண்டிருந்த சிறுவனையும் ஒரு கண்ணோட்டத்தில் பார்த்துக்கொண்டார்.*

"சோழேந்திர சிம்மன் பரகேசரி ராஜேந்திர சோழர் அவர்களிடமிருந்து திருமுகம் கொண்டு வந்திருக்கிறேன்" என்று பணிவோடு ஓலையை நீட்டினான் இளங்கோவேள்.

---

* வல்லவரையர் கண்ட அந்த மங்கையையும் சிறுவனையும் இவ்விதழ் அட்டையிலே வண்ண ஓவியமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியக் கலைஞர் வினு.

அதைத் தமக்கருகே இருந்த அமைச்சரிடம் நீட்டினார் மகிந்தன். அமைச்சர் உரத்த குரலில் படிக்கலானார்:—

"தொண்டைமண்டலம், சேரபாண்டிய மண்டலம், காவிரி மண்டலம், வட ஈழ மண்டலம், பழந்தீவு பன்னீராயிரம் இவற்றுக்குச் சக்கரவர்த்தியான சோழ வளநாட்டு இராஜேந்திர உடையார், ரோகணத்து அரசர் ஐந்தாம் மகிந்தன் அவர்களுக்கு எழுதிய திருமந்திர ஓலை. ராஜசிம்ம பாண்டியன் தங்களுடைய முன்னோர்களிடம் விட்டுச் சென்ற மணிமுடி, இந்திர ஆரம், உடைவாள் முதலிய அரசுரிமைப் பொருள்கள் தங்களிடம் இருப்பதாக அறிகிறோம். பாண்டியநாடு சோழப் பேரரசுக்குள் ஒடுங்கி விட்டதால் அதன் அரசுரிமைப் பொருள்கள் சோழப் பேரரசைச் சேர்ந்தவை. அவற்றைத் தாங்கள் எங்களிடம் கொடுத்து விடுவதே முறையாகும்.

"மேலும், பாண்டிய சேரச் சிற்றரசுகள் சோழப் பேரரசுக்கு எதிரான செயல்களில் ஈடுபடத் தொடங்கியுள்ளன. அவற்றுக்குத் தாங்கள் ஆக்கம் தந்து எங்கள் உள்நாட்டின் அமைதியைக் குலைக்க வேண்டாம் என்றும் கேட்டுக் கொள்ளுகிறோம்.

"அரசுரிமைப் பொருள்களைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். பேரரசுக்கு எதிரான செயல்களில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ கலந்து கொள்ளாதீர்கள். இந்த இரண்டு கோரிக்கைகளுக்கும் தாங்கள் உடன்பட்டால் தாங்கள் சோழப் பேரரசின் நண்பராக, ரோகணத்தின் அரசராக இருக்கலாம். இல்லையேல் பின் விளைவுகளின் பொறுப்பைத் தாங்களே ஏற்க வேண்டி வரும்."

"இல்லாவிட்டால் என்ன செய்துவிடுவீர்கள்?" என்று சீறினார் திருமந்திர ஓலையைப் படித்த அமைச்சர். மன்னர் தம் வாயைத் திறக்கவில்லை.

"உடன்பட்டால் ஈழத்தில் படை இறங்கியிருக்கும் ஒரு லக்ஷம் வீரர்களும் ரோகணத்தை வாழ்த்திக் கொண்டு திரும்பிச் செல்வார்கள். இல்லையேல்..."

"அவர்கள் ரோகணத்தை வீழ்த்தி விடுவார்களோ?"

"மன்னரின் சித்தம் எதுவோ அதை மாமன்னரிடம் தெரிவிக்கிறேன்" என்று மகிந்தனின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் இளங்கோ. அவருடைய நரம்புகளின் நடுக்கம் அவர் முகத்தில் தெரிந்தது. அதைப் பயன்படுத்திக்கொண்டு, "ஒரு லட்சம் வீரர்களை இந்தச் சிறிய நாடு தாங்குமா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள், அரசே! சோழ வள நாட்டின் நானூறு கப்பல்கள் இப்போது

இந்தத் தீவைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றன'' என்றான்.

மகிந்தன் அமைச்சரை நோக்கினார்.

''மூன்று முறை முயற்சி செய்து பார்த்தார்களே, முடிந்ததா? முடியாதென்று சொல்லுங்கள்!'' என்று மகிந்தனிடம் கூறினார் மந்திரி.

''மூன்று முறை பதுங்கிய வேங்கை, இப்போது பாய்ந்து முடியுடன் திரும்பப் போகிறது, அரசே!''

மன்னர் பதுங்க, மதியமைச்சர், ''பாயட்டும், பார்ப்போம்!'' என்றார்.

''போர் முனையில் சந்திப்பதற்குச் சித்தமாகும்படி கூறினார் எங்கள் மாமன்னர்'' என்று கூறி விட்டு, வணக்கம் செலுத்துவதற்காகத் தலை குனிந்து கரம் குவிக்கப் போனான் இளங்கோ. எதையோ கண்டு திடுக்கிட்டவர் போல் வல்லவரையர் இளங்கோவின் தோளைப் பற்றி அவனை அப்பால் தள்ளிவிட்டார்.

அவர் தள்ளிவிட்ட அதே நேரத்தில் மின்னலெனப் பாய்ந்து வந்தது ஒரு குத்துவாள். குறி, தவறாத குறி! இளங்கோ அங்கு நின்றிருந்தானானால் அவனுடைய பரந்த மார்பை ஊடுருவியிருக்கும் அந்தச் சிறு வாள்.

அருகிலிருந்த மரத் தூணில் ஒரு கீறலை ஏற்படுத்தி விட்டுக் கீழே விழுந்தது அது.

இளங்கோ, வாள் வந்த திக்கில் தலையை உயர்த்திப் பார்த்தான். மேல் மாடத்தின் கைப்பிடிச் சுவரருகே தெரிந்த இரண்டு வேல் முனைகள்தான் முதலில் அவன் கண்களில் பளிச்சிட்டன. வேல் முனைகளைப் போன்ற இரு கூர் விழிகள் அவை. 'அந்த வேல்விழியாள் தானா என்மேல் வாளெறிந்தவள்? என்னிடம் என்ன கோபம் அவளுக்கு? தூதுவனை இந்த நாட்டில் மதிக்கும் பண்பு இது தான் போலும்! — வாளையும் எறிந்து விட்டு, ஏன் அப்படிப் பயந்து விழிக்கிறாள்? பரபரப்பைக் கொட்டுகிறாள் கண்களின் வழியாக?'

அவள் தன் அருகில் இருந்த ஒரு சிறுவனின் கரத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டு, அவன் மீது சீறி விழத் தொடங்கவே, வாளெறிந்த குற்றம் அவளுடையதல்ல என்று தெரிந்து கொண்டான் இளங்கோ.

வேல் விழி வீசிய குற்றமே அவளுடையது, வாள் எறிந்த சிறுவன் அவளிடம் அகப்பட்டுக் கொண்டு திணறினான். இளங்கோவை அவன் பார்த்த பார்வையில் எரிதழல் கொழுந்து விட்டது. 'பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுவனா இவ்வளவு திறமையோடு வாள் வீசுகிறான்! அவன் விழிகளில் வீரம் துளும்புகின்றதே!' என்று ரசிக்கத் தொடங்கினான் இளங்கோ.

''தம்பி! இது அரச சபை; போர் முனையல்ல. நான் தூதன்; உன் எதிரியல்ல!'' என்று சிரித்தான் இளங்கோ.

''நாளைக்கு நீ என் எதிரிதானே?''

''பாவம்! நீ சிறு பிள்ளை, — இந்தா, இந்தச் சிறு வாளை நீயே வைத்துக் கொள். பழம் நறுக்கி உண்ணலாம்!'' என்று அதை எடுத்து, லாகவமாக மேலே சுழற்றி வீசினான் இளங்கோ.

மேல் மாடத்திலிருந்த அந்தச் சிறுவன் அதை எட்டிப் பிடிக்கவே, இளங்கோவின் வியப்பு பதின்மடங்காகியது. திரும்பவும் எங்கே அவன், இளங்கோவின் உயிரையே உண்ணும் பழமாக நினைத்துவிடுவானோ என்ற பயத்தில், அந்த வேல்விழியாள் அவனிடமிருந்து வாளைப் பறித்துக் கொண்டாள்.

வாள்முனை குடிக்கத் தவறிய உயிரை வேல் முனைகள் துளைக்கத் தொடங்கின. வேல்விழிகள் இரண்டு தன்னையே நோக்கிப் பாய்ந்து கொண்டிருப்பதாக நினைத்தான் இளங்கோ.

மெதுவாக வந்தியத் தேவர் அவன் காதருகில் சென்று, ''நீ வந்த வேலை முடிந்து விட்டது, இளங்கோ!'' என்றார்.

அவர்கள் வெளியே வந்தார்கள். ''அரண்மனையில் பார்க்க வேண்டிய இடங்களை யெல்லாம் பார்த்து வைத்துக் கொள்ளச் சொன்னேனே!'' என்றார் வல்லவரையர், புன்னகையுடன்.

''ஆமாம்; பார்த்தேன்'' என்று தடுமாறினான் இளங்கோ. (தொடரும்)

கொச்சைத் தமிழ்

## வக்கணைப் பேச்சு!

''விண்ணாணம்' என்பது கொச்சைத் தமிழிலே வழங்கும் மற்றொரு சொல். 'விஞ்ஞானம்' என்ற அருமையான சொல்லே 'விண்ணாணம்' என்று சிதைந்திருப்பதாகத் தோன்றுகிறது. வக்கணையாகவும் தோரணையாகவும் பேசும் பேச்சுக்கு விண்ணாணம் என்பது பெயர். குற்றாலக் குறவஞ்சி நாடகத்தில் சிங்கி என்னும் பெயருடைய குறத்தியை 'விண்ணாணச் சிங்கி' என்று கூறுகின்றான் அவள் காதலனாகிய குறவன். விண்ணாணம் பேசும் சிங்கியைக் காணாமல் கவலையுறும் குறவன் பாட்டுச் சாலவும் இனியதாகும். — பேராசிரியர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை

# படித்துப் பாருங்கள்

## ஸ்துதி மணிமாலை

ஐம்பத்தொரு புதிய தமிழ் கீர்த்தனைகள் ஸ்வர சாகித்யங்களுடன் அழகாக அச்சிடப்பட்டு வெளிவந்துள்ள இந்தப் புத்தகத்தைப் பார்த்தவுடனே இது நன்றாகத்தான் இருக்க வேண்டு மென்று எண்ணத் தோன்றுகிறது. இதன் ஆசிரியர் நீலா ராமமூர்த்தி ஏற்கனவே தமிழ்க் கீர்த்தனைகள் பலவற்றை இயற்றித் தமிழுலகுக்கு அளித்துப் பிரபலமடைந்துள்ள திரு பாபநாசம் சிவனின் புதல்வி. தகப்பனுக்குள்ள கவனம் செய்யும் சாமர்த்தியமும் உயர் இசை ஞானமும் புதல்விக்கும் இருப்பது இயல்பேயன்றோ. மற்றொரு காரணம், இந் நூல் சிறப்பாக ரசிகர்கள் அறிஞர்கள் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது. மேலும் இதற்கு ஆசியளித்துச் சிறப்புரை கூறியவர்கள் சங்கீதத் துறையில் முன்னணியில் நிற்பவர்கள்; இசை பயிலுவிக்கும் ஆசிரியர்கள். இவர்களுடைய பேராதரவைத் தாங்கி வரும் நூல் உயர்தரமாகத்தான் இருக்கும் என்று எதிர்பார்க்கலா மல்லவா?

எதிர்பார்த்தது வீண் போகவில்லை. சொல் நயமும் பொருள் நயமும் கொண்டு அமைந்துள்ள சாகித்யங்கள் பக்திப் பெருக்கையும் உள்ளத் தூய்மையையும் உண்டாக்கக் கூடியவை. எளிய சொற்களைக் கொண்டே புனையப்பட்டிருப்பதால் சாகித்தியங்கள் எல்லோருக்கும் புரிவதுடன் சுலபமாக இசைப் பள்ளிகளில் அப்யசிக்க ஏற்றவையாக உள்ளன. ரஞ்சகத்துவமுள்ள சில கீர்த்தனைகள் மேடைக் கச்சேரிகளில் பாடத் தகுந்தவையே. ஷண்முகப்ரியாவில் ''வேலனை நினை'', காபி ராகத்தில் இயற்றப்பட்ட ''பித்தன் என்று'', கௌளை ராகத்தில் அமைந்துள்ள ''தருணம் இதம்மா'', மோகனத்தில் இயற்றியுள்ள ''பதும நாபசோதரி'' முதலிய கீர்த்தனைகளில் பொருள் நயத்துடன் இசையமைப்பும் சிறப்பாக உள்ளது.

தமிழ் மறுமலர்ச்சியில் தமிழ்ப் பாட்டுகளுக்குக் குறைவில்லை. ஆனால் உயர்ந்த சாகித்யங்களானாலும் பிரசாரத்திலில்லாவிட்டால் அவற்றின் சிறப்பு குன்றிவிடும். பாடிப் பாடி மெருகேறினால்தான் புது சாகித்யங்களின் சிறப்பு வெளிப்படும். சங்கீத வித்வான்களின் முயற்சியும் ஒத்துழைப்பும் இதற்குத் தேவை. இந் நூலாசிரியை நீலா ராமமூர்த்திக்கு வித்வான்கள் பலரின் ஒத்துழைப்பு கிடைக்குமென்றே எதிர்பார்க்கலாம்.

இப்போது வெளிவந்துள்ள நூல் முதல் பாகம்தான். இரண்டாவது பாகமும் சீக்கிரமே வெளிவரும் என்று எதிர்பார்க்கலாம்.

ஆசிரியை: நீலா ராமமூர்த்தி; வெளியிட்டோர்: ராஜன் அண்டு கம்பெனி, சென்னை-1 கிடைக்குமிடம்: ஆசிரியை, 9, சீனிவாசன் தெரு, அடையாறு சென்னை-4. விலை: ரூ. 3-50

## ராஜஸ்தானத்து அந்தப்புரங்கள்

பழைய கணக்கைப் புரட்டிப் பார்க்கிறான் பசித்தவன். அப்படி அவன் செய்வதில் ஒரு நன்மை இருக்கிறது. கடந்த காலத்தில், அவன் செய்த தவறுகளைத் திருத்திக் கொள்ளவும் வருங்கால வாழ்க்கைக்கு வழி வகுத்துக் கொள்ளவும் அவனது அந்தச் செய்கை உதவுகிறது.

அதேபோல், வரலாற்று நூல்கள் பல, வருங்காலச் சமூக வாழ்க்கையை வளமுறச் சமைத்துக் கொள்ள உதவுகின்றன; அடிகோலுகின்றன. ஸ்ரீ ராகுல் சாங்கிருத்தியாயன் என்னும் பிரபல ஹிந்தி ஆசிரியர் எழுதியுள்ள 'ராஜஸ்தானத்து அந்தப்புரங்கள்' என்னும் இந்த வரலாற்று நூல், அந்தப்புரங்களில் அடைந்து பல இன்னல்களுக்கு இலக்காகி வாழ்ந்த ராஜபுதனத்துப் பெண்மணிகளின்-அதுவும் சமீப காலத்திலே வாழ்ந்து பல அல்லல்களுக்கு உட்பட்ட பெண்மணிகளின் சோக வரலாற்றைச் சுவைபட எடுத்துக் கூறுகிறது.

நவீனத்துக்குரிய இலக்கணக் கோட்பாடுகளைக் கடைப்பிடிக்காமல் இருந்த பொழுதிலும், ராணி கௌரியைக் கதாநாயகி ஆக்கி, அவளைச் சுற்றிச் சரித்திரச் சான்றுகளைப் படரவிட்டு நவீனமான முறையில் அமைத்திருக்கும் இந்த நூலை நயம்பட ஸ்ரீ சௌரி அவர்கள் தமிழில் வழங்கியுள்ளார்கள்.

மொழிபெயர்ப்பு பொன்னுக்கு மெருகேற்றினாற்போலச் சிறப்பாக அமைந்துள்ளது.

பிரசுரம்: கலைஞன் பதிப்பகம், தியாகராய நகர், சென்னை-17. விலை: ரூ. 3-50.

## ஸ்ரீ லலிதா-ருத்ர த்ரிசதீ நாமாக்களும் ஸ்ரீ லலிதா அஷ்டோத்தரமும்

அன்னை பராசக்தியை லலிதா பரமேச்வரி வடிவத்தில் உபாசனை செய்பவர்களுக்குக் காதி வித்யா சம்பிரதாயப்படி மந்திரங்கள் அமைந்தது லலிதா த்ரிசதி என்பது பிரசித்தம். முறைப்படி தீட்சை பெற்றுப் பாராயணம் செய்வோர்க்கு இஷ்டமான பலன்களை அளிக்க வல்லது என்பதும் யாவருமறிந்ததே. இதே போல் வேதத்தின் ஒரு பாகமாகிய ருத்ராத்யாயத்தில் பொதிந்துள்ள ருத்ர த்ரிசதியும் பரமேச்வர உபாசனையில் முதலிடம் பெற்றது என்பதும் வெளிப்படை. இவ்விரண்டையும் ஒன்றாக இணைத்து, அம்பிகையையும் சிவனையும் தனித்தனியே உபாசனை செய்வதை விட, சேர்த்தே உபாசிப்பது அர்த்தநாரீச்வர தத்துவத்துக்குச் சாலவும் ஏற்றது என்பதை உணர்த்தும் வகையில் இரண்டு திரிசதிகளையும் சேர்த்துத் தந்திருக்கிறார் ஆசிரியர் சோமதேவ சர்மா.

இது ஒரு புதுமையான படைப்பு. பாராயணம் செய்வதில் பற்றுள்ள ஆஸ்திகர்களிடம் அவசியம் இருக்க வேண்டிய ஒரு நூல் இது.

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ வே. சோமதேவ சர்மா; கிடைக்குமிடம்: மாம்பலம் குருகுல வெளியீடு, 2, ஸ்டேஷன் ரோடு, மேலமாம்பலம், சென்னை-17. விலை: ரூபாய் ஒன்று.

# ஆரியன்

## உங்கள் பற்களுக்குப் பொருத்தமானவை



உங்கள் பற்களின் பாதுகாப்பை சரியான அமைப்புள்ள ஆரியன் பிரஷ்"க்கு விட்டுவிட்டீர்களேயானால், அது உங்கள் பற்கள் முழுவதையும் முற்றிலும் நன்ருகச் சுத்தி செய்யுமென்பதை நீங்கள் உறுதி செய்துகொள்ளலாம்.

ஸ்டாண்டர்டு சைஸிலும் சிறிய சைஸிலும் கிடைக்கும். மிகவும் நேர்த்தியான உயர்ந்த ரகம்-பிளாஸ்டிக் பெட்டியில் கிடைக்கிறது.




நன்ருகச் சுத்திசெய்கிறது. நீடித்து உழைக்கக் கூடியது.

Aryan

Regd

பலனளிக்கும் சோப் நுரைக்கு ஆரியன் ஷேவிங் பிரஷையே எப்பொழுதும் உபயோகியுங்கள்.

---



வலிமைக்கு புலி மார்க்கு தேயிலே

# புலி மார்க்கு தேயிலே




LIPTON (INDIA) LIMITED *(Incorporated in England)*

LTC-6 TM

மாலை மணி சரியாக நாலே முக்கால். அம்பா பேட்டை ரோட்டிலிருந்து தெற்கு ரத வீதிக்கு வந்து சேருகிறாரே, கறுப்புக் கண்ணாடி, சில்க் ஜிப்பா, நெற்றியில் அகலமான சவ்வாதுப் பொட்டு, ஒரு தோளில் மட்டும் நீளமாகத் தொங்கும் ஜரிகை மடிப்பு அங்கவஸ்திரம், காலில் கறுப்புநிற ஸ்லிப்பர் ஆகியவைகளோடு விபரீதமாக நடைபோட்டுக்கொண்டு நடக்கிறாரே, அவர்தான் திருநெல்வேலி மைனர். வலது காலை வேகமாகவும் இடது காலைச் சற்று மெதுவாகவும் போட்டு நடப்பதிலிருந்தே அவர் ஒரு மைனர் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

தெற்கு ரத வீதி முழுவதும் இந்த நடையில் நடந்து கீழ ரத வீதி திரும்பி, காந்திமதியம்மன் சந்நிதிக்கு அவர் வரும்போது சரியாக நாலு ஐம்பத்தைந்து ஆகும். அம்மன் சந்நிதியில் நின்று ஸ்லிப்பரைக் கழற்றி விட்டுத் தலை குனிந்து கண்களை மூடிக் குவித்துக் கும்பிட அரை நிமிஷம் பிடிக்கும். பிறகும் அதே நடை. தோடி போத்தி ஹோட்டலுக்குள் நுழையும் போது அங்குள்ள கடிகாரம் ஐந்து மணி அடித்து மைனரை வரவேற்கும். ஹோட்டல் முதலாளியும் புன்னகை தவழக் கும்பிடு போட்டு மைனரை வரவேற்பார். தெற்கு ரத வீதியிலிருந்து இங்கு வந்து சேரும் வரை எதிரே வருபவர்களிடம் அவர் பெற்றுள்ள கும்பிடுகளும், 'குட் ஈவினிங்'களும் ஏராளம். பிறர் நடக்காத ஒரு பாணியில் நடை போட்டு ரோட்டின் நடுவிலே போகும் மைனரை எதிரே வருபவர்கள் கவனிக்காமல் இருக்க முடியாது. அநேகமாகத் திருநெல்வேலியில் உள்ளவர்கள் யாவருக்கும் மைனரை நன்றாகத் தெரியும். ''வணக்கம் மைனர்வாள்!'' என்று சொல்பவர்களும் உண்டு; ''குட் ஈவினிங், மைனர்!'' என்பவர்களும் உண்டு. மைனரும் அவர்களுக்குப் பதில் வணக்கம் செலுத்தத் தவறுவதில்லை.

போத்தி ஹோட்டலுக்குள் மைனருக்கென்று பிரத்தியேகமான ஸ்தானம் ஒன்று உண்டு. அயலூர்வாசியாக இருப்பவர்தான் அந்த மணிக்குத் தவறுதலாக மைனருக்கென்று இருக்கும் அந்த இடத்தில் போய் உட்காருவார். மற்றவர்கள் மைனர் உட்கார்ந்து சாப்பிடும் கீழ்க் கோடி மூலையிலுள்ள நாற்காலியில் போய் உட்காருவதில்லை.

மைனர் யாரிடமும் அதிகமாகப் பேசுவது கிடையாது. அவர் யதா ஸ்தானத்தில் போய் உட்கார்ந்தவுடனேயே சர்வர் மணி ஆவலோடு தண்ணீர் கொண்டு வந்து வைத்து ''மைனர்வாளுக்குன்னு இன்னிக்கு ஸ்பெஷலா ஜாங்கிரி போட்டிருக்கு'' என்று சொல்லிக் கொண்டே அதையும் கொண்டு வந்து வைப்பான். மைனர் எதையும் நன்றாக ருசித்துச் சாப்பிடுவார். ஆனால் கொஞ்சம் ருசி பேதம் தட்டுப்பட்டால் பட்சணங்களை அப்படியே வைத்து விடுவார். மணிதான் அவருக்குக் காப்பி கலந்து கொடுக்க வேண்டும். மணி ஊருக்குப் போயிருந்தால் ஹோட்டல் முதலாளியே நேரில் வந்து காப்பி கலந்து கொடுப்பார். இது பல வருஷப் பழக்கம். டிபன் சாப்பிட்டதற்கு மைனரிடம் பில் கொடுக்கும் வழக்கம் கிடையாது. மைனர் மேஜையடிக்கு




வந்ததும் ஒரு ரூபாய் நோட்டை எடுத்து அலட்சியமாக வீசுவார். ஹோட்டல் முதலாளி மீதிச் சில்லறையை மரியாதையாக அவர் கையில் கொடுப்பார். அந்தச் சில்லறையைக் கண்ணால் பார்க்காமல் பர்ஸில் வாங்கிப் போட்டுக் கொண்டு அதே நடையில் அங்கிருந்து கிளம்புவார் மைனர்; வழியில் சுவாமி நெல்லையப்பரின் சந்நிதியில் அரை நிமிஷ வணக்கம். பிறகு வடக்கு ரத வீதியிலுள்ள பக்கிரித் தேவரின் வெற்றிலை பாக்குக் கடையில்தான் போய் நிற்பார். இவர் வருவதைக் கண்டவுடனேயே, கடை முன்னால் நிற்பவர்களை உஷார்ப்படுத்துவான் பக்கிரி. ''ஏலே! மைனர் பிள்ளைவாள் வாராஹ. போலே தூர'' என்று காதில் விழும்படி நிற்கும் சிறு பையன்களை விரட்டுவான்.

மைனர் வந்ததும் அவனே இறங்கிவந்து கடை முன்னால் கிடக்கும் பெஞ்சைத் துணியினால் துடைத்து அவரை உட்காரச் சொல்லி உபசரிப்பான். பிறகு தளிர் வெற்றிலைகளாகப் பார்த்துப் பொறுக்கி, வாசனைப் பாக்குக்

சுண்ணாம்புடன் ஒரு தட்டில் வைத்து மைனரின் பக்கம் வைப்பான். மைனர் கொடுக்கும் ஓரணாவையும் மரியாதையாக இரண்டு கைகளையும் ஏந்திப் பெற்றுக் கொள்வான். மைனர் வெற்றிலை போட்டுக் கொண்டு எழுந்துபோகும் வரையில் பசுங்கிளி பட்டறையில் போய் உட்கார மாட்டான். இதைப் பார்த்த மைனர்பிள்ளை கூடச் சில சமயம் சொல்வதுண்டு, ''வேய் தேவரே சும்மா உட்காரும்வேய்!'' என்று.

''ஐயாவுக்கு முன்னாலே அடியேன் உட்கார்றது மரியாதை இல்லேயே. சும்மா நிக்கிறேன், மைனரய்யா!'' என்று குழைவான் பசுங்கிளி. அவன் மீது மைனருக்கு ஒரு அலாதிப் பிரியம். ''போயிட்டு வர்றேன் வேய்!'' என்று அவனிடம் சொல்லி விட்டு எழுந்து நடக்கும் மைனர், மேலரத வீதியிலுள்ள தனுஷ்கோடி அண்டு கோ துணிக் கடைக்குள் நுழைந்து, கடை முதலாளியான தனுஷ்கோடியாபிள்ளைக்கு ஒரு கும்பிடு



போட்டுவிட்டுக் கணக்குப் பிள்ளையின் பக்கத்தில் போய் உட்காருவார்.

தனுஷ்கோடியாபிள்ளையும் மைனரை அன்போடு அழைத்து, ''வாடா ராசா! உட்காரு'' என்று தமக்கு அருகில் கையைக் காட்டுவார். இருந்தாலும் மைனர் சற்று எட்டிப் போய்க் கணக்குப்பிள்ளையின் பக்கத்தில்தான் உட்காருவது வழக்கம். தனுஷ்கோடியாபிள்ளை மைனரின் குடும்ப விஷயமாக ஏதாவது இரண்டொரு வார்த்தைகள் பேசுவார். இதற்குள் கணக்குப்பிள்ளை இரண்டாம் பேருக்குத் தெரியாமல் ஒரு ரூபாயை எடுத்து மைனரின் கையில் கொடுத்து விடுவார். இது தனுஷ்கோடியாபிள்ளை மைனருக்குத் தினந்தோறும் கொடுத்து வரும் மான்ய உதவி. அவர் மைனருக்கு ஒன்றுவிட்ட சித்தப்பா முறை. மைனரிடம் அவருக்கு அளவுகடந்த அன்பு.

ரூபாயை வாங்கியவுடன் சித்தப்பாவிடம் விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து நேராக வீட்டுக்குக் கிளம்புவார் மைனர். அவர் வீடு வந்து சேரும் போது சரியாக மணி ஏழரை ஆகும். சில நாட்களில் சித்தப்பாவிடம் பேசிக் கொண்டிருப்பதனால் சற்றுத் தாமதம் ஏற்படலாம். வீட்டுக்கு வந்தவுடன் மைனரின் தாயார் பழைய சாதம் எடுத்து வைப்பாள். அது அவருக்குத் தேவாமிர்தமாக இருக்கும். மைனருக்கு இப்பொழுது வயது நாற்பத்தைந்து. கலியாணம் ஆகவில்லை. தமக்குத் திருமணமே வேண்டாம் என்று கண்டிப்பாக மறுத்து விட்டார்.

தாயார் அன்போடு பரிமாறும் அந்தப் பழைய சாதத்தைச் சாப்பிட்டவுடன் அவருக்கு ஒரு சுறுசுறுப்பு ஏற்படும். சால்சட்டையை மாட்டிக் கொண்டு, வேஷ்டி, துண்டு எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய் ஒரு மணி நேரம் செலவழித்து, அவைகளை நன்றாகச் சோப்பு போட்டுத் துவைப்பார். மறுநாள் மாலையில் அவர் அணிந்து கொள்ளப் போகும் அந்த உடைகளுக்கு இப்போதிருந்தே முன்னேற்பாடுகள் நடக்கும். மைனரின் வீடு சிறியதாக இருந்தாலும், அதற்குள்ளேயே தமது துணிகளை அழகாகக் காயப் போட்டு மடித்துப் பெட்டி போடுவதற்கெல்லாம் வசதிகள் அமைத்துக் கொண்டிருந்தார்.

அப்பழுக்கில்லாத ஆடையுடன் அன்றாடம் ரத வீதிகளில் பவனி வருவதுதான் இப்பொழுது அவருடைய வாழ்க்கையின் லட்சியமாக இருந்தது. வேறு எதைப் பற்றியும் அவர் கவலைப்படுவதே கிடையாது. சித்தப்பா அன்றாடம்கொடுக்கும் ஒரு ரூபாயில்தான் மைனர் காப்பி சாப்பிடுவது, சோப்பும் போடுவது, வெற்றிலை போடுவது, ஜவ்வாது, பவுடர் முதலியன வாங்குவது எல்லாம். அதற்குமேல் அவர் யாரிடமும் பணம் வாங்குவதில்லை. குடியிருப்பதற்கு ஒரு வீடும், சாப்பாட்டுக்கு ஒரு வயலும் இருந்தன. இப்பொழுது அந்த இரண்டுமே போதுமானது என்ற மனத் திருப்தியோடிருந்தார் மைனர்.

காலையில் எழுந்ததும் மைனர் கசரத்துச் செய்வார். உடம்பைப் புஷ்டியாக வைத்திருக்க வேண்டும் என்ற ஆசையும் உண்டு. கசரத் முடிந்ததும் தினமும் ஆற்றுக்குப் போய் ஆனந்தமாகக் குளித்து விட்டுக் குறுக்குத்துறை முருகனைத் தரிசித்து விபூதி சந்தனம் துலங்க அவர் வீடு திரும்புவதும் ஒரு அழகிய காட்சிதான். பக்தியும் சிரித்த முகமும் வழிவழியாக வந்த அவருடைய பரம்பரைப் பண்புகள்.

**ப**த்துப் பதினைந்து வருஷங்களுக்கு முன் மைனரின் நிலைமை வேறு மாதிரியாக இருந்தது. அவர் நடந்து செல்வதைப் பார்க்கவே முடியாது. அப்பொழுது அவர் உண்மையிலேயே மைனராக வாழ்ந்தார். பூர்வீகமாக வந்ததும் அவருடைய தகப்பனார் விருத்தி செய்ததுமான சொத்துக்கள் ஒரு லட்சத்துக்கு மேல் இருந்தன. மைனர் பட்டம் பெறுவதற்கு முன் அவருடைய பெயர் சாமியப்பன். குடும்பத்துக்கு ஒரே பிள்ளை. மிகவும் செல்லமாக வளர்ந்தான் பையன். அவர்கள் குடும்பம் பெரிய பங்களாவில் வசித்தது. தோட்டம், துரவு, வண்டி மாடுகள், நயினார் குளத்துப் பாசனத்தில் மூன்று போகம் விளையக் கூடிய இரண்டு இரட்டை விதைப்

பாடு எல்லாம் உண்டு. நெற்றூற்றுப் பாசனத்தில் சிவலப் பேரியிலும் அவர்களுக்கு ஏராளமான நிலமிருந்தது. குற்றாலத்தில் கோடை காலவாசத்துக்கென்று நேர்த்தியான சிறிய பங்களாவும் உண்டு.

சாமியப்பாவின் தகப்பனார் சங்கரலிங்கம் பிள்ளை ஒரு சுகவாசி. மிகவும் நல்லவர். தமக்கு அடங்கி நடப்பவர்களிடம் அன்பு காட்டுவதும் ஆதரவளிப்பதும் அவருடைய சுபாவம். ஆனால் யாராவது தம்மை மீறி எதிர்த்துப் பேசினால் அவர்களை இலேசில் விட மாட்டார். எதிரியென்று யார் கொம்பினாலும் அவர்களை எந்த வகையிலாவது அடக்கி ஒடுக்கும் வரை அவருக்குத் தூக்கம் வராது.

தனுஷ்கோடியாபிள்ளை இவருக்குச் சற்று எட்டிய உறவு. எதிரிலுள்ள சிறிய வீடு அவருடையது. இருவரும் அன்னியோன்னியமாகத்தான் பழகி வந்தார்கள். அந்தக் காலத்தில் சாமியப்பாவை முக்கால்வாசி நேரம் தனுஷ்கோடியாபிள்ளையின் வீட்டில் தான் பார்க்க முடியும். அவருக்குப் பிள்ளை குட்டி ஒன்றும் கிடையாது. ஆகையால் சாமியப்பாவை 'ராசா' என்று செல்லமாக அழைத்துக் கொஞ்சுவார். அவன் கேட்பதையெல்லாம் வாங்கிக் கொடுப்பார். சங்கரலிங்கம்பிள்ளை 'தம்பி!' என்று அழைப்பதற்குள் ''என்ன அண்ணாச்சி!'' என்று ஓடிப்போய் எதிரில் நிற்பார் தனுஷ்கோடியா பிள்ளை. அப்பொழுது தனுஷ்கோடியா பிள்ளையின் ஜவுளிக் கடை இப்பொழுதுபோல் அவ்வளவு பிரபலமடையவில்லை.

ஒரு நாள் சிவலப்பேரியிலிருந்து நெல் மூட்டை கொண்டு வந்த வண்டிக்காரன், வண்டியைத் தனுஷ்கோடியாபிள்ளையின் வீட்டு வாசலில் அவிழ்த்து விட்டு மாடுகளையும் அதனருகில் கட்டினான். தனுஷ்கோடியா பிள்ளை வாசல் பக்கம் வந்தபோது அது இடைஞ்சலாக இருந்தது. கட்டியிருந்த மாடும் அவரை முட்ட வந்தது. இதனால் அவருக்குக் கோபம் வந்தது. அந்தக் கோபத்தில் வார்த்தைகளும் சற்று விபரீதமாக வந்து விட்டன. ''ஏய்! வண்டிக்காரா! உங்க எஜமான் வீட்டிலே வண்டி நிறுத்த இடமில்லேன்னு இங்கே கொண்டு வந்து நிறுத்தினே? இது என்ன உங்க வீட்டு வண்டிப்பேட்டையா?'' என்று கத்தினார். தம் வீட்டு மாடியில் உட்கார்ந்திருந்த சங்கரலிங்கம் பிள்ளை ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தார். தமக்கு அடங்கி ஒடுங்கிப் பணிவாகப் பேசும் தனுஷ்கோடியா பிள்ளையா அவ்வளவு கோபத்தோடு பேசுவது என்று அவருக்கு ஆத்திரம் வந்தது. வண்டியை இழுத்துக் கொண்டு போய்த் தள்ளி நிறுத்தச் சென்ற வண்டிக்காரனை நோக்கி, ''டேய், மாடசாமி! வாடா இங்கே!'' என்று அதட்டினார். அவன் அருகில் வந்ததும் ''என்ன சொல்றார் அவர்? நம்ம வண்டி அங்கே நிற்கப்படாதுன்னு சொல்றாரா? வண்டி அங்கேயேதான் நிற்கும்னு போய்ச் சொல்லு'' என்று தனுஷ்கோடியாபிள்ளையின் காதில் விழும்படி இரைந்து கத்தினார்.

சங்கரலிங்கம்பிள்ளைக்குக் கோபம் வந்து விட்டதை அறிந்ததும் தனுஷ்கோடி திடுக்



கணவன் (எழுத்தாளர்): அட சட்! கொஞ்ச நேரம் பேசாமல் இரு. இப்பொழுதுதான் கதாநாயகியின் வீட்டில் நடக்கும் விருந்தை வர்ணிக்க எழுதிக் கொண்டிருக்கிறேன்!

மனைவி: ரொம்ப சரி! அந்த விருந்தில் நீங்களும் கலந்து கொண்டு சாப்பிடுவதாக எழுதி விடுங்கள். வீட்டில் ஒன்றுமில்லாததால் இன்று நான் சமையல் செய்யவில்லை!

கிட்டார். அவரைச் சமாதானப்படுத்தும் முறையில் நேராக அவர் இருந்த இடத்துக்குப் போய் ''இதுக்கேன் அண்ணாச்சி இப்படிக் கோபிக்கிறீங்க? அவன் புத்தியில்லாமே வீட்டு வாசலுக்கு நேரே மாட்டைக் கொண்டு வந்து கட்டினான். அதுக்காக அவனைச் சண்டை பிடிச்சேன். இதுக்குப் போட்டு என்மேலே கோபிக்கிறீங்களே!'' என்றார் பணிவோடும் அன்போடும்.

''அட, சரிதான் வேய்! பேச்சை நிறுத்தும், அப்படியே! பூடம் தெரியாமச் சாமியாடுறீர் நீர். அந்த இடம் யாருடைய இடம் தெரியுமா? தெரியுமா, ஐயா உமக்கு? இடம் தெரியாமலா நிறுத்தினான் மாடசாமி!'' என்றார் இன்னும் அதிகக் கோபத்தோடு.

''நீங்க நல்லாப் பார்க்கலே போலிருக்குது. மாடும் வண்டியும் எங்க வீட்டு வாசலை அடைச்சுக்கிட்டு நின்னுது. இப்பக்கூட...... அதோ பாருங்க எங்கே நிக்கிதுன்னு'' என்று சுட்டிக் காட்டினார்.

''அதெல்லாம் பார்க்க வேண்டியதில்லே. உம்ம தகப்பனார் வாங்கின இடம் அந்த வீட்டு நடையோடு சரி. அதுக்குமேலே உள்ள இடம் முழுதும் எங்களுக்குத்தான் சொந்தம். தெரிஞ்சு கொள்ளும்'' என்று உரிமையோடு அடித்துப் பேசினார் சங்கரலிங்கம்.

'' என்ன அண்ணாச்சி! இப்படிப் பேசுறீரு? வீட்டுப் பத்திரத்திலே தெளிவாகக் கண்டிருக்குதே. வீட்டின் முன் பக்கத்துச் சுவரிலிருந்து தச்சுக்கு ஏழடி அகலத்துக்கு முன் வாசல் பாத்தியதை இருக்குதுன்னு!''

'' வேய்! அதெல்லாம் பின்னாடி எழுதிச் சேர்த்துக்கிட்டது. அது தெரியுமா உமக்கு? நடை பாதை பாத்தியதைக்காக அதுவும் ரெண்டடி அகலம் தவிர மேற்கொண்டு ஒரு இஞ்சு நீளம்கூட அந்த இடத்திலே உரிமையோ, சொந்தமோ கிடையாது. இதை இப்பவாவது தெரிஞ்சுக்கிடும். நானும் போகுது போகுதுன்னு பார்த்தால் ரொம்பத் துள்ளுறீரே. 'உங்க வீட்டு வண்டிப் பேட்டையா?' என்று கேட்கிறீர், நாக்கு மேலே பல்லைப் போட்டு. உமக்கு அத்தனை அகம்பாவமா? பார்க்கிறேன் ஒரு கை!'' என்றார். கோப வெறி தலைக்கேறி நின்றது அவருக்கு.

''அண்ணாச்சி! நீங்க நீதி நியாயம் இல்லாமப் பேசாதீங்க!''

'' நீர் என்ன வேய், நீதி நியாயத்தைக் கண்டுட்டீர்? நம்மகிட்டப் பேச்சு வார்த்தை ஒண்ணும் வேண்டியதில்லே. உம்முடைய நீதி நியாயத்தைச் சொல்ல வேண்டிய இடத்தில் போய்ச் சொல்லும். இன்னிக்கே நான் அந்த இடத்திலே அஞ்சடி மண்ணைச் சுற்றிக் கம்பி வேலி அடிக்கிறேனா இல்லையான்னு பாரும்.''

'' அடிச்சுடுவீங்களா வேலியை? ஊரார் இடத்திலே வேலியை அடிச்சா சும்மா விட்டுடுவாங்களாக்கும்! அதெல்லாம் நம்மகிட்ட நடக்காது அண்ணாச்சி!'' என்று சொல்லி விட்டு விடுவிடுவென்று தம் வீட்டுக்குப் போய்விட்டார் தனுஷ்கோடி.

தனுஷ்கோடியா பிள்ளை கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் சங்கரலிங்கத்தின் மனத்தில் பெரும் புயலைக் கிளப்பி விட்டன. முள் கம்பியால் வேலி அடிப்பதற்கான சாதனங்களை வாங்குவதற்கு அப்பொழுதே சட்டையை மாட்டிக்கொண்டு வில் வண்டியில் கிளம்பி விட்டார்.

அன்று மாலை இருவருக்கும் ஏக ரகளை.

இரவு முழுதும் தனுஷ்கோடியா பிள்ளை தூங்கவேயில்லை. மறுநாள் விடிந்தவுடன் பல்லைக்கூட விளக்காமல் வக்கீல் கோமதி நாயகம் பிள்ளை வீட்டில் போய் நின்றார். வீட்டுப் பத்திரத்தைப் படித்துப் பார்த்த வக்கீல், தனுஷ்கோடியா பிள்ளையின் பக்கமே நியாயம் இருப்பதைத் தெளிவாகத் தெரிந்து கொண்டார். தாமே சங்கரலிங்கம் பிள்ளையை நேரில் கண்டு பேசி ராசி பண்ணி விடுவதாகச் சொன்னார் வக்கீல் கோமதி நாயகர்.

வெறி மீறிப் போயிருந்த சங்கரலிங்கம் பிள்ளை யார் சொல்வதையும் கேட்கத் தயாராக இல்லை. தம்மை மீறி ஒருவன் பிராது கொடுக்கப் போவதா என்ற ஆத்திரம் அவரை ஆட்டிவைத்தது. எனவே வக்கீல் கோமதியா பிள்ளை எடுத்துரைத்த நியாயங்களையெல்லாம் அவர் கொஞ்சங்கூடச் சட்டைபண்ணவில்லை.

தனுஷ்கோடியா பிள்ளை கோர்ட்டில் பிராது கொடுத்தார். வழக்கு விசாரணைக்கு வந்தது. இரண்டு வருஷங்களாக இருவரும் வக்கீல் வீட்டுக்கும், கோர்ட்டுக்குமாக அலைந்தார்கள். சங்கரலிங்கம்பிள்ளை மதுரையிலிருந்து பெயர்போன சிவில் வக்கீலைக் கொண்டு வந்தார் வழக்காடுவதற்கு. கீழ்க் கோர்ட்டுச்செலவு அவருக்கு எண்ணாயிரம் ரூபாய்வரை ஆயிற்று. அப்படியிருந்தும் தீர்ப்பு தனுஷ்கோடியா பிள்ளைக்கே சாதகமாக முடிந்து விட்டது.

எனவே, கேஸ் ஹைகோர்ட்டுக்குப் போயிற்று. பணத்தைப் பணம் என்று பாராமல் தண்ணீராகச் செலவிட்டு வெற்றியைக் கண்டார் சங்கரலிங்கம் பிள்ளை.

தோல்வியுற்ற தனுஷ்கோடியாபிள்ளையோ மிகவும் மனமுடைந்து போனார். தாமும் ஏராளமாகப் பணம் சம்பாதித்து, அதைவிடப் பெரிய வக்கீலாக அமர்த்தாமல் போனோமே என்று வருந்தினார்.

பழி வாங்க நினைத்தது அவர் மனம். எதிரிக்குச் செல்வத்தினால் ஏற்பட்டிருந்த செல்வாக்கை எப்படியாவது நயவஞ்சகமாகவாவது ஒழித்தே தீருவது என்று தமக்குள் ஒரு திட்டம் வகுத்துக் கொண்டார்.

வாய்ச்சண்டை ஆரம்பித்ததிலிருந்து இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்ப்பதில்லை. ஆயினும் சாமியப்பன் மட்டும் எப்பொழுதும் போல் சித்தப்பாவின் வீட்டுக்குப் போவதும் வருவதுமாக இருந்தான். தனுஷ்கோடியா பிள்ளைக்கு அவன்மீதிருந்த பாசம், இந்தச் சண்டையினால் கொஞ்சம்கூடக் குறையவில்லை. அவனை எதிரியின் வீட்டுக்குப் போகவேண்டாமென்று சங்கரலிங்கம் ஒன்றிரண்டு மாதங்கள் கட்டுப்படுத்திப் பார்த்தார். ஆனால் அதில் வழக்கைப்போல், வெற்றிதான் கிட்டவில்லை.

அப்பொழுது சாமியப்பனுக்கு வயது இருபது. இண்டர்மீடியட் பரீட்சையில் அவன் தேறவில்லை. அதற்குமேல் படிக்க மனமில்லை அவனுக்கு. இரண்டாவது வருஷமும் தொடர்ந்து படிக்கும்படி தகப்பனார் வற்புறுத்திக் கொண்டிருந்தார். தனுஷ்கோடியா பிள்ளைக்கு இந்த விஷயம் தெரிய வந்தது. '' உனக்கென்னத்துக்கு ராசா, இதுக்கு மேலே படிப்பு? யார்கிட்டேயாவது போய்க் கை கட்டிச் சேவகம் பண்ணப் போறியா நீ? உன் சொத்துக்களைக் கவனிச்சுக்கிட அளவுக்குப் போதுமே உனக்குப் படிப்பு'' என்று அவனுக்கு உற்சாகமூட்டினார். அவனுக்கும் அது தான் சரியென்று பட்டது. தகப்பனாரிடம் போய் வாதாடினான், தனக்கு அதற்குமேல் படிப்பு வேண்டியதில்லை என்று. சங்கரலிங்கம் பிள்ளை இலேசில் விட்டுவிடுவாரா! அதட்டினார், மிரட்டினார், கெஞ்சினார். பயனில்லை. பையன் அன்று மத்தியானம் உண்ணாவிரதமிருந்து காரியத்தைச் சாதித்துக்கொண்டான். சங்கரலிங்கம் பிள்ளையின் பிடிவாதத்துக்கு முதல் அடி விழுந்தது.

தாம் போட்ட திட்டத்தின்படி நிறைவேறிய ஆரம்ப வெற்றியைக் கண்டு உள்ளூற மகிழ்ந்தார் தனுஷ்கோடியா பிள்ளை. மறுநாள் அவர் சாமியப்பனை அழைத்துக் கொண்டு, கடைவீதியிலுள்ள இந்தியன்மெடிக்கல் ஸ்டோருக்குச் சென்றார். அங்கு மருந்து விற்பனை அதிகம் கிடையாது. பணக்காரப் பையன் ஒருவன் பொழுதுபோக்குக்காக நடத்திவரும் கடை அது. காலை ஒன்பது மணிக்கு முதலாளிப் பையன் மோட்டார் சைக்கிளில் வருவான். அதைத் தொடர்ந்து அவனுடைய நண்பர்கள் நாலைந்து பேர்கள் வந்து கூடுவார்கள். கடை

# எச்சரிக்கை!



உங்கள் குழந்தையின் இன்றைய ஜலதோஷம் நாளை ப்ளூ பிராங்கைடிஸ் அல்லது நிமோனியாவாக மாறலாம்

கடும் வியாதி ஆரம்பமாகு முன்னரே உங்கள் குழந்தையின் சளி உபாதைகளை ஒழித்துக் கட்டுங்கள். ஜலதோஷங்களுக்கென்றே விசேஷமாக தயாரிக்கப்பெற்ற இந்த சக்திவாய்ந்த மருந்தைத் தடவுங்கள்.

உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை விஷப்பரீட்சை செய்யாதீர்கள். ஜலதோஷத்தின் அறிகுறிகள் — தும்மல், ஒழுகும் மூக்கு அல்லது தொண்டை உபாதை — தோன்றின உடனே விக்ஸ் வேப்போரப்பை அவனது மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உங்கள் சிறுவன் நிம்மதியாக இரவு முழுவதும் தூங்கும் பொழுதே, இந்த நிருபணமான மருந்து சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது. மறுநாட் காலையில் அவன் ஜலதோஷம் நீங்கி சுகம் பெறுகிறான்.

**விக்ஸ் வேப்போரப் ஜலதோஷத்தை சீக்கிரம் போக்குகிறது . . . 2 விதங்களில்**

**1** மூக்கின் வழியே வேலை செய்கிறது.



விக்ஸ்வேப்போரப் வெளிவிடும் சக்தி வாய்ந்த ஔஷத ஆவிகளை, மூக்கிலும் தொண்டையிலும் உள்ள சளியையும் வலியையும் நீக்க, உங்கள் குழந்தை சுவாசிக்கிறான்.

**2** சருமத்தின் மூலமாக வேலை செய்கிறது.



விக்ஸ்வேப்போரப்பின் இதம் தரும் உஷ்ணம் உங்கள் குழந்தையின் மார்பகத்தில் அடைப்பை உடைத்தெறிந்து உங்கள் சிறுவன் துரிதமாக குணமடைகிறான்

புதிய பச்சை டப்பி




பெரிய நீல ஜாடி




# விக்ஸ் வேப்போரப்

மார்பிலும், தொண்டையிலும் முதுகிலும் தேயுங்கள். எல்லோருக்கும் நல்லது

VR. 5

யின் உள் பக்கத்தில் சீட்டாட்டம் மும்முரமாக நடைபெறும். மத்தியானம் பிரிந்து மாலையில் கூடுவார்கள். விதம் விதமான இன்பண்டங்களும் காப்பியும் கடைக்கு வரவழைக்கப்படும். உற்சாகமாகப் பொழுது போக்குவார்கள். எல்லோருமே இடையில் படிப்பை நிறுத்தியவர்கள். ஆகையினால் வீண் பொழுது போக்கும் வித்தை அவர்களுக்குத் தானாகவே வந்து விட்டது. எந்த சினிமாப் படமானாலும் வெளியிடப்படும் கொட்டகையில் முதல் நாளன்று இந்திரா மெடிக்கல் ஸ்டோர் நண்பர்கள் முதல் வகுப்பில் வரிசையாக அமர்ந்திருப்பதைக் காணலாம்.

தனுஷ்கோடியா பிள்ளை ஏதோ மருந்தைப் பற்றி விசாரிக்கும் பாவனையில் இரண்டொரு வார்த்தை பேசிவிட்டுச் சாமியப்பனை மெடிக்கல் ஸ்டோர் நண்பர்களுக்கு அறிமுகப்படுத்தினார். இருபது வயதுள்ள பணக்கார வாலிபன் திருநெல்வேலி ஊரிலேயே தங்களுக்குத் தெரியாமல் இருந்து வந்திருக்கிறானே என்று அந்த நண்பர்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

சில நாட்களில், மெடிக்கல் ஸ்டோர் நண்பர்களில் ஒருவனாக ஐக்கியமாகி விட்டான் சாமியப்பன். சீட்டாட்டத்தில் ருசி ஏற்பட்டது. கடைக்கார முதலாளியைப் போலத் தனக்கும் மோட்டார் சைக்கிள் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று ஆசை தோன்றியது. ஒருவேளை உண்ணாவிரதத்தின் மூலம் அதை நிறைவேற்றிக் கொண்டான். மருந்துக் கடையின் முன் இப்பொழுது ஒன்றுக்கு இரண்டாக மோட்டார் சைக்கிள்கள் நிற்கலாயின.

அல்டாப் அழகிரிசாமி என்பவன் பெரிய நாடகக் குழு ஒன்றை வரவழைத்து, நாடகம் நடத்தி, மன்றத்துக்கு நிதி திரட்ட ஒரு திட்டம் வகுத்துச் செயலாற்ற ஆரம்பித்தான். அது விஷயமாக, சாமியப்பன் அல்டாப்போடு இரண்டு மூன்று தடவை சென்னைக்குச் சென்று வரவேண்டியதாயிற்று. சென்னை நகரத்தின் கறுகறுப்பான சுகபோக வாழ்க்கை சாமியப்பனின் மனத்தை மிகவும் கவர்ந்தது. திருநெல்வேலியிலேயே சென்னையின் வாழ்க்கையை வாழ ஆசைப்பட்டான். கார் ஒன்று தனக்கு அவசியம் என்று தோன்றியது. தகப்பனிடம் சண்டை போட்டு வாங்கினான். சிவலப்பேரியிலுள்ள பெரிய நிலம் காசாக மாறி, சாமியப்பனின் கைக்கு வந்து சேர்ந்தது. மைனர் செயின் அவன் கழுத்தில் புரண்டு புரண்டு ஊசலாடியது. கையில் தங்கச் செயினில் கட்டுண்ட கைக் கடிகாரம் அழகாக மின்னியது. சிகரெட்டு டின் ஒன்று கையிலேயே தவழ்ந்து கொண்டிருந்தது. 'மருந்துக் கடை நண்பர்களின் தலைவனாகக் காரில் ஊரைச் சுற்றிச் சுற்றி வந்தான் சாமியப்பன். அவனுடைய நண்பர்கள் அவனை 'மைனர்வாள்!' என்று கௌரவமாக அழைக்க ஆரம்பித்தார்கள். மற்றவர்களும் அப்படியே அழைத்து வந்தார்கள். ஒருவருஷ காலத்துக்குள் சாமியப்பன் என்ற சொந்தத் திருநாமம் மறைந்து, மைனர் பட்டமே அவனுடைய பெயராக நிலைத்து விட்டது.

மைனர் தமது வீட்டில் தங்குவது வெகு அபூர்வம். அவருக்கு வெளி அலுவல்கள் அதிகமாகிவிட்டன. அவரைத் தட்டிக் கேட்பதற்குச் சங்கரலிங்கம் பிள்ளைக்கு இப்பொழுது சக்தியில்லாமல் போயிற்று. பணம் தண்ணீர் போல் வெளியே ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டு கண்ணீர் விட்டார். அவரால் அதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியவில்லை.



'' சே. 'கெட்டி வெள்ளை' என்று இவ்வளவு கெட்டியாகவா இருக்கும் !''

அல்டாப் அழைத்துவந்த நாடகக் குழுவின் பிரதான நடிகையாக இருந்த மேகலா, மைனரின் கண்களில் பட்டவுடனேயே அவருடைய உள்ளம் நெருநெருத்தது. மைனரின் கண்களுக்கு அவள் மேகத்தினூடே வெட்டுகிற மின்னல் கொடி போலத் தோற்றமளித்தாள். அன்று நடந்த நாடகத்துக்கு மைனர்தான் தலைமை வகித்தார். மேகலாவின் நடிப்பைப் பாராட்டும் வகையில் தங்கச் சங்கிலி ஒன்றை மேடையின்மீது அவளுக்குப் பரிசாக வழங்கினார். தன் கலையின்மீது அவ்வளவு ஆர்வம் காட்டிய மைனரைத் தனியாகக் கண்டு பேசித் தனது நன்றியைத் தெரிவித்தாள். அப்பொழுது மைனரின் அன்புள்ளத்தைக் கண்டதும் அவளுக்கும் ஒருவித இரக்கம் உண்டாயிற்று. எனவே அடுத்த மாதம் குற்றாலத்தில் மைனருக்குச் சொந்தமான பங்களாவில் வந்து குடியேறினாள்.

குற்றாலத்தில் 'சீஸன்' சுகமாக இருந்தது. மருந்துக் கடை நண்பர்கள் அடிக்கடி குற்றாலத்துக்குச் சென்று மைனருடன் சீட்டாடிப் பொழுது போக்கினார்கள். மைனரின் கார் குற்றாலம்-திருநெல்வேலி; திருநெல்வேலி-குற்றாலம் என்று தினமும் இரண்டு தடவை போய் வந்து கொண்டிருந்தது. இது தவிர, தென்காசி, பாபநாசம், கன்னியாகுமரி, திருச்செந்தூர் என்று காதலர்கள் காரில் போய்விட்டு வந்தார்கள். மேகலாவின் இஷ்டப்படி திருநெல்வேலி மாவட்டத்தில் சுற்றிப் பார்க்க வேண்டிய இடங்களுக்கெல்லாம் அவளை அழைத்துச் சென்றார் மைனர்.

மைந்தன் மைனர் பட்டம் வாங்கியதும் நாடகக்காரியோடு சுற்றுவதும் சங்கரலிங்கம் பிள்ளைக்குத் தெரியும். ஆனால் அவரால் ஒன்றும் செய்ய முடியாத அளவுக்கு மீறிப்



''ஒரு நாளில் சரியாக இருபத்து நாலு மணி நேரமும் உழைக்கிறேன், சார்: அப்படியிருந்தும் இந்த ஆபீஸில் எனக்கு நல்ல பெயரில்லே.'' —கடிகாரம்

போய்விட்டது காரியம். குடும்பச் சொத்துக்கள் எல்லாம் கரைந்துபோய்க் கொண்டிருப்பதை அவ்வப்போது அவனிடம் சொன்னார். மைனர் அதைப் பற்றிக் கொஞ்சம் கூடக் கவலைப்படவில்லை.

தமது பழி வாங்கும் திட்டம் நன்றாக நிறைவேறி வருவதைக் கண்டு தனுஷ்கோடியா பிள்ளை ஆனந்தம் அடைந்தார்.

சங்கரலிங்கம் பிள்ளை சொத்துக்களை யெல்லாம் மகள் பெயருக்கே எழுதி வைத்துவிட்டாலும் மைனர் இன்னும் 'ஜோரா'கச் சுற்றித் திரிய ஆரம்பித்தார். குற்றாலத்திலுள்ள பங்களாவை மேகலாவுக்கே சொந்தமாக்கினார். பாங்கியிலிருந்த பணத்தை அவள் பெயருக்கு மாற்றினார். பணம் பெருகிற்றே ஒழியப் புகழ் பெருகவில்லை என்ற கவலை சில ஆண்டு சுகபோக வாழ்வுக்குப் பின் மேகலாவைப் பிடித்துக் கொண்டது.

பாவம் ஒருநாள் திருநெல்வேலியிலிருந்த மைனருக்குக் குற்றாலத்திலிருந்து ஒரு கடிதம் சென்றது. தான் நாடகக் கம்பெனிக்குப் போக முடிவு செய்து விட்டதாகவும், மைனரிடம் விடை பெற்றுக்கொள்ள விரும்புவதாகவும், மேகலா அக் கடிதத்தில் எழுதியிருந்தாள். தனக்கு வாங்கிக் கொடுத்த நகைகள், பாத்திரம் பண்டங்கள், பங்களா எல்லாவற்றையும் மைனர் திரும்பிப் பிடுங்கிக் கொள்வாரோ என்று பயந்தாள் மேகலா, ஆனால் அப்படி நடக்கவில்லை.

மைனர் உடனே அவளைக் காணக் குற்றாலத்துக்குப் புறப்பட்டு வந்தார். மனம் விட்டு மகிழ்ச்சி தெரிவித்துக் கொண்டதோடு, ''மேகலா! இன்னும் பணம் கிணம் ஏதாவது வேண்டுமா? சொல்!'' என்று மிகுந்த அன்போடு கேட்டார். அவரது அன்பைக் கண்ணுற்ற மேகலாவின் கண்கள் கலங்கிவிட்டன.

அவளை வழியேற்றி அனுப்பி விட்டு வந்த மைனர் தமது சொத்துக்களையும் கடன்களையும் விவரமாக ஆராய ஆரம்பித்தார். தடிவீரன் கோவில் தெருவிலுள்ள ஒரு சிறிய வீடு மட்டுமே கடனில் மூழ்காமல் இருந்தது. நில புலன்களின் மீது ஏகப்பட்ட கடனும் வட்டியும் ஏறிப் போய்விட்டன. சாப்பாட்டுக்கு வேண்டிய அளவுக்கு ஒரு சிறு வயலை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவைகளை விற்றுக் கடன்களைப் பூராவாக அடைத்தார்.

அவர்கள் குடும்பம் பங்களா வாசத்தை இழந்து தடிவீரன் கோவில்தெருவிலுள்ள சிறிய வீட்டுக்குக் குடிபோக நேரிட்டது. இந்த நிலைமையை எண்ணி எண்ணிச் சங்கரலிங்கம் பிள்ளை வியாதியில் விழுந்தார். ஆனால் தனுஷ்கோடியா பிள்ளை இதைக் கண்டு மகிழ்ந்தார். தமது வஞ்சகத் திட்டம் எதிர்பார்த்ததற்கு மேலாக வெற்றிகரமாக நிறைவேறியதால் அவருக்குத் தமது எதிரியின்மீது இப்பொழுது அனுதாபம் கூடப் பிறந்தது. அவருடைய துணிக் கடை தற்சமயம் மிகப் பிரபலமான கடைகளில் ஒன்றாக விளங்கியது. சங்கரலிங்கம் பிள்ளையின் பங்களாவை அவரே விலைக்கு வாங்கியிருந்தார். பழைய பகைமையை மறந்துவிட்டுச் சங்கரலிங்கம் பிள்ளையைப் பார்க்கச் சென்றார் ஒருநாள்.

மைனர் தம் தகப்பனாருக்கு அருகில் உட்கார்ந்து ஏதோ பணிவிடைகள் செய்து கொண்டிருந்தார். தனுஷ்கோடியைக் கண்டதும் இருவரும் ஆச்சரியம் அடைந்தார்கள். சங்கரலிங்கத்தின் உள்ளம் நெகிழ்ந்தது; கண்ணீர் ததும்பியது. ''உங்களைக் காணவேணும்னு ரொம்ப ரொம்ப ஆசைப்பட்டேன், தம்பி. நீங்களே வந்துட்டீங்க. நம்ம ராசா இப்ப நல்ல வழிக்குத் திரும்பிவிட்டான். அவனை இனிமேல் கவனித்துக் கொள்ள வேண்டியது உங்க பொறுப்பு'' என்றார்.

தனுஷ்கோடியா பிள்ளைக்குத் துக்கம் நெஞ்சையடைத்தது. அவருடைய மனம் அவரைக் குத்தி எடுத்தது. அண்ணாச்சியை இந்த நிலைக்குக் கொண்டுவந்ததற்குத் தமது பழிவாங்கும் எண்ணம்தானே காரணம் என்று நினைத்தபோது அவருடைய மனம் குமுறியது. ஆனாலும் பழைய எதிரிடம் மனசை வெளியிட்டு மன்னிப்புக் கேட்க மனம் வரவில்லை. ''அண்ணாச்சி! தெய்வம் நம்ம ராசாவுக்கு எந்தவிதக் குறையும் வைக்காது. நான் பார்த்துக் கொள்கிறேன், கவலைப்படாதீங்க'' என்று அண்ணாச்சியிடம் உறுதி கூறினார். சில நாட்களில் சங்கரலிங்கம்பிள்ளை பரலோகப் பிராப்தியடைந்தார். அன்றுமுதல் மைனரின் வாழ்க்கையில் புதியதோர் மாறுதல் ஏற்பட்டது. அவர் பழைய நண்பர்களோடு சேர்வதில்லை; சினிமா, நாடகம் எதற்கும் போவதில்லை. காலையில் குறுக்குத்துறையில் ஆனந்தமாகக் குளித்துவிட்டு வருவது. மாலையில் உல்லாசமாக ரத வீதிகளில் பவனி வந்து போத்தி ஹோட்டலில் சாப்பிடுவது. இரவில் துணிமணிகளுக்குச் சோப்பு போடுவது. மத்தியானத்தில் அலங்காரப் பொருள்களைத் துடைத்து மினுக்குவது. தனுஷ்கோடியா பிள்ளை அன்புடன் கொடுக்கும் படித்தரமான ஒரு ரூபாய்க்குள் செலவை நடத்துவது—இது தான் திருநெல்வேலி மைனரின் தற்போதைய இன்ப வாழ்க்கை. இதற்குமேல் வேறு எதையும் விரும்புவதில்லை அவர்.

# கண்கள் உறங்காவோ?



### அத்தியாயம் 2

## மாலாவின் மனத்துயரம்

மாயாவி

'கொக்கரகோ!' என்று குடியானவர் தெருவிலிருந்து சேவல் ஒன்று கூவியது. அப்பொழுது அதிகாலை ஐந்து மணி. இருண்டு கிடந்த கீழ்வானம் வெளுக்கத் தொடங்கியிருந்தது.

சாதாரணமாகக் கிராம வாசிகளுக்குச் சேவல் கூவுவதுதான் விழித்தெழுவதற்கான அறிவிப்பு மணி. கேசவபுரத்திலும் பெரும்பாலும் அப்படித்தான். ஆயினும் யார் யார் எழுந்தாலும் எழாவிட்டாலும் நடுத் தெருவில் சச்சிதானந்தத்தின் வீட்டில் மாலா நிச்சயமாகச் சேவல் கூவியதுமே எழுந்து விடுவாள். எழுந்து பரபரவென்று வீட்டு அலுவல்களைக் கவனிக்கத் தொடங்கி விடுவாள்.

இன்றும் அவளுக்குச் சேவல் கூவியதுமே உறக்கம் கலைந்து விட்டது. ஆனால் அவள் எழுந்திருக்கவில்லை. சலிப்புற்றவள் போல் சோம்பிப் படுக்கையில் படுத்துக் கிடந்தாள். சில நாட்களாகவே அவளுக்கு எல்லா விஷயங்களிலும் இப்படித்தான் ஒருவிதச் சலிப்பு ஏற்பட்டிருந்தது. கவலையற்ற சிட்டாக, எதிலும் சுவையும் சுறுசுறுப்பும் காட்டும் அவளுக்குச் சலிப்புத் தட்டுவானேன் என்றால் அதற்குக் காரணம் இருந்தது.

எண்ணெய் இருந்தால்தான் விளக்கு எரிகிறது; பெட்ரோல் விட்டால்தான் கார் ஓடுகிறது; மின்சாரம் உந்தினால்தான் விசிறி சுழலுகிறது. இவ்வாறே ஒவ்வொரு பொருளையும் ஒவ்வொரு ஜீவனையும் ஊக்கிப் பணிபுரியச் செய்ய மறைமுகமான சக்தி ஒன்று தேவைப்படுகிறது. அந்தச் சக்தி இல்லாவிட்டால் அவை செயலிழந்து பொம்மையாக, நடைப் பிணமாக ஆகிவிடுகின்றன. மாலாவையும் அவ்விதச் சக்தி ஒன்றுதான் சுறுசுறுப்புடன் இயங்கச் செய்து வந்தது. இப்பொழுது அந்த மறைமுகச் சக்தி மறைந்துவிட்டது; அவள் வாழ்க்கையில் சுவையற்றவளாகி விட்டாள்; சலிப்புத் தட்டியவள் ஆகிவிட்டாள்.

"'மாலாவை இயக்கி வந்த அந்த மறைமுகச் சக்தி என்ன?"

இந்தக் கேள்வியை யாராவது எழுப்பினால் அவர்களை உலகம் தெரியாதவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆம், பருவப் பெண் ஒருத்தியை இயக்கும் சக்தி எதாக இருக்கும் என்பதை உலகம் தெரிந்தவர்களுக்குச் சொல்லியா கொடுக்க வேண்டும்? அந்த வயதில் அவர்களுடைய சக்தி, நினைவு, பக்தி, கனவு எல்லாம் ஒன்றே ஒன்றாகத்தான் இருக்க முடியும் - காதல்!

அந்தக் காதல் கனவில்தான் அவர்கள் உயிரே அச்சமயம் ஊசலாடிக் கொண்டிருக்கும். அக்கனவில் சிறிது பொய்த்து விட்டாலும், சிறிது கோளாறு, தடுமாற்றம், ஏமாற்றம் எவையேனும் ஏற்பட்டு விட்டாலும், அவர்கள் அப்படியே உருகிக் கரைந்து உருத் தெரியாது போய்விடுவார்கள்.

மாலாவின் காதல் கனவு அவள்வரையில் பொய்த்து விடவில்லை. அதிலே சிறிது கோளாறு ஏற்பட்டிருப்பதாகமட்டுந்தான் அவள் சந்தேகித்தாள். ஆயினும் அந்தச் சந்தேகமே அவளை எதிலும் சுவையும் பிடிப்புமற்றவளாக்கிவிட்டது.

கோளாறு? ஆமாம், கோளாறுதான்!

சுந்தரம் அவளுடைய காதல் தெய்வம். எது எப்படி இருந்தாலும் அவள் அப்படித்தான் எண்ணியிருந்தாள். பக்தனுக்குத் தெய்வத்தைச் சதா மனத்தில் நினைத்துக் கொண்டிருந்தால் மட்டும் போதாது; அடிக்கடி தரிசித்துக்கொண்டும் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவன் மனம் நிறைவு பெறுவதில்லை. அவ்வாறுதான் மாலாவும் சுந்தரத்தின் நினைவாகவே இருந்தபோதிலும் அவனை அடிக்கடி தரிசிக்க விழைந்தாள். முன்பெல்லாம் அது, அவன் விடுமுறையில் ஊருக்கு வரும் போது மட்டுமே தொடர்ந்து சில நாட்கள் சாத்தியமாகி வந்தது. அப்பொழுதெல்லாம் அவள் இறைவனிடம், "செந்திவேல் முருகா! ஒன்று எங்களை விரைவில் சேர்த்து வை; அல்லது அவர் எப்பொழுதும் ஊரில் இருக்குமாறு அருள்புரி!" என்று வேண்டிக் கொள்ளுவாள்.

எனவே சுந்தரத்துக்கு உள்ளூரில் வேலை கிடைத்து விட்டதை அறிந்த போது அவள் தனது வேண்டுகோளுக்குத் தங்கள் குலதெய்வம் செவிசாய்த்து விட்டது என்று களிப்புற்றாள். ஆயினும் உள்ளூரில் வேலையாகிவிட்டதால் அவன் தன் எதிரிலேயே இரவும் பகலும் இருந்துகொண்டிருப்பான் என்று அவள் எதிர்பார்த்துவிடவில்லை. பகலெல்லாம் வேலைக்குப் போய்விட்டாலும் இரவிலாவது ஒருதடவை தெற்குத் தெருவுக்குச் சென்றால் அவர் முகதரிசனம் பெறலாம்; தவிர வாரத்தில் ஒரு நாள் அவருக்கு விடுமுறை இருக்கும்; அன்று வழக்கம்போல் ஆற்றங்கரைப் படிக்கட்டில் அவரைத் தவறாது சந்தித்து அளவளாவலாம் என்று கருதினாள்.

அதோடு சுந்தரத்துக்கு நடுப்பகல் பன்னிரண்டு மணியிலிருந்து இரவு ஏழு மணி வரையில்தான் வேலை என்பதை அறிந்ததும், எதிர்பார்த்ததற்கு அதிகமாகவே தெய்வம் தனக்கு வரமளித்து விட்டதாக அவள் களிப்புற்றாள். அப்படியானால் தாங்கள் ஒவ்வொரு நாளும் சந்திக்கலாமே. மாலைச் சந்திப்பைக் காலையில் வைத்துக் கொண்டால் ஆயிற்று. காலைநேரத்தில் ஆற்றங்கரைப் படித்துறையில் ஆட்கள் இருக்குமே என்றால் வேறோர் இடத்தில் சந்திக்கிறது. கேசவபுரம் போன்ற குக்கிராமத்தில் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் தனியே சந்திக்க இடத்துக்கா பஞ்சம்!

ஆனால் நினைத்தபடி அச்சந்திப்பு ஒரு நாள்கூடக் கைகூடவில்லை. சுந்தரம் தினந்தோறும் காலையில் ஏழு-ஏழரைக்கெல்லாம் அவன் வீட்டுக்குத்தான் வந்தான். ஆனால் மாலா என்று ஒருத்தி அந்த வீட்டில் இருப்பதையே மறந்து விட்டவன்போல் நடந்து கொண்டான். கூடத்தில் உட்கார்ந்து சச்சிதானந்தம் பிள்ளையுடனும் வீணாவுடனும் அரட்டை அடித்தான். இல்லாவிடில் வீணாவின் ஆஸ்பத்திரியை இரண்டொரு நாட்களில் தொடங்கத் திட்டமிட்டிருந்ததால் அதற்காக, அந்த ஏற்பாட்டைக் கவனிக்கவேண்டும், இந்த ஏற்பாட்டைக் கவனிக்கவேண்டும், அவரைப் பார்க்கவேண்டும், இவரைப் பார்க்க வேண்டும் என்று வீணாவை மட்டுமோ, அல்லது சச்சிதானந்தம் பிள்ளையையுமோ உடன் அழைத்துக் கொண்டு வெளியே சுற்றப் போய்க் கொண்டிருந்தான்.

மாலாவுக்குச் சிறிது ஏமாற்றமாகத் தான் இருந்தது இது. ஆயினும், 'இந்த ஆட்ட ஓட்டமெல்லாம் ஆஸ்பத்திரியைத் தொடங்கும் வரையில்தானே; பிறகு இவர் எங்கே போய்விடப் போகிறார்' என்று அவள் பொறுமையுடன் காத்திருந்தாள். இடையே ஒரு வியாழக்கிழமை வந்தது. வியாழக்கிழமைதான் சுந்தரத்துக்கு வாராந்திர விடுமுறை நாள். அணை ஸ்தலத்தில் வாரத்தில் ஏழு நாட்களும் இரவு பகலாகத் தொடர்ந்து வேலை நடந்து வந்தமையால், இதர ஸ்தாபனங்களைப் போல் ஒரே நாளன்று எல்லோருக்கும் விடுமுறை கொடுப்பது சாத்தியமாக இல்லை. ஆகையால் ஒவ்வொருவருக்கும் தனித் தனியே வாரத்தில் ஒருநாள் விடுமுறை கொடுத்து வந்தார்கள். அந்த நடைமுறையை ஒட்டித்தான் சுந்தரத்துக்கு வியாழனன்று விடுமுறை.

மற்ற நாட்களில் எப்படி இருந்தாலும், விடுமுறை நாளன்றாவது அத்தான் தங்கள் ஆற்றங்கரைச் சந்திப்பை ஆவலுடன் எதிர்பார்த்திருப்பார் என்று மாலா நிச்சயமாக நம்பினாள். ஆனால் அவளுடைய துரதிர்ஷ்டம், அந்த முதல் விடுமுறை நாளுக்கு மறுநாள்தான் வீணாவின் ஆஸ்பத்திரி தொடங்க இருந்தது. ஆதலால் வியாழக்கிழமை மாலையில்கூடச் சுந்தரம் ஆஸ்பத்திரியின் ஆரம்ப விழா விஷயமாக எங்கெங்கோ அலைந்து கொண்டிருந்தான்.

ஆயிற்று; ஆஸ்பத்திரியும் தொடங்கப்பட்டு விட்டது. இனி அவர் அலைய வேண்டியதில்லை; வீட்டில்தான் இருப்பார் என்று எண்ணிய மாலா மறுநாள் காலையில் தெற்குத் தெருவுக்குப் போனாள். படிக்கப் புத்தகம் ஒன்று கேட்கும் சாக்கில் அத்தானை அவர் வீட்டு மாடியில் சந்தித்து, மறுநாள் முதல் தாங்கள் காலை நேரத்தில் தனியே

சந்தித்துக் கொள்ள வசதியான இடம் ஒன்றைக் கண்டுபிடித்து வைக்குமாறு கூற வேண்டும் என்பது அவள் திட்டம்.

ஆனால் போன இடத்தில் அவளுக்கு ஏமாற்றந்தான் காத்திருந்தது. "அத்தான் இருக்கிறாங்களா, அத்தை? புதுப் புத்தகம் ஏதானும் இருந்தால் வாங்கிக் கொண்டு போகலாம் என்று வந்தேன்" என்று அவள் மரகதத்தம்மாளிடம் கேட்டபோது, "அவனா? அவன்தான் பொழுது விடிந்ததும் விடியாததுமா ஒரு வாய்க் காப்பியை ஊத்திக்கிட்டு, 'வீணா வின் ஆஸ்பத்திரிக்குப் போகிறேன் அம்மா' ன்னு போயிட்டானே!" என்ற பதிலே மாலாவுக்குக் கிடைத்தது.

'அழகுதான், இவர் என்ன அக்காவின் ஆஸ்பத்திரியில் கம்பவுண்டர் உத்தியோகம் பார்க்கப் போகிறாரா!' என்று வியந்தாள் மாலா. நேரே ஆஸ்பத்திரிக்குப் போய், 'எனக்கு ஒரு புத்தகம் வேண்டும்; வீட்டுக்கு வந்து எடுத்துத் தாருங்கள்' என்று அவரை இழுத்து வரலாமா என்றுகூட அவள் ஒரு கணம் நினைத்தாள். ஆனால் அவளுக்கு என்னவோ வீணாவின் முன் சுந்தரத்தோடு அத்தனை உரிமையுடன் பழகக் கூச்சமாக இருந்தது. என்ன இருந்தாலும் வீணா இள வயதுடையவள் இல்லையா? ஒருகால் தாங்கள் இவ்வளவு சகஜமாகப் பழகுவதைப் பார்த்து, தங்களிடையே காதல் இருப்பதை ஊகித்து விடுவாளோ!

இந்த இளம் பெண்களின் காதல் பைத்தியந்தான் எத்தனை வேடிக்கையானது! இவர்களுக்குக் காதல் வேண்டும். அந்தக் காதல் தங்களைச் சார்ந்தவர்களுக்குத் தெரியவும் வேண்டும். ஆனால் அதை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவும் வெட்கம். "காதல் ஒரு விநோதமான வியாதி!" என்று யாரோ ஒரு அறிஞன் கூறினானமே, அவன் வாய்க்கு ஒரு பிடி சர்க்கரையை அள்ளிப் போட வேண்டும்!

அன்று அவள் வெறுமனே திரும்பி வந்தாள். அன்றையப் பொழுது வீண் பொழுதாகவே போயிற்று. 'போய்த் தொலையட்டும்' என்று மறுநாள் போனாள்; அதற்கு மறுநாளும் போனாள். தொடர்ந்து ஒரு வாரம் போனாள். தினந்தோறும் இதே கதைதான். 'ஆஸ்பத்திரியை வீணா அக்காள் நடத்துகிறாளா, இவரா?' என்ற சந்தேகங்கூட மாலாவுக்கு எழுந்துவிட்டது. கடைசியில் ஒருநாள் அவள் மரகதத்தம்மாளிடம், "அத்தை! எனக்குப் படிப்பதற்கு ஒன்றுமேயில்லை. பித்துப் பிடித்தாற்போல் ஆகிவிடுகிறது. நாளைக்குக் காலையில் அத்தானைக் கொஞ்சம் வீட்டில் இருக்கச் சொல்லுங்களேன். ஏதாவது ஒரு புத்தகம் கேட்டு வாங்கிக் கொள்கிறேன்" என்று துணிந்து சொல்லியே விட்டாள்.

'அத்தானுக்கு இது ஓர் எச்சரிக்கையாக இருந்திருக்கும்; இன்று நிச்சயமாக வீட்டில்தான் இருப்பார்; சரியானபடி கோபித்துக்கொள்ள வேண்டும்' என்று அவள் மறுநாள் ஆவலோடு அவன் வீட்டுக்கு வந்தாள். அவளைக் கண்டதும் மரகதத்தம்மாள், "வந்துட்டியா மாலா! இந்தா ஒங்க அத்தான் புத்தக அலமாரித் திறவுகோலைக் கொடுத்து விட்டுப் போயிருக்கான். அவனுக்கு ஆஸ்பத்திரியிலே ஏதோ அவசரச் சோலி இருக்குதாம். ஒனக்கு வேண்டிய புத்தகங்களை எடுத்துக்கிடச் சொன்னான்" என்று சாவியை நீட்டினாள்.

மாலா சாவியை வாங்கிக் கொண்டாள். ஆத்திரத்துடன் மாடிக்குப் போனாள். கைக்குக் கிடைத்த புத்தகங்கள் சிலவற்றை எடுத்துக் கொண்டாள். பிறகு சுந்தரத்தின் மேசையைத் திறந்து காகிதமும் பென்சிலும் எடுத்து, "புத்தகத்துக்காக உங்களை இருக்கச் சொல்லவில்லை. நான் ஒருத்தி இருக்கிறேன் என்பதை நினைவூட்டுவதற்காகவே இருக்கச் சொன்னேன். இம் மாதிரிச் சாடை மாடையான குறிப்புக்களையெல்லாம் நீங்கள் என்று தான் உணர்ந்துகொள்ளப் போகிறீர்கள்? அப்படி என்ன தலைபோகிற வேலை உங்களுக்குத் தினந்தோறும் ஆஸ்பத்திரியில்? நாளைக்காவது கட்டாயம் வீட்டில் இருங்கள்; உங்களுடன் நிறையப் பேச வேண்டும்" என்று ஒரு குறிப்பு எழுதி ஒரு புத்தகத்தின் உள்ளே வைத்து, அப்புத்தகத்தை மேசைமீது அவன் கண்ணில் படும்படி வைத்து விட்டு, இதரப் புத்தகங்களுடன் திரும்பினாள்.

இக்கடிதத்தை எழுதிப் புத்தகத்துக்குள்ளே வைத்தபோது அவளுக்கு, முதல் முதலில் தங்களிடையே காதல்





எட்டாம் நம்பர் வீட்டில் தேவானை குடியிருந்து விட்டுப் போன நிகழ்ச்சி எங்கள் தெருவின் சரிதையிலேயே ஒரு ஒரு முனைத் திருப்பம். அந்தப் பெண் காலடி வைத்த மகிமையால்தான் . . .

# ...வேப்பந்தெரு விழித்தெழுந்தது!

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பும் எங்கள் வேப்பந்தெரு தினமும் காலையில் விழித்தெழுவதுண்டு—ஆனால் தினந்தினம் இரண்டு மணி நேரம் தாமதமாக. தெருத் திண்ணைகளில் சால்வைப் புழுக்களாக பற்பல உருவங்கள் முடங்கியிருக்கும். வீட்டு வாசலில் கோலம் போடவில்லையே என்று என் மனைவியை நான் கோபிப்பதில்லை: அது யார் வீட்டு வாசலிலும் காணப்படவில்லை; வெடி மருந்து யுகம் வந்தபிறகு இந்தத் தெருவில் அவ்வப்போது டி.டி.டி மருந்து கிடைத்தாலும் கிடைக்குமேயொழிய பசிக்கு அரிசி மாவு கிடைக்காது என்று எறும்புகளுக்குத் தெரியும். "நல்ல காலம் வருகுது!" என்று அன்றாடம் முதல் குரல் கொடுக்கும் குடுகுடுப்பாண்டி, எங்கள் வீட்டுக்கு எதிரே காலியாகக் கிடந்த எட்டாம் நம்பர் வீட்டை எட்டிகூடப் பார்க்காமல் நகருவான். "எந்தப் பாவியோ புரளி கிளப்பிறான். ஒரு வருஷ காலமா வீட்டை அண்டுவாரில்லே" என்று ஏங்குவார், வீட்டின்

DL/P3A-19TM

சொத்தக்காரர். அதற்கும் பதிலளிப்பார் தெருக்கோடியிலிருந்த டாக்டரய்யா :
"அறியாமைப் பேயைத்தான் விரட்டணும் முதலிலே. அப்படிப்பட்ட காலம்—பாருங்களேன், நம்ப டிஸ்பென்ஸரிலே ஒரு நாளுக்கு எத்தனை கேஸுங்க வருது! அதிலே பாதிக்கு மேலே அநாவசியந்தான், சத்துக் குறைவு நோய்க. சாப்பாட்டு விஷயத்திலேயே அறியாமைப் பேய் தாண்டவமாடறபோது மத்த விஷயங்களிலே கேக்கணுமா?"
பிறகு, திடீரென ஒரு நாள் விழித்துக்கொண்டது எட்டாம் நம்பர் வீடு. வாட்டசாட்டமான ஒரு அழகியும் அவள் கணவரும், ஒரு தள்ளாத கிழவியுமாகத் தங்கள் சாமான்களை வீட்டுக்குள் இறக்குமதி செய்த காட்சியை நாற்பது ஜோடிக் கண்கள் கழுகுகளைப் போல் கவனித்தன. பற்பல நாக்குகள் சூள்கொட்டின.
"மட்டையிருக்கிறதே கையில்; டென்னிஸ் ஆட்டக்காரியோ?" என்றது ஒரு பெண் குரல்.
"நிச்சயம் பாதநாட்டியம் தெரிந்தவளாக இருக்கவேண்டும். அளந்து வைத்தாற்போல் இருக்கிறதே அந்தத் தேகக்கட்டு!" என்று திண்ணையிலே துள்ளினர் ஒரு கலாவிசிறி.
மறுநாட் காலை எட்டாம் நம்பர் வீட்டு வாசலில் ஓர் அழகான கோலம் தென்பட்டது. "நன்றாகத் தூங்கினீர்களா?" என்று தேவானையை விசாரித்தாள் என் மனைவி. அயர்ந்து தூங்கியெழுந்த ஆரோக்கியத்தின் பெருமிதமிளிர தேவானையின் வதனம் 'ஆம்' என்பதற்கு அடையாளமாகப் புன்னகைப் பூத்தது.
"கோலம் போட்டிருக்கிறீர்களே. வீட்டில் ஏதாவது விசேஷமோ?"
"இல்லையே, தினந்தோறுமே நான் கோலம் போடுவது வழக்கம்!" என்றாள் தேவானை.
இந்தத் தெருப் பெண்மணிகளா இதை நம்பப்போகிறார்கள்? டென்னிஸ் ஆடும் கைதான் கோலம் போடுமோ, சமைக்குமோ, எல்லாமே அந்த வீட்டுக் கிழவியின் வேலையாயிருக்குமென்று வம்பளந்தனர். ஆனால் வம்புக்கும் தும்புக்கும் விடிவு வராமலா போகும்?
ஒரு நாள் காலை விடியுமுன்னே விழித்துக்கொண்ட நான், ஜன்னல் வழியாகத் தென்பட்ட காட்சியை வியப்புடன் கண்டு, மனைவியை எழுப்பிக் காண்பித்தேன்.
விடிவெள்ளிக்கு முன் எழுந்து வீட்டு முகப்பிலே விளக்கமிட்டு, மாவெடுத்து இழை திரித்துச் சித்திரமெழுதியது அப் பத்தினியாளின் பைந்தளிர் விரல்கள். அவ் விரல்களுக்குக் கீழ்ப் படிந்த அரிசிமாவு விழிநிரம்பிய விசித்திரக் கோலமாக விரிவடைந்தது."... கொழுநன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை" என்ற வான் புகழ் வள்ளுவரின் வாக்கை வாழ்வாக்குவோர் முன்னிலையில் எந்தப் பேய்தான் துணிந்து நிற்கும்!
அவ் வருடம் வள்ளலைப் போல் பொழிந்தது வானம். அவதூறும் அகந்தையும் மழை நீரோடு கரைந்தோட, உள்ளங்களும் தெருவைப் போலப் பளிச்சிடத் தொடங்கின. "தேவானை சொல்கிறாள்" "தேவானை செய்கிறாள்" என்று அவளைப் பலரும் பின்பற்றலாயினர்.
ஒருநாள் நான் ஆபீசுக்குக் கிளம்புங்கால் என் மனைவி சொன்னாள்: "தேவானை ஒரு துளசிச் செடி வைத்திருக்கிறாள், பார்த்தீர்களா 'டால்டா' டப்பாவிலே. நம்ப அலமாரியிலே ரொம்ப நாளா தவங்கிடக்கே ஒரு 'டால்டா' டின், அதிலே இன்னும் கொஞ்சம் 'டால்டா' பாக்கியிருக்கு. ஏதாவது பட்சணம் பொரிச்சு அதைத் தீர்த்துப்புட்டேன்னா நானும் ஒரு செடி வைக்கலாம். அதனாலே இன்னிக்கு நீங்க ஆபீஸிலிருந்து வந்ததும் சோமாசி!"
அன்று நான் ஆபீஸிலிருந்து வந்ததும் வாசலில் சர மண்ணடைத்து வைத்திருந்த 'டால்டா' டின் கண்ணில் பட்டது. ஆனால் இரவுவரை எவ்வித சோமாசியும் கிடைக்காததைப் பற்றிக் கேட்டதும் அவள் கூறினாள்: "பொரிப்பதற்கும் தித்திப்புப் பண்ணுவதற்கும்தான் 'டால்டா' என்று நினைத்திருந்தேன். இன்றுதான், தேவானை சொன்னாள். எல்லா சமையலுக்கும் உபயோகிக்கலாமாம். தேரிலே ருசிபார்த்த பிறகு நம்பினேன். இன்னியிலேருந்து எல்லா சமையலுக்கும் 'டால்டா'தான். வைட்டமின்கள் இருக்காமே அதிலே?"
"நெஜம்தான், கண்ணுக்கும் பல்லுக்கும், எலும்புக்கும் ஆரோக்கியம் தருகிற வைட்டமின்கள் 'ஏ' 'டி' இரண்டுமிருக்கு 'டால்டா'விலே. இனிமேலே அந்த வைட்டமின்கள் நம்ப அலமாரியிலே டின்னுக்குள்ளே தூங்கவேண்டியதில்லையே!" என்றேன். அன்றுமுதல் ருசிருசியாக நானுவித ஆகாரங்கள் மூலமாக உடம்புக்கு நிறைய அளவிலே வைட்டமின்கள் கிடைக்கலாயின.
மேலும் ஒரு வருடம்! அதன் பன்னிரு மாவவிரல்கள் எங்கள் தெருவிலே எத்தனையோ மாறுதல்களைச் செய்து சென்றன.
அப்புறம் ஒரு நாள் ...



... எட்டாம் நம்பர் வீடு காலியாகியது. வேறிடம் சென்றுவிட்டாள் தேவானை, பேர்ச்சை மரம் படமிட்ட மஞ்சள் நிற டப்பாவில் மங்களகரமான துளசிச் செடியொன்று பின்தங்கியிருந்தது. ஆம், அவள் விதைத்த நல் வித்து ஆரோக்கியமாக உருவெடுப்பதன் சின்னம், அந்தச் சின்னத்திலே மிளிருகிறது ...
... எங்கள் வேப்பந்தெரு விழித்தெழுந்த கதை...
..."விசேட நாட்களுக்குமட்டுமல்ல, அன்றாடமும் காட்சி தருவேன்" என்ற பாவனையில் வீட்டுவாசல் தோறும் அன்றாடம் காலை விழிநிரம்பிய கோலங்களாக விழித்தெழுந்த வீதியின் விந்தைக் கதை!

DL/P. 38-19 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெட், பம்பாய்

தோன்றக் காரணமாக இருந்த கடிதத்தையும் அவ்வாறே ஒரு புத்தகத்துக்குள்ளே வைத்து மூடிவிட்டுப் போனது நினைவுக்கு வந்தது. அந்த நினைவு அவளுடைய ஆத்திரத்தையும் ஏமாற்றத்தையும் சிறிது சமனப்படுத்தியது. பழைய எண்ணங்களின் மகிழ்ச்சியில் மூழ்கியவளாக வீடு வந்து சேர்ந்தாள்.

மறுநாள் சுந்தரம் நிச்சயமாக வீட்டில் இருப்பானென்று அவள் அங்கே போனாள். வழக்கம்போல் மரகதத்தம்மாளிடம் கூடப் போகாமல் நேரே மாடிக்கே சென்றாள். ஆனால் மாடி வெறிச்சோடிக் கிடந்தது. மாலாவின் கண்கள் ஏமாற்றத்துடன் சுந்தரத்தின் மேசையை நோக்கின. அங்கே முன்னாள் அவள் வைத்துவிட்டுப்போன புத்தகம் வைத்த இடத்திலேயே இருந்தது. 'ஒருகால் அவர் புத்தகத்தைத் திறந்து பார்க்கவே இல்லையோ?' என்ற ஐயத்துடன் அவள் அதைக் கையில் எடுத்துத் தன் கடிதம் உள்ளே இருக்கிறதா என்று பார்த்தாள்.

கடிதம் அவள் வைத்துவிட்டுப் போன பக்கத்தில்தான் இருந்தது. ஆனால் அது சுக்குச் சுக்காகக் கிழித்து வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் மாலாவின் மனமும் பல துண்டுகளாகப் பிளந்து போயிற்று.

'இதற்கு என்ன அர்த்தம்? என்ன அர்த்தம்?' என்று புலம்பியது அவளுடைய உடைந்த உள்ளம்.

அந்த உடைந்த உள்ளத்திலிருந்து கொட்டிய உதிரமும், அது அளித்த வேதனையும் அவளை அங்கே நிற்க விடவில்லை. கால்கள் அவளை வீணாவின் ஆஸ்பத்திரியை நோக்கி இழுத்துச் சென்றன. அன்று வீணாவுக்குத் தாங்கள் காதல் கொண்டிருப்பதாகச் சந்தேகம் ஏற்படுவதைக்கூட விரும்பாதிருந்த மாலா இன்று அவள் முன்னே சுந்தரத்திடம் அந்தக் கிழிந்த கடிதத்தைக் காட்டி, 'இதற்கு என்ன அர்த்தம்?' என்று கேட்டுவிடும் எண்ணத்தோடு வேகமாகப் போனாள்.

ஆனால் அங்கே அவளுக்கு வேறோர் அதிர்ச்சி காத்திருந்தது. வீணாவின் ஆஸ்பத்திரி பூட்டிக் கிடந்தது!

அண்டை வீட்டுத் திண்ணையில் வெற்றிலை இடித்துப் போட்டுக்கொண்டிருந்த கந்தசாமிப் பிள்ளை என்ற முதியவர், "அக்காளைத் தேடிக்கிட்டு வந்தாயா, அம்மா? அவளும் நம்ம புஷ்பவனம் மகன் சுந்தரமும் ஆஸ்பத்திரியைப் பூட்டிக்கிட்டு இப்பொத்தான் காரிலே வெளியே போனாங்க" என்று மாலா எதுவும் கேட்கும் முன்பாகவே அவளுடைய அதிர்ச்சியோடு மற்றொரு அதிர்ச்சியைச் சேர்த்தார்.

ஆம், அன்றுதான் வீணாவும் சுந்தரமும் குடியானவர் தெருவில் பாம்பு கடித்துவிட்ட அந்தப் புது மணமகனைப் பிழைப்பூட்டச் சென்றிருந்தனர். ஆனால் மாலாவுக்கோ, இந்தக் கிழவருக்கோ அது எப்படித் தெரியும்? அவள் மனத்திலே விதையாக விழுந்திருந்த சந்தேகத்துக்கு இச்செய்தி நீர் வார்த்தது. அது மளமளவென்று முளைத்துத் தளிர்த்தது. "ஓ! அப்படியா சேதி! இதற்குத்தானா தினந்தோறும் நீங்கள் இங்கே வந்து கொண்டிருக்கிறீர்கள்? இதைக் கோடி காட்டத்தானா என் கடிதத்தைக் கிழித்து வைத்திருந்தீர்கள்?" என்று கறுவிக் கொண்டே அவள் வீடு திரும்பினாள்.

வீட்டுக்கு வந்து தன் பதற்றமெல்லாம் சிறிதளவு அடங்கிய பிறகு அவள் மீண்டும் ஆலோசித்துப் பார்த்தாள். 'இது சாத்தியமா?' என்றே அவளுக்குத் தோன்றியது. 'என்மீது உயிரையே வைத்திருந்த அத்தான் இப்படி ஒரு கணத்தில் வேறொரு பெண்ணிடம் நாட்டம் கொள்ளுவாரா? அப்படி அவர் என்னை மறக்கும்படியும், துறக்கும்படியும் என்ன பிழை இழைத்துவிட்டேன்? இல்லாவிட்டால் வீணா அக்காளிடந்தான் என்னைவிட அதிகமான கவர்ச்சி என்ன இருக்கிறது?' என்றெல்லாம் அவள் உள்ளம் குழம்பியது. அவளால் அவர்களைச் சந்தேகிக்கவும் முடியவில்லை; சந்தேகிக்காமல் இருக்கவும் முடியவில்லை. சுந்தரத்திடம் நேரடியாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளும் வரையில் எதையும் முடிவாகக் கொள்ளக் கூடாது என்று அவள் இறுதியில் தீர்மானித்துக்கொண்டாள். ஆனால் அந்த நேரடிச் சந்திப்புக்குக்கூட அவர் இடமளிப்பதில்லையே! எப்படி, வேறு எவ்விதத்தில், எங்கே அவரைச் சந்தித்து, அவருடைய இந்தப் போக்கை, இதற்கு அடிப்படையான காரணத்தை அறிந்து கொள்ளுவது?

இத்தகைய நிலைதான், தன் காதல் கனவிலே ஏற்பட்ட இந்தக் கோளாறுதான், அவளை ஓரேயடியாக உற்சாகம் இழந்தவளாக ஆக்கிவிட்டது.

** ** **

மகளின் அருகில்தான் படுத்திருந்தாள் தைலம்மாள். அவளும் அநேகமாகக் கோழி கூவியதும் எழுந்துவிடுபவள்தான். வீணா தன் அறையில் படுத்திருந்தாள். அவள் சாதாரணமாக ஆறு மணிக்குத்தான் எழுந்திருப்பாள். ஆனால் வெளித் திண்ணையில் படுத்திருக்கும் சச்சிதானந்தம், மாலா எழுந்து கதவைத்

திறந்துகொண்டு வாசல் தெளித்துக் கோலமிட வரும்போது எழுந்துவிடுவார். அவள் வாசல் கதவைத் திறக்கும் ஓசைதான் அவரை எழுப்பும் அறிவிப்பு மணி. என்றைக்காவது அவள் வாசல் தெளிக்க வரத் தாமதமானால் அவர் எழுந்திருப்பதும் தாமதமாகிவிடும். ஏன்? எழுந்த பிறகுகூட, படுக்கையைச் சுருட்டி உள்ளே கொண்டுவந்து வைத்துவிட்டு, கூடத்து ஊஞ்சலில் படுத்துக் கோழித் தூக்கம் போடுபவராயிற்றே அவர்!

ஆனால் இன்று எதிர்பாராத விதமாக அவரே எழுந்து வாசல் கதவைத் தட்டி, "மாலா! விஜு! அக்கா!" என்று மாறி மாறிக் குரல் கொடுத்தார். விழித்தவாறு படுத்திருந்த மாலாவுக்கு அது கேட்கத்தான் கேட்டது. ஆயினும் அவள் எழுந்திருக்கவில்லை. மனச்சலிப்பு அவளை எழுந்திருக்க விடவில்லை. உறங்கிக் கொண்டிருப்பது போல் கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்தாள். கடைசியில் தைலம்மாள்தான் எழுந்து போய்க் கதவைத் திறந்தாள்.

கதவைத் திறந்த தைலம்மாளிடம், "சரி, புறப்படு அக்கா!" என்றார் சச்சிதானந்தம் பிள்ளை.

"எங்கே தம்பி?" தூக்கக் கலக்கத்தில் உளறுகிறோமோ என்று தைலம்மாள் சச்சிதானந்தத்தின் முகத்தைச் சந்தேகத்தோடு பார்த்தாள்.

"வடக்குத் தெரு ஏகாம்பரம் பிள்ளை காலமாயிட்டாராம்."

"யாரு, யாரு? நம்ம மரகதத்தின் மாமாவா!"

"ஆமாம்; இப்பொத்தான் ஆள் வந்து சொல்லிவிட்டுப் போறான். 'துட்டி'க்குப் போயிட்டு வந்துடலாம்."

தைலம்மாள் மள-மளவென்று உள்ளே வந்து மாலாவை எழுப்பி விஷயத்தைச் சொல்லிவிட்டுப் புறப்பட்டாள்.

அக்காளும் தம்பியும் வாசல்வரை சென்றனர். பிறகு சச்சிதானந்தம் ஏதோ நினைவுக்கு வந்தவராய், நின்று திரும்பி, "இந்தாம்மா மாலா, விஜு எழுந்திரிச்சதும், இன்னைக்கு ஆஸ்பத்திரியைத் திறக்க வேண்டாமென்று சொல்லிடு. எதிர் வீட்டிலே இழவு விழுந்திருக்குது; இவ பாட்டுக்கு ஆஸ்பத்திரியைத் திறந்து வைச்சுக்கிட்டிருந்தால் பாக்கறத்துக்கு நல்லா இருக்காது" என்று கூறிவிட்டுப் போனார்.

மாலாவின் செவிகள் அவர் கூறியதை வாங்கிக் கொண்டன. ஆனால் மனம் வேறு எங்கோ சஞ்சரித்துக்கொண்டிருந்தது. இறந்துபோன ஏகாம்பரம் பிள்ளை மரகதத்தம்மாளின் தாய் மாமன். ஆகையால் இழவு வீட்டுக்குப் போயிருக்கும் அவளும், புஷ்பவனம் பிள்ளையும் அநேகமாகப் பகல் நேரம் முழுவதும் அங்கேதான் இருப்பார்கள். அத்தான் அங்கே போயிருக்கமாட்டார். சிறு வயசுக்காரர்களை இழவு வீட்டுக்குப் போக விடமாட்டார்கள். இன்று விஜு அக்காவின் ஆஸ்பத்திரியும் கிடையாது. ஆகையால் அவர் அங்கும் போவதற்கில்லை. வீட்டில்தான் இருந்தாக வேண்டும். அவரைச் சந்தித்துத் தன் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்வதென்று தீர்மானித்த அவள், உடனே விஜுவை எழுப்பி, சச்சிதானந்தம் ஆஸ்பத்திரியைத் திறக்க வேண்டாமென்று சொல்லியிருப்பதை அறிவித்துவிட்டு, "வீட்டைப் பார்த்துக்கொள், அக்கா! நான் ஆற்றங்கரைக்குப் போய்க் குடிக்கத் தண்ணீர் எடுத்துக்கொண்டு வருகிறேன்" என்று குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு தெற்குத் தெருவை நோக்கி வேகமாக நடந்தாள்.

சுந்தரம் வீட்டில்தான் இருந்தான். "அத்தான்!" என்று ஆவலோடு மாடியேறி வந்த அவளை, அவன் எப்பொழுதும்போல் வரவேற்றிரா விட்டால்கூட அவள் அதிர்ந்திருக்க மாட்டாள். ஆனால் "எங்கே வந்தாய்?" என்று அவன் கடுப்புடன் கேட்ட கேள்வி மாலாவின் மூச்சையே கண நேரம் நிறுத்திவிட்டது.

"என்னையா? என்னையா கேட்டீர்கள், அத்தான்?" அவளுக்கு வார்த்தைகள் தடுமாறின.

"ஆமாம், உன்னையேதான்!" சுந்தரம் உறுதியுடன் பதிலளித்தான்.

"ஏன், நான் உங்கள் வீட்டுக்கு வரக் கூடாதா?"

"வீட்டுக்கு வா, போ. அதைப்பற்றி எனக்கு அக்கறையில்லை. ஆனால் என்னிடம் உனக்கு என்ன வேலை?"

மாலா நம்பிக்கை இழந்துவிடவில்லை. அவன் கிழித்து வைத்திருந்த கடிதத்தை அவள் இப்பொழுது கையோடு கொண்டு வந்திருந்தாள். அதை அவன் முன் மேசைமீது வைத்து, "இதற்கு என்ன அர்த்தம்?" என்று கேட்டாள்.

சுந்தரம் கண நேரம் அவளையும் அக்கடிதத்தையும் மாறி மாறிப் பார்த்தான். பிறகு, "இது நான் எழுதிய கடிதம் இல்லையே!" என்றான், அவள் கேள்வியின் உள்ளர்த்தத்தைப் புரிந்து கொள்ளாதவன்போல்.

"இல்லை; நான் எழுதியதுதான். ஆனால் இதைச் சுக்கல்சுக்கலாகக் கிழித்து என்னிடம் திருப்பிவிடுவதுபோல்

வைத்துவிட்டுப் போயிருந்ததன் அர்த்தம் என்ன என்றுதான் கேட்கிறேன்.''

''புத்திசாலிகள் இதற்குள் புரிந்து கொண்டிருப்பார்கள்.''

''நான் புத்தியற்றவள்தான். தயவு செய்து விளக்கிச் சொல்லுங்கள்.'' மாலாவின் கண்களில் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது.

''உன் சவாலை ஏற்றுக்கொள்ளத் துணிந்துவிட்டேன், மாலா!''

''சவாலா?''

''ஆமாம். 'நீங்கள் மணந்துகொள்ளுவீர்களா ஒரு விதவையை?' என்று அன்றொரு நாள் என்னைக் கேட்டாயே; மணந்து காட்டுகிறேன்.''

இதற்குமேல் மாலாவுக்கு விளக்கம் ஒன்றும் தேவையாக இருக்கவில்லை. ஆயினும் அன்று அவள் சவாலா விட்டாள்? ''ஐயோ அத்தான், அது நான் வேடிக்கையாகக் கேட்டதல்லவா?'' என்று கதறினள் அவள்.

''வேடிக்கையோ, காரியமோ? எப்படியானாலும் உனக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன், மாலா!''

அவள் ஒன்றும் பேசவில்லை; பேச முடியவில்லை. தன் வாய்த் துடுக்கு, தனது விளையாட்டுப் பேச்சு, இப்படி விபரீதமாக உருவெடுக்கும் என்று அவள் நினைத்திருக்கவே இல்லை. தன் வாழ்வே இதனால் பாழாகிவிடுமோ என்று கலங்கிக்கொண்டிருக்கையில் சட்டென்று அவளுக்கு ஒன்று நினைவுக்கு வந்தது. அது நினைவுக்கு வந்ததும், அவள் மனப் பாரம் முழுவதும் இறங்கிவிட்டதுபோல் இருந்தது. 'ஆம், அன்று, தான் ஆண் குலத்தை அவ்வளவு கடுமையாகத் தாக்கியதற்கு எதிர்த் தாக்குதல் இது. அன்று வேடிக்கையாக விட்ட சவாலுக்கு எதிராக விடப்படும் வேடிக்கையான சவால்தான் இது. ஒருகாலும் என் அத்தானால் என்னை மறக்கவோ துறக்கவோ முடியாது. அவர் என்னை அழ வைத்து வேடிக்கை பார்க்கவேண்டும் என்றே, திட்டமிட்டு என்னைச் சந்திப்பதைத் தவிர்த்து வந்திருக்கிறார். வீணா அக்காளுடன் மிகவும் இழைவதுபோல் காட்டி வந்திருக்கிறார். இப்பொழுது இவ்வளவு கடுமையாக என்னிடம் நடந்து கொள்ளுகிறார். அவ்வளவும் வெறும் நடிப்பு. இந்த நாடகம் முடிந்ததும் முன்போலவே என்னிடம் அன்பாகப் பேசி மகிழ்வார்.'

சுந்தரம் சிறிது நேரம் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு, ''ஏன் நிற்கிறாய் இங்கே? போ, இனி என்னிடம் உனக்கு வேலை இல்லை. என்னிடம் உனக்கு இடமும் இல்லை. என்னை மறந்துவிடு, அடியோடு மறந்துவிடு!'' என்றான் கடுமையாக.

''போதும் விளையாட்டு, அத்தான்! நான் அன்று பேசியது தவறென்றால், வேறு விதமான தண்டனை அளியுங்கள் எனக்கு. ஆனால் இது....இது....''

''இது விளையாட்டில்லை, மாலா! வேடிக்கையில்லை. உண்மையாகத்தான் சொல்லுகிறேன். வாழ்க்கை சுயநல இன்பத்தில்தான் இருக்கிறது என்று எண்ணியிருந்தேன். 'இல்லை; அது பிறரது துன்பத்தைத் துடைப்பதில் தான் இருக்கிறது' என்று நீ எனக்கு எடுத்துக் காட்டி விட்டாய். வாழ்க்கை எது என்பதை உணர்ந்த பின்னரும் அதன்படி வாழாதவன் மனிதனில்லை. நான் மனிதனாகவே இருக்க விரும்புகிறேன். சுயநலம் நிறைந்த மிருகமாக அன்று. ஆகையால் என்னை மறந்துவிடு. தயவுசெய்து என்னை மறந்துவிட்டு வேறு ஒருவரிடத்தில் உன்னுடைய மனத்தைச் செலுத்து.''

சுந்தரத்தின் தீவிரம் நிறைந்த பேச்சு மாலாவின் அற்ப மகிழ்ச்சியைப் பறித்து விட்டது. 'இல்லை, அவர் பேச்சும் நடத்தையும் வேடிக்கையல்ல; உண்மையானவை; மனப்பூர்வமானவை' என்று உணர்ந்தபோது அவள் மீண்டும் கதறி அழ ஆரம்பித்து விட்டாள். அழுதாள், கதறினள், கெஞ்சினள். ''என் உயிரே நீங்கள்தான். உயிரைப் பிரிந்து இந்த உடல் வாழ முடியாது. என் பிழைகளை மன்னித்து விடுங்கள். நீங்கள் என்னைக் கை விட்டால் நான் அழிந்து விடுவேன். தயவு செய்யுங்கள், தயவு செய்யுங்கள்!'' என்று அவள் மன்றாடினள்.

ஆனால் அவள் மன்றாடலுக்கெல்லாம் சுந்தரம் மசியவில்லை. அவன் திரும்பித் திரும்பி அந்தப் பதிலையேதான் அளித்தான். ''என்னை மறந்துவிடு! என்னை மறந்துவிடு!! என்னை மறந்துவிடு!!!''

மறந்துவிடுவதா! முடியுமா அவளால்? அல்லது வேறு எந்தப் பெண்ணினாலுந்தான் முடியுமா, ஆழ வேர் விட்டு அடர்ந்து படர்ந்த காதலை மறக்க? காதலனை மறக்க?

அன்று ஏமாற்றத்தோடும், அதிர்ச்சியோடும், துயரத்தோடும், கண்கள் நிறையக் கண்ணீரோடும் மாலா தெற்குத் தெருவிலிருந்து திரும்பியபோது செய்துகொண்ட உறுதி இதுதான்:

''முடியாது; முடியவேமுடியாது. இவர் மனத்தை நான் எப்படியாவது மாற்றியே தீருவேன்; இவரை நான் மணந்தே தீருவேன்!'' **(தொடரும்)**




## 114. கின்றது ... கிறது ... கிது

முன் கட்டுரையில் தெரிவித்தது போல் குறிப்பிட்ட வியாதிகளை உண்டாக்கும் இயல்புள்ள கிருமிகள் குடலில் சேர நேருமானால், அந்தந்த வியாதிகளையும் உண்டாக்குமானால் அப்போது கிருமிஹரமான மருந்துகளைக் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. உண்மைதான். ஆனால் இதைச் சிறிது மாற்றிச் சொல்ல வேண்டும். குறிப்பிட்ட வியாதிக்குக் காரணமான கிருமிகளைப் போக்கக் கொடுக்கும் (கிருமிஹரமான) மருந்து, அந்தக் கிருமிகளைப் போக்குவதாயும், ஆயினும் நமது உடல் வளர்ச்சியையும் ஆரோக்கியத்தையும் காப்பாற்றச் செயல் புரியும் உபகாரபரமான கிருமிகளுக்குச் சிறிதும் இன்னல் விளைவிக்காததாயும் இருத்தல் வேண்டும்.

"என்ன ஐயா இது? சுற்றி வளைத்து என்னமோ புதிர் போடுவதுபோல் சொல்கிறீரே! புரியும்படியாகத்தான் சொல்லுமே!"

"சொல்கிறேன்; சாக்கடை என்பது சேறும் சகதியும் நிரம்பி நாற்றம் எடுத்துத்தான் இருக்கும். ஆனாலும் அளவுக்கு மீறிப் போகாமலிருக்க அதைச் சுத்தஞ் செய்வதும் உண்டு; அவசியமுங் கூட. குடலும் அப்படித்தான். அளவுக்கு மீறி அழுக்குஞ் சகதியும் சேருமானால் சில கிருமிகளும் உண்டாவது சகஜம். இதனால் மிகவும் ஆபத்தான வியாதியை உண்டாக்கா விட்டாலும் கீரைப் பூச்சி நாகப்பாம்பு அல்லது நாடாப் புழு போன்ற பலவிதக் கிருமிகள் உண்டாவதும், அதனால் ஓரளவு சுகங் குறைவதும் ரொம்ப ரொம்பச் சாதாரணச் சம்பவம். இவ் வகைக் கிருமிகள் நமது சத்துருக்கள்தான். இவற்றை வேணுமானால் அசக்த சத்துருக்கள் எனலாம். ஆயினும் இவற்றைப் போக்கக் கிருமி ஹர சிகிச்சையை அடிக்கடியும் முக்கியமாகச் சிறுவர் சிறுமியருக்குச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஆகாராதிகளை அனுசரித்தே இந்தக் கிருமிகளின் இன்னல்கள் பெரும்பாலும் விளைபவையானதாலும், தெரிந்தோ தெரியாமலோ குழந்தைகள் இவ்வித அபத்தியங்களை ஏற்று, குடற் கிருமிகள் வந்து விடுமாறு செய்வது தவிர்க்க முடியாததானதாலும், முன்னெச்சரிக்கையாகவே கிருமிஹரமான சிகிச்சைகளை நம் தாய்மார்கள் குழந்தைகளுக்குச் செய்து வருவது நம் நாட்டில் பழக்கத்திலிருந்து வந்தது. இப்போது இதை டாக்டர்களும் வைத்தியர்களும் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. அசக்த சத்துருக்கள் விஷயம் இப்படியிருக்க, பயங்கரமான வியாதிகளை உண்டாக்கக் கூடிய அதிசக்த சத்துருக் கிருமிகளும் உண்டல்லவா? அவற்றாலும் பலவித வியாதிகள் உண்டாவதை முன் கட்டுரையில் சுட்டிக் காட்டியாயிற்றே! இக் கிருமிகளைப் போக்கவும், கிருமிஹரமான மருந்துகளைக் கொடுக்கிறார்கள். இவற்றை "ஆன்டிபயாடிக்ஸ்" என்பர். இந்த "ஆன்டிபயாடிக்" என்னும் கிருமி ஹரங்களை உபயோகிப்பதால் பொதுவாக ஆபத்து உண்டு. இவற்றை உபயோகிப்பதால், வியாதிக்குக் காரணமான அதிசக்த சத்துருக் கிருமிகள் ஒழிவது ஒருபுறமிருக்கட்டும். அசக்த சத்துருக் கிருமிகள் என்று மேலே குறிப்பிட்டவையும் ஒழியும். அது மட்டுமா? நமது உடல் வளர்ச்சிக்கும் ஆரோக்கியத்துக்கும் காரணமான வைடமின்களை உற்பத்தி செய்விக்கும் பேருபகாரிகளான மித்திரக் கிருமிகளுங்கூடக் கூண்டோடு கைலாசமாக அழிந்தே போய்விடுகின்றன. இதன் விளைவு என்ன? வியாதிக்குக் காரணமான அதிசக்த சத்துருக் கிருமிகளைப் போக்க வேண்டிய வேலை இராது. ஆனால் ஆரோக்கியத்தைக்காக்க இயற்கை அருளிய மித்திரக் கிருமிகளின் இன்மையைச் சரிக்கட்ட சிகிச்சை செய்ய வேண்டிய பெரும் பொறுப்பு வரும். இயற்கை அருளிய இம் மித்திரக் கிருமிகளைத் தெரிந்தே கொல்வது. அதன் பிறகு குறைவுபட்ட அவற்றின் செயலைச் சரிக்கட்ட 'வைடமின்'களை வாரி வாரிக் கொடுப்பது. இவ்விதச் செயலை என்னென்பது? பசுவைக் கொன்று செருப்பு தானம் பண்ணுவது போல் எனலாமா? அல்லது குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டது போல் எனலாமா? இந்த 'ஆன்டிபயாடிக்'களை உபயோகிப்பவருக்கு இதிலுள்ள ஆபத்துக்கள் தெரியாதா? தெரியும். நன்றாய்த் தெரியும். ஆகவே சிலர் 'ஆன்டிபயாடிக்'களைக் கொடுக்கும் போதே "வைடமின் 'பி'"யையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும் என்கிறார்கள். இதனால் மட்டும் நிலைமை மாறி விடுகிறதா? இல்லவே இல்லை. எதற்காக முழுத்துணியைக் கண்டபடி கிழிப்பது? பிறகு எதற்காக அதைத் தைப்பது? மறுபடியும் எதற்காகத் தைத்ததைப் பிரிப்பது? வைடமின் 'பி'யைத்



கும்பகோணம் ராமன் அன்ட் ராமன் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் திரு பி. எஸ். நாராயணன் அவர்களுக்கு சஷ்டியப்தபூர்த்தி வைபவம் சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது.

---

தயாரிக்கும் மித்திரக் கிருமிகளைக் கொன்று விட்டு, அவ்வைடமினைக் கொடுப்பதால் என்ன பயன்? கொடுத்துக் கொண்டிருப்பதை நிறுத்தினால்.....? பழைய குருடி கதைதான்.

"ஆகவே, எக்காரணத்தால் ஏற்பட்ட குடற் கிருமியானாலுஞ் சரி. அதனால் விளைந்தது என்ன வியாதியானாலுஞ் சரி, கிருமி ஹரமாகக் கொடுக்கும் மருந்து அபகாரபரமான அசக்த சத்துருக் கிருமிகளையும் அதிசக்தக் கிருமிகளையும் மட்டும் போக்குவதாயும், உபகாரபரமான மித்திரக் கிருமிகளுக்கு ஒருவித இன்னலையும் உண்டாக்காத நல்லியல்பு பெற்றதாயும் இருக்க வேண்டும்.

"அப்படிப்பட்ட மருந்து இருக்கின்றதோ? இல்லாமலென்ன? நெருப்பை விட ஆபத்தானது என்ன இருக்க முடியும்? அஜாக்கிரதையாயிருந்தால் வீட்டையே கொளுத்திச் சாம்பலாக்கி விடாதோ? அவ்வித அஜாக்கிரதை இல்லாமல்—நெருப்பையும் உபயோகித்துச் சமையல் செய்து கொள்கிறோமே! அதுபோல்...."

"கேட்டதற்கு நேரிடையாகப் பதில் சொல்லப்படாதா? அதுபோல் மித்திரக் கிருமிகளுக்குச் சேதம் ஏற்படாமல் சத்துருக் கிருமிகளை மட்டும் போக்கக் கூடிய மருந்து இருக்கிறதா?"

"இவ்வளவு நேரம் நான் சொன்னதென்ன வடுகு பாஷையிலா?"

"அட யாரய்யா அகடவிகடம் பேசுகிறீரே! இருக்கின்றதா? என்ற கேள்விக்கு உண்டு இல்லை என்ற பதிலை 'டக் டக்' என்று சொல்வீரா?..."

"இருக்கின்றது, இருக்கிறது இருக்கிது. போதுமா? இன்னும் ஏதாவது...!"

"பேஷ்! அப்படிச் சொல்லுமய்யா! முதலில் அதைச் சொல்லும். பிறகு உமது அ...பிரசங்கம் ஆகலாம்."

"அடியேன்! இதோ சொல்லி விடுகிறேன். இதற்கு முன்னும் சொல்லியிருக்கிறேன். இன்னும் எத்தனை தரம் வேண்டுமானாலும் சொல்லுகிறேன்.

"அதிசக்த சத்துருக் கிருமிகளால் உண்டான வியாதி. வியாதியும் கொடுமையானது. கடுமையான நிலையிலுள்ளது. வியாதியிலிருந்து மனுஷ்யன் பிழைக்க வேணுமே! அதற்காக வேறுவழியின்றி 'ஆன்டிபயாடிக்'களைக் கொடுக்க வேண்டிய அவசர நிலை ஏற்படுகிறதென்று வைத்துக் கொள்வோம். அப்போதும் அதை மிதமான அளவில், அவசியமான வரையில் மட்டும் கொடுப்பது நல்லது. "வைடமின்'பி"யைச் சேர்த்துக் கொடுத்தாலும், சேர்க்காமலே கொடுத்தாலும் பரவாயில்லை. இந்த 'ஆன்டிபயாடிக்' களைக் கொடுக்கும்போது நோயாளியின் ஆகாரத்தில் கொஞ்சம் தயிரைச் சேர்த்து வந்தால் போதும், 'ஆன்டிபயாடிக்' கின் உபயோகத்தால் குடலிலுள்ள 'மித்திரக் கிருமி'களுக்கு ஒருவித இன்னலும் ஏற்படாது. எப்போதும் போலவே அவை வைடமின்களைத் தயாரித்தலுக்குக் காரணங்களாக நின்று தொடர்ந்து செயல் புரிந்துதவும்."

"அப்படியா? ஆச்சரியமாயிருக்கிறதே! இவ்வளவு பெரிய ஆபத்தைத் தவிர்ப்பதற்கு இவ்வளவு எளிய சிகிச்சையா?"

"சிகிச்சையல்ல, சுவாமீ! உபாயம். இத்தகைய பேரியல்பு பெற்றது தயிர் என்று ஆகாரப் பொருள்களின் சத்துக்களை ஆராய்ச்சி செய்து வந்த இன்டியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் ஸைன்ஸ் என்னும் [பெங்களூர்] நிலையத்தைச் சார்ந்த ஓர் ஆராய்ச்சி நிபுணர் மூன்று, நான்கு வருஷங்களுக்கு முன் தெரிவித்துள்ளார். விஸ்தாரமான வகையில் அதிநுட்பமாக ஆராய்ச்சியை நடத்தி நூற்றுக்கணக்கானவரில் தாம் காண நேரிட்ட பலனையொட்டி இந்தத் தெளிவைக் கண்டார். இரகசியமாக வைத்துக் கொள்ளவில்லை. பத்துப் பேருக்குத் தெரியும்படியும் தெரிவித்துள்ளார். ஆகவே, நீர் கேட்ட கேள்விக்குப் பதில் இருக்கின்றதல்லவா?"

இது இப்படியிருக்க அசக்த சத்துக் கிருமிகள் விஷயமாகவும் தெரிவிக்க வேண்டிய விஷயங்கள் உண்டு. இவ்வகைக் கிருமிகள் உண்டாகாமலே இருக்க முன்னெச்சரிக்கையாக நாம் செய்ய வேண்டிய — எளிதில் செய்யக் கூடிய சில மருந்துகளுண்டு. அப்படியும் ஏற்பட்டு விடுமானால் அவற்றைப் போக்கவும் சில மருந்துகள் உண்டு.

# வலம் வந்த விநாயகர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஒரு சிறுகதை. அதுவும் பிள்ளையாரைப் பற்றிய கதை. பிள்ளைப் பிராயத்திலே கேட்ட கதையானாலும், வயது முதிர்ந்த பின்னும் திரும்பத் திரும்ப அந்தக் கதையைக் கேட்பதில் ஒரு சுவை. கதை இதுதான்.

கைலாயத்திலே ஒரு நாள் பார்வதியும் பரமேசுவரனும் தனித்திருக்கிறார்கள். அந்தச் சமயத்தில் கலகப் பிரியரான நாரதர் அங்கு வருகிறார். நல்ல மாங்கனி ஒன்றைக் கொண்டு வந்து அதை இறைவனிடம் கொடுக்கிறார். வாங்கிய கனியை அன்னையிடம் அளிக்கிறார் அவர். கனி பெற்ற தந்தையும் தாயும் கனியோடே தங்கள் பிள்ளைகளை நினைக்கின்றனர். தங்களை விடப் பிள்ளைகள் சுவைத்து உண்பார்களே என்றுதானே தாயும் தந்தையும் கருதுவார்கள். உலகின்ற அன்னையும் அத்தனும் அப்படி நினைத்ததில் வியப்பில்லையே. இந்தச் சமயத்தில் பிள்ளைகள் இருவரும், ஆம், பிள்ளையாரும் முருகனுந்தான் குதித்துக் கொண்டே அங்கு வந்து சேருகின்றனர்.

குழந்தைகளைக் கண்டதும் சிவபெருமானுக்கு இவர்களுக்குள் ஒரு விளையாட்டுப் போட்டி நடத்தலாமே என்று தோன்றுகிறது. உடனே அன்னை கையிலிருந்த அரிய கனியைக் காட்டிக் குழந்தைகளிடம் 'உங்களுக்குள் ஒரு பந்தயம். யார் முதலில் உலகைச் சுற்றி வருகிறீர்களோ அவர்களுக்கே இந்தக் கனி' என்று கூறுகின்றார். பந்தயம், போட்டி என்றாலே குழந்தைகளுக்கு ஓர் உற்சாகம். ஆதலால் தெய்வக் குழந்தைகளான பிள்ளையாரும் முருகனும் போட்டிக்குத் தயாராகி விடுகின்றனர். முருகன் நினைக்கிறான்: 'அண்ணன் அவரது மூஷிக வாகனத்தில் ஏறி அவனியைச் சுற்றுவதாவது. அதற்கு எவ்வளவு காலம் ஆகும்? நம்மிடமோ வான வீதியிலே பறக்கும் மயில் வாகனம் இருக்கிறது. ஆதலால் மாதிரம் மாத்திரம் என்ன, இந்த அண்டகோளங்கள் அத்தனையுமே அரை நொடியில் சுற்றி வந்து விடலாமே. போட்டியில் வெற்றி நமக்குத்தான்' என்று. பிள்ளையாரோ ஒன்றும் பேசாமல் அழுத்தமாக இருக்கிறார்.

போட்டி ஆரம்பமாகி விடுகிறது. உடனே முருகன் தன் 'சீர்திகழ் தோகை மயில் மீது' ஏறி வான வீதியிலே பறந்து உலகத்தைச் சுற்றப் புறப்பட்டு விடுகிறான். அவன் புறப்படும் வரை பிள்ளையார் இருந்த இடத்தை விட்டு அசையவே இல்லை. பின்பு சாவதானமாகத் தன்னுடைய வாகனத்தில் ஏறி, 'ஜம்' என்று சவாரி செய்துகொண்டே, அங்கு வீற்றிருந்த தந்தையையும் தாயையும் ஒரு சுற்றுச் சுற்றுகிறார். சுற்றி விட்டு, தந்தை முன் வந்து மாங்கனிக்குக் கையை நீட்டுகிறார். 'என்னடா இது?' என்று கேட்டால், 'உலகம் தோன்றி நின்று ஒடுங்குவதெல்லாம் உங்களிடம்தானே. ஆதலால் உங்களைச் சுற்றினால் உலகத்தையே சுற்றியதாகாதா?' என்று எதிர்க் கேள்வியே போடுகிறார் பிள்ளையார். அவ்வளவுதான். தந்தையும் தாயும் வாயடைத்துப் போய் விடுகிறார்கள்—போட்டிப் பரிசாகிய மாங்கனியைத் தட்டிக் கொண்டு, நிற்காமல் கொள்ளாமல் தன்னுடைய வாகனத்தில் ஏறிக் கொண்டு ஓடியே விடுகிறார் அவர். தம்பி வந்து பழத்தில் பங்கு கேட்பானே என்ற பயமோ என்னவோ? உலகெலாம் சுற்றி அலுத்த முருகன் வந்து விஷயம் அறிந்து தளர்வடைகிறான். தந்தை தாயிடம் கோபித்துக் கொண்டு கோவணாண்டியாகப் புறப்படுகிறான். தாயாகிய பார்வதி தன் குழந்தையை எடுத்து மடிமீது இருத்தி, "அப்பா நீயே பழமாக இருக்கும் போது உனக்கு நாங்கள் வேறு பழம் தர வேண்டுமா?" என்று கூறி அவனைச் சமாதானம் செய்து வைக்கிறாள்.



வல்லநாதர் - வல்லாம்பிகை

'முப்பழமும் நுகரும் மூஷிக வாகனர்' மாம்பழம் பெற்ற கதை இதுதான். இது எந்த ஸ்தலத்தில் நடந்தது என்பதற்கு ஆதார பூர்வமான அத்தாட்சி ஒன்றும் கிடைக்கவில்லை. அரிய உண்மை ஒன்றை விளக்க எழுந்த அற்புதமான கற்பனைதானே இக்கதை. என்றாலும் இது நடந்தது திருவலம் என்ற தலத்தில் தான் என்று அந்த ஊர் மக்கள் நம்புகிறார்கள். கதையையும் அதற்குரிய படங்களையும் எழுதி, அங்குள்ள வல்லநாத ஈசுவரர் கோயிலில் தொங்க விட்டும் வைத்திருக்கிறார்கள்.

திருவலம் என்ற இந்தச் சிறிய ஊர் வடஆர்க்காடு மாவட்டத்தில் சென்னை பெங்களூர் ரோட்டில் சென்னையி



திருவலம் - உள்கோயில்

லிருந்து எழுபத்தைந்து மைல் தூரத்திலிருக்கிறது. பொன்னை என்று இன்று வழங்கும் நீவா நதிக்கரையில் இருக்கும் தலம் அது. சென்னையிலிருந்து செல்வோர் இந்த ஊர் சேர்வதற்கு முன் ஆற்றின் மேல் கட்டப்பட்டுள்ள பாலம் ஒன்றைக் கடக்க வேண்டும். பாலம் மற்றப் பாலங்களைப் போல் செங்கல்லும் சுண்ணும்பும் வைத்துக் கட்டப்பட்டது அல்ல. எல்லாம் உருக்கு இரும்பு மயம். பாலத்தின் மேலே குறுக்கும் நெடுக்குமாக இருக்கும் இரும்புக் கிராதிகள் — உருக்கிய வெள்ளியால் ஆக்கப் பட்டவையோ என்று தோன்றும். இன்று சினிமாப் படம் பிடிப்பவர்கள் இப்பாலத்தை, இப்பாலத்தில் கார் ஓட்டிச் செல்லும் கதாநாயக நாயகிகளையெல்லாம் பல முறை படம் பிடித்து மக்களுக்குக் காட்டி மகிழ்ந்திருக்கிறார்கள். இந்தப் பாலத்தைக் கடந்ததும், இடப் பக்கம் திரும்பி, பின்பு கிழக்கு நோக்கி வந்தால் கோயிலின் பிரதான வாயிலுக்கு வந்து சேருவோம். கோயிலின் வாயில் தெற்கு நோக்கி இருக்கிறது. இருந்தாலும் இங்கு கோயில் கொண்டிருக்கும் வல்லநாதரும் வல்லாம்பிகையும் கிழக்கு நோக்கிய வண்ணமே இருக்கிறார்கள். இந்தக் கோயிலே, இந்த ஊரை யெல்லாம் மக்கள் திருவலம் என்று அழைத்தாலும், அந்தப் பழைய தேவார காலத்திலே, இதனைத் திருவல்லம் என்றே அழைத்திருக்கிறார்கள்.

நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர், கற்றவர் கண்டு மகிழும் இத்திருவல்லம் என்னும் தலத்துக்கும் வந்திருக்கிறார்.

**தாயவன், உலகுக்குத்**
**தன் ஒப்பு இல்லாத்**
**தூயவன், தூமதி**
**சூடி, எல்லாம்**
**ஆயவன், அமரர்க்கும்**
**முனிவர் கட்கும்**
**சேயவன் உறைவிடம்**
**திருவல்லமே.**

என்று வல்லநாதரைப் பாடியிருக்கிறார். கோயிலின் குடை வரு வாயிலைக் கடந்து உள்ளே வந்தால் ஓர் அழகிய சிறிய கோபுர வாயிலுக்கு வந்து சேருவோம். இக் கோபுர வாயிலையும் கடந்து உள்ளே வந்தால், அங்கு கோயில் கொண்டிருக்கும் பிள்ளையாரைக் கண்டு வணங்கலாம். பிள்ளையாருக்கு வலம் வந்த விநாயகர் என்று பெயர் இல்லை. **வரசித்தி விநாயகர்** என்றே பெயர் இட்டிருக்கிறார்கள். வலம் வந்து



வலம்வந்த விநாயகர்

மாங்கனி பெற்றுவரசித்தி பெற்றவர்; பிரார்த்தனை செய்து கொள்ளும் பக்தர்களும் வரசித்தி பெறுவதற்கு அருளுவார். இவரை இலக்கியத்தில் காண வேண்டுமானால் பதினோராம் திருமுறையையே ஒரு திருப்புத் திருப்ப வேணும். **நம்பியாண்டார் நம்பி** பாடியுள்ள நாரையூர் விநாயகர் இரட்டை மணிமாலைப் பாடல்களைப் படிக்க வேணும்.

**கொம்பனைய வள்ளி**
**கொழுநன் குருகாமே**
**வம்பனைய மாங்கனியை**
**நாரையூர் - நம்பனையே**
**தன்னவலம் செய்துகொளும்**
**தாழ்தடக்கையாய், என்னோய்**
**பின்அவலம் செய்வது ஏனோ பேசு?**

என்ற பாடலைப்படித்தால் வலம் வந்த விநாயகர் பெருமை தெரியும். கலை உலகில் இவரைக் காண— வட ஆர்க்காடு மாவட்டத்தின் தலை நகரான வேலூருக்கே போகவேண்டும். அங்குள்ள கோட்டையின் உள்ளே மூர்த்தி இல்லாக் கீர்த்தியோடு விளங்கும் ஜலகண்டேசுவரர் கோயிலுக்குள்ளேயே நுழைய வேணும். கலை உலகில் பிரசித்தி பெற்ற கல்யாண மண்டபத்துத் தூண் ஒன்றின் அடித்தலத்திலே அவரைக் காணலாம். போட்டிப் பந்தயத்தில் மாங்கனியைப் பெற்றபின் அந்த உற்சாகத்தில்அவர் மூஷிக வாகனத்தில் ஏறிச் சவாரி செய்வதே ஒரு ஜோர். இந்த நிலையிலே உற்சாகமாக அவர் வாகனத்தில்

## சிரிக்காதே!

### விளங்கிற்று ?

" தாற்காலிகமாக ஒரு மனிதனுக்கு உணவு பிடிக்காமல் இருந்தால் அவன் காதலில் இருப்பதாகப் பொருள். பிறகு நிரந்தரமாகவே பிடிக்காமல் இருந்தால் அவனுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று பொருள் !"

—ஓர் ஆராய்ச்சி முடிவு

### உண்மைதானே !

" குரைக்கிற நாய் கடிக்காது ! குரைத்துக் கொண்டிருக்கிறபோது மட்டும் !"

### பிறவிக் கடன்

" சிலபேர் கடன் வாங்கியே பாதி ஆயுளைக் கழித்து விடுகிறார்கள். மற்றொரு பாதியைக் கடனைத் திருப்பிக் கொடுக்காமலே அவர்கள் கழித்து விடுகிறார்கள்."

### பின்பற்றியவர் !

" காலம் சென்ற வீணை வித்வானைப் பின்பற்றியவர்கள் பல பேர்கள் !"

" அவர்களெல்லாம் இப்போது இருக்கிறார்களா ?"

" அதான் சொன்னேனே, அந்த வித்வானைப் பின்பற்றி விட்டார்களென்று !"

### என்ன வழி !

" நான் இல்லாமல் அவன் வாழ முடியாது என்று சொன்னாள். அதுக்குத்தான் மனிவாகத் துப்பாக்கி ஏதேனும் அகப்பட்டால் அவனுக்கு அனுப்பி வைக்கலாம் என்று பார்க்கிறேன் !"

### பொய் விளம்பி !

" என் ஆயுளில் என் வாயால் நான் பொய் சொன்னது கிடையாது !"

" நீங்கள்தான் மூக்காலேயே பேசுகிறவர் ஆச்சே !"

### பழைய விஷயம்

" ஒரு சுவர் வழியாக அந்தப் பக்கம் பார்க்க ஒரு சாதனத்தைக் கண்டுபிடித்திருக்கிறார்களாம்....!"

" அட ! இது வெகுநாளைக்கு] முன்பே கண்டு பிடித்தாகி விட்டதே."

" அப்படியா ?"

" ஆமாம்! ஜன்னல் வைப்பதுதான்."

### அப்பா—வி

! " நீ வைத்திருக்கிற பணம் அவ்வளவும் உழைத்துச் சம்பாதித்ததுதானா ?"

" ஆமாம் ! நெற்றி வியர்வை நிலத்தில் சொட்டச் சம்பாதித்தது !"

" உம் ! உன் நெற்றியிலிருந்தா ?"

"இல்லை, எங்கப்பா நெற்றியிலிருந்து!"

சவாரி செய்யும் நிலையை எந்தச் சிற்பியும் தமிழ் நாட்டில் உருவாக்கக் காணேம்.

வலம் வந்த—வரசித்தி விநாயகரை வணங்கி விட்டு வல்லநாதரையும் வல்லாம்பிகையையும் வணங்கலாம். சிலை வடிவிலே அமைந்திருக்கும் அவர்களது கோலத்தில் சிறப்பான அம்சம் ஒன்றும் இல்லைதான். என்றாலும் செப்புச் சிலைவடிவில் இருக்கும் அவர்களது திரு உருவம் கண்டு மகிழத்தக்கது. சாதாரணமாக எல்லாக் கோயில்களிலும் இருக்கும் சந்திரசேகரரைப் போலவேதான் வல்லநாதர் இருக்கிறார். அவர் பக்கலில் எழிலே உருவெடுத்தாலன்ன அழகோடு வல்லாம்பிகை நிற்கிறாள். இருவரையும் நீங்கள் முதற்பக்கத்தில் உள்ள படத்திலே பார்க்கலாம். நல்ல சோழர் காலத்துச் செப்புச் சிலைபோலவே இருக்கின்றன.

இனி, கோயிலை ஒரு சுற்றுச் சுற்றி வெளியே உள்ள மகாமண்டபத்துக்கு வந்தால், அங்கு ஓர் அதிசயம் காத்திருக்கும். எல்லாச் சிவன் கோயிலிலும் நாம் நந்தியைப் பார்த்திருக்கிறோம். பார்த்த பல கோயில்களிலும் நந்தி இறைவனை நோக்கியவண்ணமாயிருப்பதையே கண்டிருக்கிறோம். ஆண்டவனின் கட்டளைக்கு அடிபணிய எக்கணமும் தயாராயிருப்பது போல, அவர் கடைக்கண் சாடைக்குக் காத்திருப்பது போல மேற்குத் திசையை நோக்கியிருக்கும் நந்தியைத்தான் மற்றத் தலங்களில் கண்டிருக்கிறோம். ஆனால் இத்தலத்தில் மட்டும் நந்தி, சிவபிரானுக்குத் தன் பின்பாகத்தைக் காட்டிக் கொண்டு கிழக்கு நோக்கிய வண்ணமாக இருக்கிறது. இது காணக் கிடைக்காத ஓர் அதிசயம்தானே? விசாரித்தால்பக்கத்தில் உள்ள வல்லாம்பேட்டை என்னும் மலையில் வாழ்ந்து வந்த கஞ்சாரன் என்னும் அசுரன் இங்கு மக்களை வருத்த, அவர் தம் துயர் துடைக்க நந்தியை இறைவன் ஏவ, அன்று அவ்வசுரனைத் துரத்திச் சென்ற நந்தி திரும்பாமலேயே இருக்கிறது என்கிறார்கள். பசுவாகிய உயிர்கள் என்றுமே இறைவனை விட்டு ஓடத்தான் செய்கின்றன. ஆனால் இறைவனே அந்த உயிர்களுக்கு அருள் புரிய அவ்வுயிர்களைத் துரத்திக் கொண்டே ஓடி வருகிறார் என்பது இறைவனின் அளப்பரிய கருணையை விளக்கும் ஒரு தத்துவம். அந்தத் தத்துவத்தையே அருள் வேட்டை (Hound of Heaven) என்ற பாட்டிலே **பிரான்சிஸ் தாம்ஸன்** என்ற மேலை நாட்டுக் கவிஞன் விளக்குகிறான். திருவலத்தில் உள்ள வல்லநாதரும் தம்முடைய நந்தியை, உயிர்கள் ஓடும் பக்கமாக விரட்டுகிறாரோ என்று எண்ணத் தோன்றுகிறது எனக்கு.

*வல்லம் என்ற சொல் அரணுடைய ஊரைக் குறிக்கும் என்பர் ஊரையும் பேரையும் ஆராய்ச்சி செய்தவர்கள். இந்தத் திருவல்லத்தில் பாண மன்னர்களுக்கு உரிய கோட்டை ஒன்று இருந்தது என்றும், அது ஒரு பெரிய படை வீடாய்ப் பத்தாம் நூற்றாண்டில் விளங்கியது என்றும் ஒரு சாஸனம் கூறுகிறது. ஆனால் இந்தக் கோட்டையோ, கோட்டை இருந்த அடையாளமோ ஒன்றும் இன்று நமக்குத் தென்படுவதில்லை. பரவாயில்லை. சாஸனம் கூறுவதை நம்பலாந்தானே.



# உலகச் சாம்பியன்கள் தேர்ந்தெடுப்பது

# பயர்ஸ்டோன்

## ...நீங்களும் அதையே தேர்ந்தெடுங்கள்

ஏனென்றால்—உலகத்தின் தலைசிறந்த மோட்டாரோட்டப் பந்தயங்களில், ஒரு டயர் கூட பழுதுபடாமல், ஆபத்தான வளைவு சுளிவுகளுக்கும், அசுர அதிர்ச்சிகளுக்கும் கடுங் கொதிப்புகளுக்கும் ஈடு கொடுத்து பயர்ஸ்டோன் டயர்கள் தமது பாதுகாப்புத் தன்மையை ஆண்டுதோறும் நிரூபித்து வருகின்றன. உங்களுக்கும் அத்தகைய பாதுகாப்பையும் நம்பிக்கையையும் அளிப்பவை பயர்ஸ்டோன் டயர்களே. ஏனெனில் உங்கள் மோட்டாருக்கான டயர்களின் தயாரிப்பிலும் ஓட்டப் பந்தய டயர்களிலுள்ள அதே பாதுகாப்புத் தரும் அம்சங்கள் பொருந்தியிருக்கின்றன. பயர்ஸ்டோன் அளிக்கும் சிறந்த பாதுகாப்பு செயலில் நிரூபிக்கப்பட்டது.

உட்டாவிலுள்ள போன்வில் ஸால்ட் ப்ளாட்ஸ் என்னும் இடத்தில் மணிக்கு சராசரி 266 மைலுக்கு மேற்பட்ட வேகத்துடன் மோட்டாரோட்டியவரான மிக்கி தாம்ஸன், பயர்ஸ்டோன் மோட்டாரோட்டும் சாம்பியன்களின் பெயர்கள் பதித்த வாழையடிவாழையான வரிசையில் இடம் பெறுகிறார்

# Firestone

## பயர்ஸ்டோன்

## நியூ டீலக்ஸ் சாம்பியன்

### டியூப் இல்லாதது அல்லது டியூப்புள்ளது






W. 44

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

## 94

பாரத நாட்டில் வாழும் மக்கள் ஒரு இனத்தார், ஒரு பண்பாட்டைச் சேர்ந்தவர்கள். பழைய கதைகளை வைத்துக்கொண்டு வேற்றுமைகளைக் கற்பித்துக் கொள்வது அறிவீனம். புதுக் குடிகளில் கலந்திருக்கும் மக்களை ஆராய்ச்சி செய்து பிரிக்க முடியும். பாரத சமூதாயம் மிகப் பழையது. அதன் பழைய சரித்திரத்தைச் சரியான பிரமாணங்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்வது முடியாத காரியம். அவசியமும் இல்லை.

பாரத சமூதாயம் ஒன்று என்பதை உணர்ந்து வள்ளுவர் குறளில் சொல்லியிருப்பதைக் கவனித்தல் வேண்டும். முனிவர் 'குடி'யைப் பற்றி உபதேசிப்பதையெல்லாம் அந்தவழியில் பொருள் கொள்ளவேண்டும். ஆங்கிலத்தில் 'கம்யூனிட்டி' என்று சொல்லுவதே வள்ளுவரின் 'குடி'. குடும்பமோ, பந்துக்கள் கூட்டமோ, தனிக்குலமோ அல்ல.

**கருமம் செயஒருவன்**
**கைதூவேன் என்னும்**
**பெருமையின் பீடுஉடையது**
**இல்.**

*பீடு — பெருமை.*

மனிதனுக்குச் சிறந்த பெருமை சமூதாயத்துக்குத் தயங்காமல் சேவை செய்வது.

கைதூவுதல்—கையொழிதல், அதாவது சோர்தல், இவ்வாறு செய்யாமல் தயக்கமின்றிச் சேவை செய்தல் 'கைதூவாமை'.

கருமம் செய்தல் - சமூதாயத்துக்குப் பயன்பட்டு அதன் வழி தானும் பயன் பெறும் நற்கருமத்தைச் செய்தல்.

ஒரு ஜன சமூதாயத்தின் நிலை உயர வேண்டுமாயின் அந்தச்சமூதாயத்தைச் சேர்ந்த மக்களின்கண் சோம்பலற்ற முயற்சியும் நல்ல அறிவும் இருக்க வேண்டும்.

**ஆள்வினையும் ஆன்ற**
**அறிவும் எனஇரண்டின்**
**நீள்வினையான் நீளும்**
**குடி.**

*நீள்வினையான் - இடையறாத முயற்சியால், நீளும் - உயரும்.*

சோம்பல் கூடாது: உயர்தற்கு ஏற்ற செயல்களைச் செய்துமுடிக்கும் திறமும் அறிவும் வேண்டும். இது தனி மக்களுக்கு இருந்தாலே சமூதாயம் உயரும்.

• • •

சமூதாயத்துக்கு உழைத்தால் என் குடும்பமும் நானும் எப்படிப் பிழைப்பது என்று பயப்பட வேண்டாம் என்கிறார் முனிவர்.

**குடிசெய்வல் என்னும்**
**ஒருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந்து**
**உறும்.**

நான் பிறந்த சமூதாயம் உயரச் செய்வேன் என்று ஒருவன் உறுதி செய்துகொண்டு அதற்கு ஏற்ற கருமங்களில் முயல்வானாயின் தெய்வம் மடிதற்றுக்கொண்டு அவனுடைய யோகக்ஷேமத்தை அதுவே கவனிக்கும்.

*மடிதற்றல் — தொழில் செய்பவர்கள் ஆடையை இறுக உடுத்தல்.*

*முந்து உறும் - முன்வந்து அவனுக்காகச் செய்ய வேண்டியதைச் செய்யும்.*

தெய்வம் ஒரு வேலைக்காரனைப்போல் முன் நின்று அவனுக்கு உதவும்.

* * *

தம் சமுதாயத்துக்கு வேண்டியதைச் செய்யத் தாமதியாமல் விரைந்து முயல்வாருக்கு அவர் எடுத்த காரியம் சுலபமாக முடிவடையும்.

> **சூழாமல் தானே**
> **முடிவுஎய்தும் தம்குடியைத்**
> **தாழாது உஞற்று**
> **பவர்க்கு.**

சூழாமல் தானே முடிவு எய்தும்— வருந்தித் தாம் சிந்திக்காமலே காரியம் வெற்றி பெறும்.

எப்படிச் செய்து முடிப்பது என்று கவலைப்பட வேண்டாம். சமுதாய நன்மைக்கென்று எடுத்துக் கொள்ளப்பட்ட வினை வெற்றியுடன் முடியும் என்று உற்சாகப்படுத்துகிறார்.

* * *

தன் சமுதாயத்துக்குச் சேவை செய்து கொண்டு, குற்றமில்லாத வாழ்க்கை நடத்துகிறவனை உலகம் அன்புடன் நேசித்துச் சுற்றத்தார் போல் அவனைச் சூழும்.

> **குற்றம் இலனாய்க்**
> **குடிசெய்து வாழ்வானைச்**
> **சுற்றமாச் சுற்றும்**
> **உலகு.**

சுற்றமா - சுற்றமாக

சமுதாயத்துக்குச் சேவை செய்து வருகிறவனைத் தம் உறவினனாக உலகம் கருதும். சுற்றத்தார் அன்புடன் சூழ்ந்து கொள்வதுபோல் அவனை மக்கள் சூழ்ந்து கொள்ளுவார்கள்.

இதுவும் உற்சாகம் ஊட்டச் சொல்லப்பட்டது.

குற்றம் இலனாய் - பொறிகளைத் தவறான வழிகளில் செலுத்தாமல் இருப்பவனாய்.

இது சமுதாய சேவையில் ஈடுபடுகிறவர்களுக்கு மிக முக்கியமான எச்சரிக்கை. இந்தத் தூய்மை இல்லாமற் போனால் அதனால் தீமையே வளரும். சேவையில் பயன் உண்டாகாது.

---

# தேன்மழை

ஆர்வி

அத்தியாயம் 35

## உஷாவின் கோபம்

மணைப் பெண்ணைப் போல் மாலையும் கழுத்துமாய் வந்து வணங்கி நின்ற உஷாவைப் பார்த்து நட்டுவனார் சொக்குப்பிள்ளை பரவசத்துடன் நடுங்கும் குரலில், "அம்மா, குழந்தை! நீ அமோகமா, தீர்க்காயுசோடெ, மகாலட்சுமியாக விளங்கப் போறே! இதிலே சந்தேகமே யில்லே!" என்று வாய் நிறைய வாழ்த்தினார். உடல் வெடவெடக்க, இரு கைகளாலும் அவளுடைய உச்சந்தலையை மெல்லத் தடவிக் கொடுத்தார். உணர்ச்சி வசப்பட்டு, அவருடைய இரு கண்களிலும் இரண்டு மணி ஆனந்தக் கண்ணீர் துளித்து நின்றது.

அவர் யாரையுமே இத்தனை கனிவோடு பிறர் முன்னிலையில் பாராட்டியதில்லை. சிட்சை சொல்லிக் கொள்ள வரும் மாணவிகள், பேரன் பேத்தி முறையுள்ள உறவுக் குழந்தைகள் யாருமே அவரிடம் கிட்ட நெருங்க மாட்டார்கள். அவரும் யாரையும் தொட்டுச் சொல்லிக் கொடுப்பதில்லை. ஆனால் இன்று அவருடைய உள்ளம் ஒரு நிறைவைக் கண்டு விட்டது. அவருடைய தூய மகிழ்ச்சி யாருக்கும் கிடைக்காத பெரிய ஆசியாக உஷாவுக்குத் தோன்றியது. ஆயிரமாயிரம் பேருக்கு முன்னிலையில் பாராட்டும் பதக்கமும் பெறுவதை விட இது அவளுக்கு மிகமிக உயர்வானதாகப் பட்டது. அவருடைய தளர்ந்த விரல் பூவின் இதழ்களைப்போல் மெல்ல நடுங்குவதை உணர்ந்து அவள் நெஞ்சுருகத் தலைகுனிந்து நின்றாள்.

"உனக்கு என்னிக்கும் சரி, மனப்பூர்வமாக நிறைஞ்ச இடத்திலே யிருந்து சொல்றேன், ஒரு குறைவும் வராது. நீ இருக்கிற இடமும் சரி, போகிற இடமும் சரி மங்களகரமா யிருக்கும். சரஸ்வதியும் லட்சுமியும் உன்னோடே தாண்டவமாடிக்கிட்டிருப்பாங்க!" என்று மூச்சுத் திணறப் பேசினார் நட்டுவனார்.

எதிரே ஒரு புறமாகப் பாரிஸ்டரும் மறுபுறமாக அவர் மனைவி சொர்ணம்பாளும் வந்து நிற்பதைப் பார்த்து விட்டு, "போ, குழந்தே! அம்மாவுக்கும் அப்பாவுக்கும் நமஸ்காரம் பண்ணு. பெத்த வயிறு வாழ்த்திக் குளிரட்டும்!" என்று உண்மையான பரிவோடு கூறினார்.

இதைக் கேட்டதும் சொர்ணம்பாளின் குரல் கம்மியது. பரமசிவம் ஒரு முறை கனைத்துக் கொண்டார். தெய்வ மகள் என உஷா உணர்ச்சி உந்த அவர்களை வணங்கினாள். சொர்ணம்பாளின் கண்கள் அவளை யறியாமலே கலங்கி விட்டன. நீதிமன்றத்திலே நிற்கும் குற்றவாளியைப் போல் தோன்றிய பரமசிவத்தின் கண்களும் கலங்கி விட்டன. சொர்ணம்பாள் அவளுடைய கன்னங்களை வழித்தாள். பரமசிவம் பெருமூச்செறிந்தார்.

"அம்மாளுக்குல்லே — குழந்தைக்கு என் கண்ணே இன்னிக்குப் பட்டிருக்கும். மொதல்லே அதுக்குத் திருஷ்டி கழிக்கப் போடுங்க! நாலு உப்பும் மிளகாயுமா அடுப்பிலே சுத்திப் போடுங்க!" என்றார் நட்டுவனார்.

தலையை ஆட்டினாள் சொர்ணம்பாள். சுந்தரிக்கு நாட்டியம் சொல்லித் தராமல் தட்டிக் கழித்ததிலிருந்தே அவள் அவரிடம் முகம் கொடுத்து முன்போல் கலகலப்பாகப் பேசுவதில்லை. இது அவருக்கே நன்றாகத் தெரியும். ஆயினும் இந்த வேளையில் அவள் மறுத்துப் பேச முடியுமா? முகத்தைத்தான் முறித்துக் கொள்ள முடியுமா? இருந்தாலும் அவள் தலையை ஆட்டிய விதம் என்னவோ, அவருக்கு அவ்வளவு நன்றாகப் படவில்லை. அவள் அவரிடம் மட்டுமா முன்போல் இல்லை? உஷாவினிடத்திலும்தான் முன்போல் இல்லை என்று தோன்றியது. முன்னைக் காட்டிலும் பன்மடங்கு பெருமையும் பூரிப்பும் கொள்ள வேண்டிய ஒரு தாய், தம்மை முன்னிட்டுத்தான் அதையெல்லாம் அவளிடம் காட்டிக் கொள்ளாமல் இருக்கிறாளோ என்றுகூட அவர் சந்தேகப் பட்டார்.

"ஒருத்தர் கண்ணைப்போல் இருக்காது, தாயே!" என்று அதையே வற்புறுத்துவதற்காக மறுபடியும் கூறினார்.

"பொன்னி எடுத்து வைத்திருந்தாளே! பார்க்கிறேன்!" என்று சொல்லி விட்டு, சொர்ணம்பாள் அவ்விடத்தைவிட்டு வேகமாகச் சென்றாள். ஒரு கணம் தன்னையறியாமல் உஷாவிடம் பெருகி வந்த அன்பு, நட்டுவனாரின்

பேச்சினால் மறுகணமே திசை மாறி விட்டது. தாங்காமல் கண்ணைக் கசக்கிக் கொண்டு வழியில் நின்ற தன் மகள் சுந்தரியை வாரியணைத்து எடுத்துக் கொண்டு போனாள். போகும்போதே எதிரே வந்து கொண்டிருந்த பொன்னியை அழைத்து, "அடி! அவளுக்குத் திருஷ்டி சுத்திப்போடணுமாம். அதைப் போய்ப் பாரு. மற்ற வேலைகளை யெல்லாம் அப்புறம் பார்க்கலாம்!" என்று உத்தரவு போட்டு விட்டுச் சென்றாள்.

"சரிம்மா!" என்று ஓடினாள் பொன்னி.

"இதற்கு என்னடி ஓட்டம்! நகை நட்டு எல்லாம் பத்திரம்! ஓட்டத்திலே எதையாவது மறந்து விட்டாயோ — நீதான் பதில் சொல்லி ஆக வேண்டும்!"

பரமசிவம் தம் சுயநிலையை அடையச் சிறிது நேரம் பிடித்தது. அந்தச் சில விநாடி நேரம், சில நாட்களைப் போலத் தோன்றின. மகிழ்ச்சியினால் பேசமுடியாதவரைப்போல், "ம்.ம்..ம்..." என்று முனகியவாறு பெருமூச்சு விட்டார்.

"ஐயாவுக்கு ஆனந்தத்திலே பேச்சே எழும்பலே! தெரியுதே முகத்திலேயே... இது அப்படிப்பட்ட உன்னதமான வித்தைங்க! அதுவும், இதனுடை சிட்சை நாலு பேரு பாத்து, வெறுமே கைதட்டிட்டுப் போற சங்கதியில்லே! விஷயம் தெரிஞ்சவங்களுக்குச் சொல்லிக் கொடுத்து வரக் கூடியது எவ்வளவு, தானாக வரக்கூடியது — வந்திருக்கிறது எவ்வளவு என்கிறது நல்லாத் தெரியும். இதுக்குச் சொல்லி வச்சதுக்கு நானில்ல போன சன்மத்திலே புண்ணியம் செய்திருக்கணும். எனக்கே பேச முடியல்லியே! பெத்த நீங்க என்னமாப் பேச முடியும்?" என்றார் நட்டுவனார்.

"எல்லாம் உங்களுடைய..., எல்லாம் உங்களுடைய கைராசி, நல்ல எண்ணம் இதெல்லாம்தான் காரணம்!" என்று சிரித்த முகத்தோடு கூறினார் பாரிஸ்டர்.

"வேறு ஒரு எடமா இருந்தால் இவ்வளவு நான் பேசவும் மாட்டேன்; சொல்லவும் மாட்டேன். இந்த நாட்டியம் இன்னைக்கு வந்தவங்க ஏதோ கைதட்டித் தலையாட்டிப் பாராட்டிப்பிட்டுப் போற விஷயமில்லே...."

"ஆமாம்! ஆமாம்; அதில் என்ன சந்தேகம்?"

"இது ஆண்டவனுக்கு அர்ப்பணமானது...."

"ஆமாம், ஆமாம்! இன்னிக்கு வந்தவர்கள் கொண்டாடி என்ன உபயோகம்? நாளைக்கு எல்லாரும் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டாமா? இன்றைக்கு அதற்காகத்தானே ஒவ்வொரு கட்டத்திலும் போட்டோ எடுக்கச் சொன்னேன்? நாளைக்கு நல்லதாகப் பார்த்துப் பத்திரிகைகளுக்கெல்லாம் கொடுத்து அனுப்பத்தான் எண்ணிக் கொண்டிருக்கிறேன்! பத்திரிகைக்காரர்கள் வந்தவர்களிடமும் குழந்தை பெயர், உங்கள் பெயர் எல்லாம் விவரமாகப் போடும்படி சொல்லியிருக்கிறேன்!" என்றார் பரமசிவம்.

"பத்திரிகைங்களுக்கா?"

"ஆமாம்; பத்திரிகைகளில் வந்தால் தானே—?"

நட்டுவனார் குறுக்கிட்டு, "நீங்களா போய், போடச் சொல்லப் போறீங்க?" என்று வியப்போடு கேட்டார்.

விளம்பரம் வேண்டாத நட்டுவனார் யாராவது இருப்பார்களா? சொக்குப் பிள்ளையை மேலும் உற்சாகப் படுத்த எண்ணி, "உங்களையும் கூடச் சேர்த்துத் தான் சொல்கிறேன்!" என்று ஆவலைத் தூண்டும் குரலில் கூறினார் பாரிஸ்டர் பரமசிவம்.

ஆனால் நட்டுவனார் வாயிலே கையைப் பொத்திக்காட்டி, "என்னங்க, நீங்களும் கூடவா தொழில்காரங்கபோல் இதுக்கெல்லாம் ஆசைப்படறீங்க! படத்தைப் போடறதாக அவுங்களா ஆசைப்பட்டுக் கேட்க வரதா—நாம எங்க படத்தைப் போடுங்கன்னு போய் நிக்கிறதா? கலை உசந்ததுன்னு அவுங்களா வந்து கேட்டால் சரி, கொடுத்துட்டுப் போகலாம். ஆனால் நாமாக அனுப்பறது அவ்வளவு....அவசியமில்லீங்களே! இது ஏதோ ஆசைக்குச் சொல்லி வச்ச வித்தை. காசுக்குச் சொல்லி வச்சிருந்தா—அதாவது இது பிழைப்புக்காகக் கத்துக்கிட்டதாக இருந்தா — நீங்க சொல்ற மாதிரி செய்ய வேண்டியது தான்!" என்றார் நட்டுவனார்.

"அப்படியில்லே, பிள்ளைவாள்!"

"தெரியுது — என்ன சொல்ல வரீங்கன்னு. ஆனால் நான் சொல்றது—நிர்ப்பந்தத்தின்பேரிலே எதை எதையெல்லாமோ போடவேண்டியிருக்குதே— இது சுத்தமான நாட்டியம் என்கிற முறையிலே இதைப் போடுவோமென்னு அவங்களாக வந்தாலே தேவலாம் என்கிறேன். புரியுதுங்களா!" என்றார் நட்டுவனார்.

"அவர்களாக வரவேண்டியதுதான். வராமல் போனால் நாமாக அனுப்புவதிலும் தோஷம் ஒன்றும் இல்லே!" என்றார் பரமசிவம்.

"உங்களுக்குத் தெரியாததுங்களா? அப்ப எனக்குச் செலவு கொடுக்கிறீங்களா? எங்கே குழந்தை, கிரீன்ரூமிலே இருக்குதோ, உஷா! இப்படி உத்தரவு

வாங்கிக்கிட்டேன். போய் வரட்டுமா?'' என்று சற்று உரக்கக் கேட்டார்.

'' சரி, சார் ! வணக்கம் !''

'' நல்லா இரும்மா, நான் வரேன் !'' என்று வெற்றிலைப் பெட்டியை இடுக்கிக் கொண்டு புறப்பட்டார் நட்டுவனார்.

'' குப்பன் உங்களைக் கொண்டுபோய் விடத்தான் காத்திருக்கிறான். உங்களோடே வந்தவர்கள் எல்லாருமே அதில் போய் விடலாம் !'' என்றார் பாரிஸ்டர்.

''ஆமா ஆமா, அதை மறந்திட்டேனே. உஷா ! பங்கஜம் எல்லாரையும் புறப்படச் சொல்லு !''

நட்டுவனார் மற்றவர்கள் வந்து சேருவதற்காகக் காத்திருக்கும்போது பரமசிவம் தம்முடைய நோக்கத்தை அந்தரங்கமாக வெளியிடும் முறையில், '' இதெல்லாம்கூட வேண்டாம் என்று இருந்து விடுவேன். ஆனால் சிங்கப்பூர் மைனர் இருக்கிறாரே—அவருக்கு நம்முடைய உஷாவைக் கொடுப்பதாக ஒரு பேச்சு இருக்கிறது. அதை முன்னிட்டுத்தான் இந்தக் கச்சேரி, பப்ளிஸிடி எல்லாம் வேண்டியிருக்கின்றன. மைனர் இந்தக் காலத்துப் பிள்ளை ! இதெல்லாம் நாலு பேர்கள் கண்ணில் பட்டால்தான் அவருக்குத் திருப்தியாக இருக்கும். இல்லாவிட்டால் வேறு என்ன ?'' என்றார், சின்னக் குரலிலும் பெரிய குரலிலுமாக.

'' அப்படியா ? சரிதான் ! சரிதான் ! அதான் சொல்லிட்டேனே, உஷா என்னிக்கும் அமோகமாகத்தான் இருக்கப் போவுது !'' என்றார் நட்டுவனார்.

உஷா இந்த உரையாடலைச் சிறிது கேட்டும் கேளாமலும்தான் நின்று கொண்டிருந்தாள். ஜன்னலுக்கு அருகில் பாபுவின் பெயரைச் சொல்லி, யாரோ குப்பனிடம் விசாரித்துக்கொண்டிருந்ததால் அவள் கவனம் அங்கே பாதியில் திரும்பிவிட்டது.

இருளில் வெளிப் பக்கமாகப் போய், '' யார் குப்பா அது ?'' என்று கேட்டாள்.

'' நம்ம ஜட்ஜ் ஐயாவோட இரண்டாவது மகன். பாபுவை விசாரிச்சுட்டுப் போறாரு !'' என்றான் குப்பன்.

'' அவன் இருக்கிறானா இங்கே ?''

'' காணோம் ; பாதியிலேயே அம்மா கூட வண்டியிலே போயிட்டான் போலிருக்கு !'' என்றான் குப்பன்.

'' பாதியிலேயா ?'' - அதற்குமேல் உஷா அங்கே நிற்கவில்லை. வாத்தியாரை வழியனுப்பிவிட்டு, உற்சாகம் குன்றியவளாய்ப் பங்களாவுக்குள் சென்றாள்.

அவளுக்குச் சாப்பாடுகூடப் பிடிக்கவில்லை. பொன்னி எவ்வளவோ வற்புறுத்தியும் மறுத்துவிட்டு, படுக்கையில் போய்க் குப்புறப் படுத்துக்கொண்டு விட்டாள் உஷா.

அதற்குப் பிறகு அந்த மூன்று நாளும் அவள் 'ஜீஜீ' யைப் போன் மூலம் கூப்பிட்டுப் பேச முயலவில்லை. 'நாட்டியம் பார்த்தேன் ; நன்றாக இருந்தது; கடைசி வரையிலும் இருக்க முடியவில்லை. இது வருத்தமாகத்தான் இருக்கிறது !' என்று தன்னைக் கூப்பிட்டுச் சொல்ல டெலிபோன் மணி ஒலிக்கும் என்றும் எதிர் பார்த்துக்கொண் டிருந்தாள். டெலிபோனில் என்னவோ அழைப்பு வந்தது. ஆனால் அது 'ஜீஜீ' என்கிற பாபுவிடமிருந்து அல்ல ; சிங்கப்பூர் மைனரான கண்ணபிரானிடமிருந்துதான் !

நாட்டியம் மிகப் பிரமாதமாக இருந்ததாம் ! அதற்காக ஒரு விருந்தாம் ! பெற்றோருக்குச் சொன்னால் போதுமோ போதாதோ என்று அவளுக்குத் தனியாக இந்த அழைப்பாம் !

உஷாவுக்குக் கோபம்தான் வந்தது. ஆனால் அதை அந்த டெலிபோன் ரிஸீவரைத் தவிர வேறு யாரிடம் போய்க் காட்ட முடியும் ?

அன்றுதான் பத்திரிகைகளில் அவளுடைய நடனப் படங்கள் வந்திருந்தன. தினசரிப் பத்திரிகைகளிலும் அந்த வாரத்துச் சஞ்சிகைகளிலும், அவை அழகாகவே வெளியிடப்பட் டிருந்தன ! 'இதையெல்லாம் பார்த்தபிறகாவது பாபுவுக்கு என் ஞாபகம் வராமல் இருந்துவிடுகிறதா, பார்க்கிறேன் !' என்று அவள் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். அவளுடைய கை, பத்திரிகைகளின் ஏடுகளைப் புரட்ட, அவளுடைய உள்ளம் என்னவோ நட்டுவனாரிடம் பரமசிவம் கூறியதையும், பாபுவின் விசித்திரமான மௌனத்தைப் பற்றியும், எண்ணிப் புரண்டு கொண்டிருந்தது. அப்பொழுதுதான் குப்பன் உள்ளே நுழைந்து வந்தான். பின்னால் சொர்ணம்பாள் வந்துகொண்டிருப்பதைக் கூடக் கவனியாமல் அவன் வந்ததும் வராததுமாக, '' உனக்குச் சேதி தெரியுமா, உஷா ? பாபு இப்ப அந்த வீட்டிலே இல்லே. வேலையை விட்டு மூணு நாளாச்சாம் !'' என்றான்.

சொர்ணம்பாள் அருகில் வந்துவிட்டதை உணர்ந்த உஷா மிகவும் அசுவாரசியமான குரலில், '' பின்னே இவர்கள் எல்லாரும் ஓரிடத்திலே நிலையாக நிலைத்து இருக்கக் கூடியவர்களா ? காலம்தான் கெட்டுக் கிடக்கிறதே ! இப்பொழுது அதைப் பற்றி நமக்கு என்ன ?'' என்று பத்திரிகையை வேகமாகப் புரட்டினாள்.

'' நியூஸ் பேப்பரிலே வராததெல்லாம் உன்னைக் கேட்டுத் தெரிந்து கொள்ள

ஆகஸ்ட் வெளியீடு



சென்னை
காஸினோ
பிராட்வே
ராக்ஸி
மற்றும்
தென்னாடெங்கும்



தேவர் பிலிம்ஸ்

டைரக்ஷன்...
M.A.திருமுகம்
கதை, வசனம்...
ஆரூர் தாஸ்
சங்கீதம்...
K.V.மஹாதேவன்
ஒளிப்பதிவு
C.V.மூர்த்தி
ஸ்டுடியோ
விஜயா-வாஹினி

# வாழவைத்த தெய்வம்

தயாரிப்பு... சாண்டோ M.M.A.சின்னப்பா தேவர்

லாம் போலிருக்கிறதே. இந்த வேலை களினால்தான் வேலைக்கு வர உனக்கு வர வர நேரமாகிறதாக்கும்! சரி சரி, போய் உன் வேலையைப் பார்! நாது வேலைக்கு நீ இங்கே வரவில்லை!'' என்று கடுகடுப் புடன் கூறிவிட்டுச் சென்ருள் சொர்ணம் பாள். வந்தவள் உஷாவின் நடனப் படங்களைக்கூடப் பார்க்க நிற்கவில்லை. உஷா உதட்டைக் கடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். சமயம் தெரியாமல் பேசியதை எண்ணி வருந்தியவாறு, மோட்டார் ஷெட்டின் சாவியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான் குப்பன். அவன் வெளியேறும்போது வேறு யாரும் இல்லாததை நிச்சயப் படுத்திக் கொண்டு, ''காலேஜுக்குப் போக இன்று சீக்கிரம் வந்துவிடு!'' என்ருள் உஷா.

## அத்தியாயம் 36

# துண்டுக் கடிதம்

திண்ணைத் நடுக்கில் வந்து உட்கார்ந்து கொண்ட பாஞ்சாலி, ''ஆமாம், உனக் கும் அந்தப் பெண்ணுக்கும் என்ன?'' என்று பாபுவைப் பார்த்து எடுத்த எடுப்பிலேயே திடுமென்று ஒரு கேள்வி யைக் கேட்டு வைத்தாள்.

அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இவள் யாரைச் சொல்கிருள்? ''எந்தப் பெண்ணுக்கு?'' என்று கேட்டான்.

''அப்படி எத்தினி பெண்ணுக இருக்கி ருளுக உனக்கு? எல்லாம் நீ கொண்டுக் கிட்டுப் போயி நாட்டுப்புறத்திலே விட்டுட்டு வந்திருக்கியே - அதைத்தான் சொல்றேன்! இப்பத்தானே சேதி காதிலே விளுந்திச்சி. மூணு நாளா வேலைக்குக் கூடப் போகாமெ, அவளுக் காக விளுந்து விளுந்து உளேச்சியாமே!'' என்று கூறினுள்.

பாபுவுக்கு இப்பொழுதுதான் நல்ல மூச்சு வந்தது.

''ஆதரவு இல்லாதவங்களுக்கு உதவக் கூடாதா?''

''அதுக்குன்னு வேலைக்குக் கூடப் போகாமெயா?''

''நான் இப்போது வேலையில் இல்லே. இனிமேல் வேலைக்குப் போகிற யோச னேயும் இல்லே.''

பாஞ்சாலி இதைக் கேட்டதும் 'என்னது...' என்று வரிந்து கட்டிக் கொண்டு எழுந்தாள். அவளுடைய ஆடைகள்தான் மாறியிருந்தனவே தவிர, அவள் என்னவோ மாற வில்லை. பழைய பாஞ்சாலிதான் என் பதை அவள் நொடியில் காட்டிக் கொண்டு விட்டாள்.

''சங்கத்துக்குள்ளே வந்து சத்தம் எது வும் போடாதே. நாலு பேர்கள் வருகிற சமயம்!'' என்று அவளிடம் சொல்லிப் பார்த்தான் பாபு.

''நாலு பேருக்கு ரொம்பப் பயந் தவனே நீ? நாயம் எல்லாம் தெரிஞ்ச தன்னியோடே நடக்கிறவனே நீ? இல்லே, கேக்கறேன்! எவளோ ஒருத் திக்கு ஆதரவு இல்லியாம். இவுரு இருக் கிற வேலையைத் தொலைச்சிப்பிட்டு அவ ளுடைய முந்தாணியைப் பிடிச்சுக் கிட்டுப் போருராமில்லே! நல்லாத் தாண்டி இருக்குது கதை!'' என்று பாஞ்சாலி நேரடியான பல்லவியாகத் தான் பிடித்தாள்.

பாபு சுற்று முற்றும் பார்த்துவிட்டு, ''நான் உன்னோடு பேசிக் கொண்டிருக்கப் போவதில்லை. உண்மை தெரியாமல் கண்டபடியெல்லாம் பேசிக்கொண் டிருக்காதே. உனக்கு வேண்டியது என்ன? மாதம் பிறந்தால் பணம். அதை வந்து வாங்கிக்கிட்டுப் போய் விடு!'' என்ருன்.

பணத்தின் பேச்சை எடுத்ததும், எதிர் பார்த்தது போலவே பாஞ்சாலியின் குரல் மாறியது. ''வேலைக்குப் போகாமெ பணம் எங்கிருந்து கொடுப்பே?'' என்று கேட்டாள் பாஞ்சாலி.

''அதைப் பற்றி உனக்கு என்ன? எப்படியோ கொடுப்பேன்! கொடுக்கி றேனு இல்லேயா என்று பாரேன்!''

இவன் பணம் சேர்த்து வைத்திருக் கிருனு அல்லது வேறு பணம் வருவதற் கான வழி ஏதாவது இருக்கிறதா என் பதை அறிய முடியாமல் பாஞ்சாலி ஒரு கணம் திகைத்தாள். பிறகு, ''சரி, எனக்கு ஆக வேண்டியது இல்லேன்னு, எப்படி நீ நாக்கு மேலே பல்லைப் போட்டுச் சொல்லுவே? நான் உன்னே எடுக்கலியா? வளக்கலியா? ஆக்கிப் போடலியா? ஆளாக்கி வெக்கலியா? எப்பிடிப் போனுத்தான் போவுதுன்னு லேசா கேட்டுப்புடுவே?'' என்ருள்.

பாபு பேசாமல் இருந்தான். பாஞ்சாலி தொடர்ந்து, ''ஆமா, உன்னுண்டே ஒரு துண்டுக் காகிதம் இருக்குதா மில்லே? அதை மொதல்லே எடுத்துக் கொடு! மீசைக்காரரு இட்டே வாங்கிக் கிட்டு போனியாமில்லே?'' என்ருள்.

அன்று இரவு ரூபாய் நோட்டுக்க ளுடன் இருந்த துண்டுக் கடிதத்தைத்



தென்பிராந்திய ரயில்வேயைச் சேர்ந்த திரு கே. ஆர். எஸ். அய்யர் அவர்களின் குமாரி சௌ. கமலாவைத் திரு விசுவநாதன் மணந்து கொண்டார்.

தான் இவன் குறிப்பிடுகிறான் என்பதைத் தெரிந்துகொண்டான் பாபு. அவனுக்கு அந்தத் துண்டுக் கடிதத்தின் நினைவே அதற்குப் பிறகு இல்லை. அது அவ்வளவு முக்கியமானதாகவும் படவில்லை. நல்ல வேளையாக அதை அவன் கிழித்துப் போடாமல் பைக்குள் எங்கேயோ போட்டு வைத்திருந்தான்.

ஆனால் உடனே அதைப் பையினுள்ளே தேடிப் பார்த்தபோது அகப்படவில்லை. "இதற்குள்ளேதான் போட்டு வைத்திருந்தேன். அகப்பட்டால் எடுத்து வந்து கொடுக்கிறேன்!" என்றான்.

"அப்புறம் மட்டும் எங்கேருந்து குதிச்சு வந்திடப் போகுது? கெடந்தா இதுக்குள்ளாறதானே கெடக்கணும். வச்சிருக்கியா இல்லே, கசக்கிக் கடாசிப் போட்டுட்டியா?" என்று கேட்டான் அவன்.

"இல்லே, இல்லே; இதற்குள்தான் வைத்திருந்தேன். தேடிப் பார்த்தால் இல்லாமல் போகாது. இருக்கட்டுமே, என்ன அவசரம்? அப்புறமா தேடிப் பார்த்து எடுத்து வருகிறேனே?"

"அவசரமோ அவசரமில்லியோ அது உன்னண்டே கெடப்பானேன்? மீசைக்காரருக்கு மீசைதான் குத்துக் குத்தா இருக்கு. புத்தியில்லே வேணும்? ஒளுங்கா உருப்படியா அதைக் கொணாந்து கொடுத்துப்புடு, சொல்லிட்டேன். அதுக்குத்தான் உன்னைத் தேடிக்கிட்டு வந்தேன்!" என்று சொல்லிவிட்டு, வெளியே புறப்பட்டான் பாஞ்சாலி.

பஞ்சடை திரண்டுவந்த மேகம் 'பொசபொச' வென்று இரண்டு தூற்றல் போட்டு விட்டுக் கலைந்து விட்டதுபோல் இருந்தது அவன் வந்ததும் போனதும். துண்டுக் கடிதத்துக்கும் மீசைப் பக்கிரிக்கும் எந்தக் காலத்திலும் ஒரு தொடர்பும் இருக்க முடியும் என்று அவனால் எண்ணியே பார்க்க முடிந்ததில்லை. அந்தக் கடிதம் அவ்வளவு முக்கியமானதாகத் தோன்றவுமில்லை. ஆனால் அதை எங்கே காணோம்? இதற்குள் வைத்த கடிதம் எங்கே போய்விடும்? வேறு எங்கேயாவது ஜட்ஜின் வீட்டில் எடுத்து வைத்து விட்டானா? நினைவுக்கு எட்டிய வரையில் அப்படிச் செய்ததாக அவனுக்குப் படவேயில்லை. 'இருக்கும்; துணிக்குள் அகப்பட்டுக் கொண்டிருக்கும். அப்படியே கிடைக்கா விட்டாலும் அதிலிருந்த விஷயம் ஒன்றும் மறந்துவிடவில்லை. கேட்டால் சொல்லிவிடலாம்' என்று அவன் சொல்லிக்கொண்டு, காட்டாமணக்குக் குச்சி ஒன்றை ஒடித்துப் பல்லைத் துலக்கியவாறே தண்ணீர்க் குழாயடிக்குச் சென்றான். பிறகு பசி வயிற்றைப் பிசைவதுபோல் இருக்கவே, குழாயடியிலிருந்து திரும்பியதும், சட்டையொன்றை எடுத்து மாட்டிக் கொண்டு, சாலையைத் தாண்டி ஹோட்டல் ஒன்றைத் தேடிச் சென்றான்.

உள்ளத்திலே ஒரு பக்கத்தில் உஷா வந்து நின்று எட்டிப் பார்த்தாள்; மற்றொருபுறம் சண்முகம் வந்து நின்று சண்டை போட்டுக் கொண்டிருந்தான். பாஞ்சாலியும் பக்கிரியும் வந்து துண்டுக் கடிதத்தை மாறி மாறிக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவன் கால்கள் ஹோட்டல் படிகளில் மெல்ல ஏறின. ஆனால் அதே சமயத்தில் வெள்ளையன் தோட்டத்துப் பிள்ளையார் கோயிலின் வாசலருகே ஒரு வண்டி வந்து நிற்கும் என்பதை அவன் கண்டானா, என்ன?

குப்பன் வண்டியின் குழலை அழுத்திப் பார்த்தான்; அதற்கு ஒரு பயனும் ஏற்படாமல் போகவே, கீழே யிறங்கி வந்து சங்கத்தினுள் எட்டிப் பார்த்தான். பிள்ளையார் தனியாகத்தான் உட்கார்ந்திருந்தார். அங்கே பாபுவைக் காணோம்.

"அவன் வெளியே எங்கேயோ புறப்பட்டுப் போயிருப்பான்போல் இருக்கு, குழந்தை! காலேஜ்விட்டு வரும்போது பார்க்கலாம்!" என்று சொல்லிக் கொண்டே வண்டியை எடுத்தான் குப்பன்.

"எல்லாம் பார்த்தவரையில் போதும். நீ போ!" என்றாள் உஷா கோபமாக.

பின்னால் படபடவென்று ஒரு ஸ்கூட்டர் வந்து கொண்டிருந்தது. உஷா அதைக் கவனிக்கவில்லை. ஆனால் ஸ்கூட்டரில் வந்த சேகர் அவளைக் கவனித்து விட்டு, அவர்கள் வண்டியை முந்திக் கொண்டு முன்னால் சென்றான். **(தொடரும்)**

மறுபடியும் **ஆச்சரியப்படும்படியான**

ஆரோக்கியத்துடன் இருங்கள்







**வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்**

ஆரோக்கியத்தை அளிக்கும் சிறந்த டானிக் என்று நிரூபணம் செய்யப்பட்டது. அதை ஆரோக்கியத்துடன் இருக்க விரும்புவோர்களும் அவர்களது குழந்தைகளும் உலகமெங்கும் தினசரி உபயோகப் படுத்துகிறார்கள்.

**வாட்டர்பரீஸ் காம்பவுண்டில்**

போஷாக்கை ஊட்டும் கலவைகள் இருக்கின்றன. அவைகள், நீங்களும், உங்கள் குடும்பத்தினரும் வீர்யத்துடனும், ஆரோக்கியத்துடனும் சந்தோஷத்துடனும் இருப்பதற்குத் தேவையான அதிகப்படி சக்தியை அளிக்கின்றன.

**வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்**

இடைவிடாதிருந்து வரும் இருமலையும், ஜலதோஷத்தையும், தொண்டைப் புண்ணையும் போக்குகிறது. நோயுற்று குணமடைந்தபின் உடம்பு சீக்கிரமாகத் தேற்றுவதற்கு டாக்டர்களால் சிபார்சு செய்யப்படுகிறது.

மோசடி செய்ய முடியாத மூடியுடைய பாட்டில்களில், புதிய சிகப்பு லேபில்களுடன் இப்போது விற்பனைக்குக் கிடைக்கும்.




இப்பொழுது சிகப்பு தாளில் பாக்கிங் செய்யப் படுவதில்லை.

நீங்களும் ஆரோக்கியத்துடன் இருக்க நாவிற்கினிய

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சாப்பிடுங்கள்

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 49. ஜராஸந்தனிடம் புரிந்த போர்

கம்ஸனுக்கு இரண்டு மனைவிமார். ஒருத்தி பெயர் அஸ்தி. மற்றவள் பெயர் பிராப்தி. கணவன் இறந்ததும், துயர் மேலிட்டு, இருவரும் தம் தந்தை வீட்டுக்குச் சென்றனர். அவர்களுடைய தந்தை மகத நாட்டு அரசனான ஜராஸந்தன். நடந்ததைக் கேட்ட ஜராஸந்தன் சினம் கொண்டு யாதவ குலத்தை அழிப்பதற்கு வழி தேடினான். பெரும் சேனையைத் திரட்டிக் கொண்டு வந்து மதுரையை முற்றுகை போட்டான். கண்ணனோ, ஜராஸந்தனைக் கொன்றால் போதுமா, சேனையையும் அழிப்பதா என்று பலவாறு ஆலோசனை செய்து இப்பொழுது சேனையை மட்டும் அழிப்பது, ஜராஸந்தன் திரும்பவும் படையெடுத்து வருவான், அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம் என்று தீர்மானம் செய்து கொண்டார். இவ்வாறு கோவிந்தன் சிந்திக்கையில் ஆகாயத்திலிருந்து இரண்டு தேர்கள் இறங்கி வந்தன.. இரு தேர்களிலும் ஆயுதங்கள் நிரம்பி யிருந்தன. கண்ணன் பலராமனிடம் எதிரியை எதிர்க்கும்படி வேண்டிக் கொண்டார். இருவருமே தேரில் ஏறிக் கொண்டு நகரை விட்டு வெளியேறினார்கள். ஜராஸந்தன் கண்ணனை அவமதித்துப் பேசினான். தனது சேனையால் இரு குமாரர்களையும் சூழ்ந்து கொண்டு, கதிரவனை மேகத்தால் காற்று மறைப்பது போல் மறைத்தான். மாடி மீதேறிப் போரைக் காண வந்த நகரத்து மாதர்கள் கண்ணனையும், பலராமனையும் காணாமல் தவித்தனர். கண்ணன் தனது சார்ங்கம் என்ற வில்லை நாணேற்றி அம்புகளை மழையெனப் பொழிந்து எதிரியின் சேனைகளை அழித்தார்.

ஜராஸந்தனுக்கு உயிர் மட்டும் மிஞ்சியது. பலராமன் அவனைச் சிங்கமெனச் சீறிப் பிடித்தார். இப்பொழுது கொல்ல வேண்டா மென்று கண்ணன் அவரைத் தடுத்தான். ஜராஸந்தன் வெட்கம் மேலிட்டு, துறவியாகப் போகத் துணிந்தான். ஆனால் கூட இருந்த அரசர்கள், "தோல்வி என்பது விதிப்பயன். அதில் என்ன மானக்கேடு இருக்கிறது?" என்று அவனைச் சமாதானம் செய்தார்கள்.

ஜராஸந்தன் கண்ணனோடு பதினேழு தரம் போர் புரிந்தான். ஒவ்வொரு தரமும் தோல்வியுற்று ஊர் திரும்பினான். பதினெட்டாவது தடவை ஒரு யவனனை நண்பனாக்கிக் கொண்டான். யவனன் தனது சேனையோடு மதுரையை முற்றுகை போட்டான். ஜராஸந்தனும் போருக்கு வேண்டித் தயாரானான். இவ்விருவருடன் போராடும்பொழுது யாதவர்களை எதிரியின் சேனை அழித்து விடுமென்று கருதி, கண்ணன் கடல் நடுவே துவாரகை என்ற நகரம் அமைத்து அவர்களைத் தன் மாயையினால் அங்கு கொண்டு சேர்த்தான்.

பிறகு கண்ணனும், பலராமனும் மதுரையில் யவன ராஜனுடன் போர் செய்யச் சித்தமாயினர். கண்ணன் யவனனைக் கண்டதும் முதுகைக்காட்டி ஓடலானான். கண்ணனைப் பிடிக்க யவனன் பின் தொடர்ந்து ஓடினான். கண்ணன் வெகு தூரம் ஓடி யவனனை ஒரு மலைக் குகைக்கு அழைத்துச் சென்றான். கண்ணன் குகைக்குள் நுழைந்தான். பின் தொடர்ந்து சென்ற யவனன் குகைக்குள் கண்ணனைக் காணவில்லை. உறங்கிக் கொண்டிருக்கும் மற்றொரு மனிதனைக் கண்டான். ஆனால் அவனைக் கண்ணன் என்றே கருதினான். தன்னை ஓடச் செய்து விட்டுத் தூங்குவது போல் பாசாங்கு செய்கிறான் என்று எண்ணிக் கோபத்துடன் காலால் உதைத்தான். படுத்திருந்தவன் துயில் எழுந்தான். வெகு நாட்களாய் உறங்கியதால் மெதுவாகக் கண்களைத் திறந்து சுற்றிப் பார்த்தான். அருகில் நிற்கும் யவனனைக் கண்ணுற்றான். அந்தத் தீப் பார்வையிலே யவனன் எரிந்து சாம்பலானான்.

அப் பெரியோன் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த முசுகுந்தன் என்ற வேந்தன். ஒரு சமயம் அரக்கரிடம் பயந்த தேவர்கள் அவனை உதவி செய்யுமாறு வேண்டிக் கொண்டார்கள். அரசனும் இணங்கி, அவர்களை வெகு நாட்கள் காத்து வந்தான். முருகனைத் தளபதியாக அடைந்ததும், தேவர்கள் அரசனிடம் சென்று, "இதுவரையில் எங்களுக்கெனப் பட்ட சிரமத்தினின்று நீங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம்" என்றார்கள். ஆனால் விண்ணவரோடு அரசன் வாழ்ந்த ஆண்டுகள் பல. அதனிடையே அனேகம் தலைமுறைகள் தீர்ந்து கண்ணனும் அவதாரம் செய்து விட்டான். "முக்தியைத் தவிர எத்தையும் தரவல்லோம். வேண்டுவதை வினவுங்கள்" என்று அரசனை விண்ணவர் வேண்டினர். அரசன் தீராது போராடிக் களைத்திருந்தான். "நீண்ட நாட்கள் உறங்க வேண்டும். உறக்கத்தைக் கலைப்





பவன் எரிந்து சாம்பல் ஆக வேண்டும்" என்று கோரினான் மன்னவனான முசுகுந்தன். அவ் வரத்தை தேவர் அவனுக்கு அளித்தனர். அவனைக் கருவியாக்கிக் கால யவனனைக் கண்ணன் வதம் செய்தார்.

யவனன் மாய்ந்ததும் கண்ணன் தனது திருவுருவோடு முசுகுந்தன் முன் தோன்றினான். அவ் வுருவின் ஒளியில் அரசனுக்குக் கண் கூசியது. யாரென்று பல பேரைச் சொல்லி வினவினான். கடரென இருளகற்றும் மேனியுடன் குகையில் தோன்றியது விஷ்ணுவோ என்று ஐயமுற்றுக் கேட்டான். தன்னை யார் என்று தெரிவித்துக் கொண்டான். தன்னை யாரென்று கண்ணன் சொல்வது? அழியாத அனந்தனுக்குப் பல்லாயிரம் பெயர், பலகோடிச் செயல். ஆயினும் தான் பிரமனின் வேண்டுகோளுக்கு இணங்கி வசுதேவன் மைந்தனாக அவதாரம் செய்த இரகசியத்தை முசுகுந்தனுக்கு விளக்கினான். "உனக்கு அருள் அளிக்கவே இங்கு வந்துள்ளேன். என்னைச்! சரண் புகுந்தவனுக்குத் துயர் என்பது திரும்பாது" என்றான் கண்ணன்.

முசுகுந்தன் பரவசம் அடைந்தான். பலவாறு கண்ணனைப் புகழ்ந்தான். கண்ணனையே சரணடைந்தான். கண்ணன் மகிழ்ச்சி அடைந்தான். "அரசே! அனேகர் பிராணாயாமம் செய்கிறார்கள். யோக பலத்தை அடைகிறார்கள். ஆனால் அவர்களுக்கு பக்தி இல்லை. மனம் வெளியில் திரிந்து பற்றிலே பாய்கிறது. நீ எல்லாவற்றையும் துறந்து வேறு ஆசைகளை விலக்கி என்னைச் சரண் அடைந்தனை. இந்த பக்தி ஒருபொழுதும் குறையாது. அடுத்த பிறவியில் என்னை அடைவாய்" என்று அருளினான். முசுகுந்தன் குகையைவிட்டு வெளியேறி, மானிடர்களும், ஆனினமும், மரமும், செடியும் குன்றியிருப்பதைக் கண்டு, கலியுகம் ஆரம்பமானதாக அறிந்து கொண்டான். நேராக வட திசையை நோக்கிச் சென்று பத்ரிகாச்ரமத்தை அடைந்து அங்கு நாராயணனை ஆராதனை செய்தான்.

கண்ணன் மதுரைக்குத் திரும்பினான். யவனனுடைய சேனையை அழித்தான். பிறகு ஜராஸந்தன் கண்ணனை எதிர்த்துப் பெரும் சேனையைத் திரட்டிக் கொண்டு வந்தான். அப்பொழுதும் கண்ணன் பலராமனோடு போர்க்களத்தை விட்டு ஓடலானான். பயந்தவனைப் போல் பாசாங்கு செய்தான். மாயத்தை அறியாத மன்னன் சேனையுடன் அவர்களைப் பின்தொடர்ந்தான். வெகுதூரத்துக்கு அப்பால் ப்ரவர்ஷணம் என்ற மலை ஒன்று இருந்தது. அங்கு எப்பொழுதும் மழை பெய்து கொண்டிருக்கும். இருவரும் அம் மலையை அடைந்து அங்கு மறைந்தனர். ஜராஸந்தன் ஓடிய சிறுவர்களைக் காணாது திகைத்தான். அவர்களுடைய காலடியும் காணாதவனாய்க் கோபங் கொண்டான். அவர்களை வெளியேறச் செய்ய வேறு வழி இல்லை என்று தனக்குள் ஆலோசனை செய்து கொண்டு, ஏராளமான கட்டைகளை அடுக்கி மலையைச் சுற்றித் தீயை மூட்டினான். கண்ணனும், பலராமனும் மலையிலிருந்து வெளியே குதித்தார்கள். அரசன் அவர்களை அப்பொழுதும் காணவில்லை. இருவரும் கடல் சூழ்ந்த துவாரகை நகரை அடைந்தார்கள். ஜராஸந்தன் இருவரும் நெருப்புக்கு இரையானார்கள் என்று எண்ணித் தன் நாட்டை அடைந்தான்.

பிறந்து 11 மாதங்கள்கூட ஆகவில்லை —
அவன் நடக்க
ஆரம்பித்துவிட்டான்!



அவன் தாயார் அவனுக்கு

**டூமெக்ஸ்**

பேபி புட்

புகட்டுகிறாள் என்பதைச்
சொல்லவும் வேண்டுமா!

டூமெக்ஸ் பிரைவேட் லிமிடெட் பம்பாய்-1

"மதத்தாலும், ஜாதியாலும், உறவாலும், ரத்த பாசத்தாலும் காஷ்மீரம் பாகிஸ்தானுடன் இணைக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுவது உண்மையானால் அந்த நட்புறவை, கொள்ளையடிப்பதன் மூலமாகவும், கற்பழிப்பதின் மூலமாகவும், ஆக்கிரமிப்பின் மூலமாகவும் பாராமுளாவில் காண்பித்துக் கொண்டது விந்தையாகத்தான் இருக்கிறது."

— வி. கே. கிருஷ்ணமேனன்
"காஷ்மீர்-ஐ. நா. சபை பேச்சுகள்"



# வீர சக்கரம்

நாகஸ்வரக்காரர் தமது திறமையெல்லாம் காட்டி ஊதினார். மலர் மாலைகள் சிங்காரவேலுவின் கழுத்தில் குவிந்த வண்ணம் இருந்தன. "சிங்காரவேலுவுக்கு ஜே!" என்ற கோஷங்கள் நிமிஷத்துக்கொரு முறை காதைப் பிளந்தன.

ஊர்வலம் ஊர்ந்து வந்தது. வீட்டுக்கு வீடு அதை நிறுத்தி ஆரத்தி எடுத்தார்கள். கிராம முனிசிப் வீட்டு வாசலுக்கு வந்ததும் கமலியும் அவள் தங்கையும் ஆரத்தித் தட்டை எடுத்துக்கொண்டு வாசலுக்கு வந்தார்கள்.

ஒரு வருஷத்துக்குப் பின் அத்தானைப் பார்க்கப் போகும் ஆர்வத்தில் கமலி ஓடோடியும் வந்தாள். ஆனால் வெட்கத்தை மீறி அத்தானை நிமிர்ந்து பார்க்கும் அளவுக்கு அவளுக்குத் தைரியம் வரவில்லை. குனிந்த தலை நிமிராமல் மூன்றுமுறைதட்டைச் சுழற்றிவிட்டுமருதாணியிட்டுச் சிவந்த விரல் மேலும் சிவக்க அதில் தோய்த்தாள். அத்தானின் நெற்றியை நோக்கி மெல்ல நகர்ந்தது அந்த விரல். கூடவே அவளுடைய அகன்ற கண்களின் கருவிழிகளும் நகர்ந்தன. அத்தானின் முகத்தைத் தயங்கித் தயங்கி ஏறிட்டுப் பார்த்தன.

அன்புடன் நோக்கிய அந்தக் கண்களுக்குத் தென்பட்டது, வெறுப்பு, கடுகடுப்பு, அலட்சியம், கோபம்—இத்தனையும் கலந்த ஒன்று. திலகமிடப்போன விரல் நடுக்கத்தினால் நெற்றியில் தாறுமாறாக அப்பிவிட்டது. உள்ளம் பதறும்போது கரங்கள் மட்டும் எப்படி அமைதியாக இருக்க முடியும்?

அவனுடைய வெறுப்பு வெளிப்படையானதல்ல. உண்மையானது. இதயத்திலிருந்து எழுவது. சுற்று வட்டாரத்தையும் உற்றார் உறவினரையும் நண்பர்களையும் உலகத்தையும் ஏன் அவளையுமே அணைத்துக் கொண்ட வெறுப்பு அது. அதைக் கமலி புரிந்து கொண்டாள். கமலியின் நடுக்கம் அந்த வெறுப்பைக் கண்ட பயத்தால் ஏற்பட்டது. அதைச் சிங்காரம் கண்டு கொண்டான்.

ஊர்வலம் மேலே நகர்ந்தது. வீர சக்கரம் பெற்றுத் திரும்பிய வீரனுக்குப் பிரமாதமான முறையில் வரவேற்பு நடத்தி விட்டார்கள் கிராமத்து மக்கள்.



கி. ராஜேந்திரன்

சிங்காரம் மரத்தடியில் உட்கார்ந்து, சிரித்துக் கும்மாளம் போட்டுக் குதித்தோடிய ஆற்றை உற்றுப் பார்த்தான். அத்தானுக்கு வரவேற்பளித்துக் குதூகலமாக ஓடும் ஆறாகக் கமலிக்குத் தோன்றியது. தன்னைப் பார்த்து ஏளனம் செய்து அது நகைப்பதாகச் சிங்காரத்துக்குத் தோன்றியது. வெறி பிடித்தவன் போல ஆற்றை வெறித்துப் பார்த்த அவனுடைய முகத்தில் வெறுப்பின் சாயல் கொஞ்சமும் குறையவில்லை.

"அத்தான்!"—கமலி அவன் பின்னால் நின்று அழைத்தாள்.

அவள் கூப்பிட்டது அவன் காதில் விழுந்தது; ஆனால் திரும்பிப் பார்க்கவில்லை.

"அத்தான்" என்றாள் கமலி மறுபடியும். அவன் திரும்பவேயில்லை. கமலி விடுவதாக இல்லை. அவன் முன்னால் வந்து நின்று கொண்டாள். "அத்தான்! என்னைப் பிடிக்கவில்லை என்றால் சொல்லிவிடுங்கள். போய் விடுகிறேன். ஏன் இப்படிப் பேசாமலேயிருந்து கொல்லுகிறீர்கள்?" என்று கேட்டாள் ஆத்திரத்தோடு.

"கமலி! நீ ஏன் இங்கு வந்தாய்? யார் வரச் சொன்னது உன்னை?" என்று இரைந்தான் அவன். ஆற்றைப் பார்த்துத் தான் பேசினான்.

"இங்கு நான் வருவதற்கு யாரைக் கேட்க வேண்டும்?" மிடுக்காகக் கேட்டாள் கமலி. உடனே குழைந்தாள்: "அத்தான்! உங்களுக்கு என்ன வந்து விட்டது? சரியாக ஒரு வருஷத்துக்குப் பிறகு சந்திக்கிறோம். அன்பாக இரண்டு வார்த்தைகள் என்னிடம் பேசக் கூடாதா?"

"இதே ஆற்றங்கரையில் மணிக்கணக்காகப் பேசிப் பொழுது போக்கிய நாட்களை மறந்து விட்டீர்களா? எவ்வளவு நேரம்

வம்பளந்தாலும் போதாமல், ஆசை தீராமல் திரும்பிய நாட்கள் நினைவில்லையா ?''

''சொல்லு கமலி, சொல்லு! அந்தப் பழைய ஆனந்தமான நாட்களைப் பற்றி நிறையச் சொல்லு'' என்றான் சிங்காரம்.

சென்று போன நாட்களின் இன்ப நினைவு அவன் முகத்தில் மகிழ்ச்சியை உண்டாக்கா விட்டாலும் தெளிவை உண்டாக்கியது.

''நீங்கள் முதன் முதலில் பட்டாளத்தில் சேரப் போவதாகச் சொன்ன போது எனக்குப் பத்து வயது அத்தான்! நீங்கள் 'மக்'காக உடையணிந்து 'டக் டக்' கென்று பூட்ஸ் ஒலியுடன் மிடுக்காக நடப்பதைக் கற்பனை செய்து பார்த்தேன். அதைப் போல நானும் நடந்து காட்டி எல்லாரையும் வயிறு குலுங்கச் சிரிக்க வைத்தேன்.

''ஐந்து வருஷங்களுக்குப் பிறகு நீங்கள் இரண்டு மாத லீவில் திரும்பி வந்தீர்கள். எனக்குக் கட்டுக்கடங்காத குதூகலம். ஆனால் முன்னைப் போல் குழந்தை உள்ளத்துடன் இல்லை நான். அதில் கள்ளம் புகுந்து விட்டது.

''ஒரு நாள் நீங்கள் சற்றுத் தூரத்தில் வருவதைப் பார்த்து விட்டு ஆற்றுக்குள் குதித்து, மூச்சைப் பிடித்துக் கொண்டு மூழ்கிவிட்டது போலப் பாசாங்கு செய்தேன். நீங்களும் பயந்து போய் என்னைத் தேட ஆரம்பித்தீர்கள். நீருக்குள் என்னை நீங்கள் தேடும் போது நான் உங்களுக்குத் தெரியாமல் கரையேறி விட்டேன். மூச்சு முட்டி நீங்கள் மேலே வந்த போது உங்களைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தேன்.

''மேல் துண்டால் தலையைத் துவட்டிக் கொண்டே, 'போக்கிரி!' என்று என்னைக் கோபித்துக் கொண்டீர்கள். கோபத்தில் அடிக்கக்கூடச் செய்தீர்கள். அது எனக்குக் கொஞ்சம்கூட வலிக்கவேயில்லை. சிரிப்புத் தான் வந்தது. இதே மரத்தடியில் உட்கார்ந்து மணிக்கணக்காகப் பேசித் தீர்த்தோம். வீட்டில் பெரியவர்கள் நம்முடைய கல்யாணத்தைப் பற்றிப் பேசினார்கள். நல்ல நாள் பார்த்தார்கள். இதனால் நம்முடைய குதூகலம் அதிகமாயிற்று.

''கல்யாண தினத்துக்கு இரண்டு வாரம் இருக்கும் போதுதான் உங்களுக்குக் கடிதம் வந்தது. லீவு ரத்தாகி விட்டது என்றும் உடனே திரும்பி வரும்படியும் கடிதத்தில் எழுதி யிருந்தது. நீங்களும் பிடிவாதமாகப் புறப்பட்டுப் போய்விட்டீர்கள்.''

''ஆமாம் கமலி! பிடிவாதமாகத்தான் புறப்பட்டுப் போனேன். நாட்டில் அமைதி நிலவும் போது பட்டாளத்தில் தைரியமாகச் சேர்ந்து விட்டு யுத்தம் வரும் போது பயந்து ஒளிந்து கொள்ள முடியுமா? அந்நியர்கள் நமது பிரதேசத்தில் நுழைந்து விரைந்து முன்னேறும் போது சும்மா பார்த்துக் கொண்டு நிற்க முடியுமா?

''இந்தியத் துருப்புக்கள் தங்கள் கடமையை நிறைவேற்றப் புறப்பட்டனர். நமக்குச் சுதந்திரம் கிடைத்த அதே வருஷத்தில் அக்டோபர் மாதம் 27-ந் தேதி இந்தியாவிலிருந்த அத்தனை விமானங்களையும் அரசாங்கம் எடுத்துக் கொண்டது. பிரயாணிகளின் போக்குவரத்து ஸ்தம்பிக்க எல்லா விமானங்களும் இந்தியப் போர் வீரர்களைக் காஷ்மீரத்துக்கு ஏற்றிச் சென்றன. ஒரே நாளில் இரண்டாயிரம் சிப்பாய்கள் ஸ்ரீநகரில் இறங்கினார்கள். விமானத்திலிருந்து இறங்கினதும் இறங்காததுமாக எங்களுக்கு வேலையிருந்தது. காஷ்மீரத்தின் தலைநகரான ஸ்ரீநகரின் விமான நிலையத்துக்கு மிக அருகில் வந்து விட்ட அந்நியர்களை விரட்டி அடித்தோம். அடுத்த பத்து மாதங்களில் - ஐ. நா. சபையின் போர் நிறுத்த உடன்படிக்கை அமுலுக்கு வரும் வரையில் - எத்தனை எத்தனையோ போர்க்களங்களை நான் பார்த்து விட்டேன்.

''லீவு முடிவதற்கு முன்னாலேயே நான் இங்கிருந்து புறப்பட்டுப் போனேனல்லவா? அப்போது உன் புகைப்படம் ஒன்றையும் எடுத்துச் சென்றேன். நினைவிருக்கிறதா? அதை ஒரு சமயம் எங்கோ கைநழுவ விட்டு விட்டேன். எங்கெங்கெல்லாமோ தேடிப் பார்த்தேன். அகப்படவில்லை. அதைத் தற்செயலாகக் கண்டெடுத்த ரஞ்சித் சிங் பத்திரமாக என்னிடம் சேர்ப்பித்தான். 'ஆசையுடன் கொண்டு வந்ததை அலட்சியமாகப் போட்டு விட்டாயே' என்றான். நான் சந்தோஷத்தில் அவனை அப்படியே கட்டிக் கொண்டு விட்டேன். அவன் என்னை அணைத்துக் கொண்டதை இப்போது நினைத்தால்கூட உடம்பு வலிக்கிறது, கமலி!

''ரஞ்சித் சிங்குக்குச் சுமார் நாற்பது வயது. ஆனால் அப்படி மதிக்க முடியாது. இளைஞன் என்றே தோன்றும். தாடி மீசை யெல்லாம் பிரமாதமாயிருக்கும். வீரன் என்றால் அவன் தான் வீரன் கமலி! பார்த்தாலே வீரன் என்று தோன்றும் கம்பீரம். ஆஜானுபாகுவான தோற்றம். உரலைப் போல மார்பு. அத்தனை அழுத்தமும்கூட. உலக்கை போலக் கைகள். அவனுடைய கண்களிலேயே வீர உணர்ச்சி தாண்டவமாடும்.

''அவன் என்ன செய்தான், தெரியுமா? என் சட்டையைத் திறந்து மார்போடு உன் போட்டோவை வைத்துப் பித்தான்களைப் போட்டான். 'போர்க்களத்துக்குப் போனாலும், அவளை எப்போதும் இதயத்துக்கு அருகிலே வைத்திரு' என்றான். எவ்வளவு நல்ல மனிதன் பார்த்தாயா? தப்பித் தவறி நான் உயிர் துறக்க நேர்ந்தாலும் உன்னை மார்புறத் தழுவியபடியே இறக்க வேண்டும் என்று விரும்பினான் ரஞ்சித் சிங்.

''ரஞ்சித் சிங்கை உடனே எனக்கு ரொம்பவும் பிடித்து விட்டது. உன் போட்டோவை எடுத்துக் கொடுத்ததன் மூலம் எனக்கு அறிமுகமான அவனை என்னுடைய இணைபிரியாத் தோழனாக்கிக் கொள்ள விரும்பினேன். ஆனால் அது எளிதான காரியமாகத் தோன்றவில்லை. அவனுடன் பேசுவதே கடினமாக இருந்தது. பதிலுக்கு அவனும் முகம் கொடுத்துப் பேசினால்தானே? எதையோ பறி கொடுத்து விட்டவன் போல் உட்கார்ந்திருப்பான். எங்கோ ஒரு மூலையில் வெறித்து வெறித்துப் பார்ப்பான். திடீரென்று அவன் உதடுகள் துடிக்கும், கரங்கள் நடுங்கும், கண்கள் சிவக்கும். எதையோ செய்யக் காத்திருப்பது போலவும் செய்ய முடியாமல் தவிப்பதுபோலவும் தோன்றும் எனக்கு.

''ஆனால் நான் சுலபத்தில் அவனை விட்டு விடுவதாக இல்லை. கடைசியில் என் தொந்

தரவு பொறுக்க முடியாமல் 'என் குடும்பத்தினர் பாராமுலாவில் இருக்கிறார்கள்! போதுமா? புரிந்து கொண்டாயா? இனி மேலும் என்னைத் தொந்தரவு செய்யாதே, போ!' என்று கத்தினான்.

"நான் வாயடைத்துப் போய் நின்றேன். இதை நான் சற்றும் எதிர்பார்க்கவேயில்லை. பாராமுலாவில் பாகிஸ்தானிய அதிகாரிகளின் உதவியுடன் பட்டாணியர்கள் புகுந்து செய்த அக்கிரமங்கள் எங்கள் காதுக்கு எட்டியிருந்தன. அந்த நகரத்தின் செல்வத்தை யெல்லாம் கொள்ளையடித்தும், இளம் பெண்களைக் கற்பழித்தும், ரத்த வெறியில் வயோதிகர்களையும் குழந்தைகளையும் கொன்று குவித்தும், வீடுகளைத் தீயிட்டுப் பொசுக்கியும், கண்ணில் தென்பட்டவர்களையெல்லாம் கட்டுத் தன்னியும் அட்டூழியம் செய்தார்கள். அதைப் பற்றி நினைத்தபோதெல்லாம் எங்கள் ரத்தம் கொதித்தது. சீக்கிரமே முன்னேறிப் போய்ப் பாராமுலாவை மீட்க வேண்டும்; பட்டாணியர்களிடம் சிக்கித் தவிக்கும் அந் நகர மக்களைக் காப்பாற்ற வேண்டும் என்று நாங்கள் ஒவ்வொருவரும் துடிப்போடுதான் இருந்தோம். ஆனால் இப்படி ஒரு நிலை ஏற்படும் என்று நான் நினைக்கவேயில்லை. ரஞ்சித் சிங்கின் குடும்பம் அங்கே பட்டாணியர்களிடம் என்ன பாடுபடுகிறதோ! பாவம்! அவன் மனம் எவ்வளவு வேதனைப்படும்?

"அவன் அருகே சென்றுட்கார்ந்து ஆறுதலாக இரண்டு வார்த்தைகள் சொன்னேன்.

"ரஞ்சித் சிங் பதில் பேசாமல் பையிலிருந்து பேனாக் கத்தியை எடுத்தான். கீழே கிடந்த ஒரு மரத் துண்டை எடுத்துச் சீவ ஆரம்பித்தான். அவன் முன்னால் எதிர்ப்படும் பட்டாணியர்களின் கதி என்ன என்பது அப்போதுதான் எனக்கு விளங்கியது.

"காஷ்மீரப் போர் துவங்கிய பதின்மூன்றாவது நாள் நாங்கள் பாராமுலாவைச் சென்றடைந்தோம். வெற்றி வீரர்களாக நாங்கள் நகரத்துக்குள் நுழையும் போது ரஞ்சித் சிங் எங்களுடன் வரவில்லை. அவன் இறந்துபோய் மூன்றுநாட்கள் ஆகியிருந்தன.

"ரஞ்சித் சிங் எப்படி இறந்து போனான் தெரியுமா கமலி? சுத்த வீரனாகப் போர்க்களத்திலே உயிர் துறந்தான். நானும் அவனும் கொரில்லா படையில் இருந்தோம். சில மைல்களுக் கப்பால் இரண்டு பாகிஸ்தான் ராணுவ அதிகாரிகளின் தலைமையில் பட்டாணியர்கள் தண்டு இறங்கியிருந்தார்கள். அவர்கள் சுமாராக எவ்வளவு பேர் இருப்பார்கள், ஆயுத பலமென்ன என்று நோட்டம் பார்த்து வர நாங்கள் இருபத்தைந்து பேர்கள் கிளம்பினோம்.

"நாலா பக்கமும் கண்ணோட்டம் செலுத்தியபடியேதான் முன்னேறிக் கொண்டிருந்தோம். திடீரென்று 'பட் பட் பட் பட்' என்று இயந்திரத் துப்பாக்கிகள் இயங்கும் பயங்கர ஒலி கேட்டது. 'காப்டன்' எங்களை உடனே பின்வாங்கச் சொன்னார். மரங்களுக்குப் பின்னால் ஒளிந்தும் மறைந்தும் பின்வாங்கும்படி உத்தரவிட்டார். நாங்கள் எல்லோரும் அப்படியே செய்தோம். அதுதான் புத்திசாலித்தனம் என்று தெளிவாகத் தெரிந்தது. எதிரிகள் குழி பறித்து அதற்குள் மறைந் இருந்தார்கள். அவர்களுடைய 'மெஷின் கன்'களின் நுனி மட்டும் குழிக்கு வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தன. அப்படிச் சுமார் நூறு துப்பாக்கிகள் இருக்கும். அதற்குப் பின்னால் இன்னும் அதைப் போலவே ஐந்தாறு வரிசைகள். நாங்கள் மட்டுமல்ல, எங்கள் பட்டாளத்தைச் சேர்ந்த அனைவருமே வந்தாலும் வரிசையாக நின்று நெருப்பைக் கக்கும் அந்த இயந்திர அரக்கர்களைத் தாண்டிப் போக முடியாது. உதவிக்கு இன்னும் பட்டாளங்கள் வரும்வரையில் காத்திருக்க வேண்டியதுதான்.

"காப்டனின் உத்தரவுப்படி நான் சர்வ ஜாக்கிரதையாக, குப்புறப் படுத்தபடியே நெளிந்து நெளிந்து பின்னால் நகர்ந்தேன். ஆனால் என் அருகிலே இருந்த ரஞ்சித் சிங்கின் முகத்தில் மட்டும் அருவருப்பைப் பார்த்தேன். 'அவமானம்' என்று அவன் வாய் முணுமுணுத்தது. என்னென்னவோ வாயில் வந்தபடி யெல்லாம் எதிரிகளைத் திட்டினான். அவன் கோபத்தைக் கிளறி விடுவது போல எதிரே இருந்த குழியிலிருந்து மறுபடியும் ஒலி எழும்பியது.

"'பட் பட் பட் பட்!' என்ற இயந்திரத் துப்பாக்கிகளின் வெடியோசை அல்ல.

"சிரிப்பொலி!

"கேலிச் சிரிப்பு!

"நான் சிங்கைப் பார்த்தேன். அவன் முகம் பயங்கரமாக மாறியது. விழி பிதுங்க அவன் கோரமாகத் தோற்றமளித்தான். கருமணிகள் இரண்டும் கண்களுக்குள்ளே சுழன்று சுழன்று வந்தன. துப்பாக்கியைப் பிடித்திருந்த அவன் கரங்கள் இறுகின.

"'சிரிக்கிறீர்களா?' என்று அடித் தொண்டையில் கத்தியபடியே அவன் மரத்தின் மறைவிலிருந்து பாய்ந்து முன்னால் ஓடினான். பீமனைப் போன்ற உடல் அமைப்பு கொண்ட அவனைத் தடுத்து நிறுத்த நான் செய்த



நண்பர்: கலைச் சோலையில் நீங்கள் எழுதி வந்த தொடர் கதை நிஜவாழ்க்கையில் நடக்கும் சம்பவங்களையெல்லாம் தத்ரூபமாகப் பிரதிபலித்ததே ஏன் பாதியிலேயே நிறுத்தி விட்டீர்கள்?

எழுத்தாளர் (சோகமாக): நிறுத்தாமல் என்ன செய்வது? எதிர் வீட்டுக்காரனும் பக்கத்துப் பங்களா ஆசாமியும் மான நஷ்ட வழக்குப் போட்டது மல்லாமல் உதைக்க வேறு வந்துவிட்டார்களே!

முயற்சி பலனளிக்கவில்லை. அவன் பாய்ந்த வேகத்தில் நான் கீழே விழுந்து உருண்டேன். இரும்பவும் நான் தலையைத் தூக்கிப் பார்த்த போது ஒரு பயங்கரக் காட்சியைக் கண்டேன்.

''ரஞ்சித் சிங்கின் உடலைத் துப்பாக்கி ரவைகள் சல்லடையாக்கிக் கொண்டிருந்தன. அவன் தன் மார்பைப் பிடித்துக் கொண்டு முன்னுக்கும் பின்னுக்குமாக ஒடிந்து துவண்டான். 'என் உடலை எவ்வளவு வேண்டுமானாலும் துளைத்தெடுங்கள், நான் கோழையாகமாட்டேன்! கீழேவிழமாட்டேன்!' என்று சவால் விடுவது போல இருந்தது அவன் நின்ற படியே புழுவாக நெளிந்த காட்சி. தான் விடுத்த சவாலை நிறைவேற்றியும் விட்டான் ரஞ்சித்சிங். உயிர் பிரியும்வரை அவன் தோல்வியை ஒப்புக்கொள்ளவில்லை. வலியினால் கீழே சாய்ந்து விடவில்லை. உடலைவிட்டு உயிர் பிரிந்துபோய்ப் பிணமான பிறகுதான் கீழே விழுந்தான்.

“அன்று இரவு எனக்குத் தூக்கம் வரவில்லை. என் நண்பன் உயிரற்று விழுந்து கிடந்தான். நாதியற்றுச் செத்துக் கிடந்தான். நண்பனை அந்த நிலையிலேயே விட்டு வைப்பது சரியென்று எனக்குத் தோன்றவில்லை. மரியாதையுடன் அடக்கம் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தேன். அதிகாரிக்குத் தெரிந்தால் சம்மதிக்க மாட்டார். யாருக்கும் தெரியாமல் கூடாரத்தை விட்டு வெளியேறினேன். இருட்டில் தட்டுத் தடுமாறி நண்பன் விழுந்து கிடந்த இடத்தைச் சென்றடைந்தேன். அவன் உடல் அங்கேயே தான் கிடந்தது. சற்றுத் தூரத்தில் எதிரிகள் முகாமில் விளக்கொளி தெரிந்தது. தரையில் படுத்துக் கையாலும் காலாலும் தவழ்ந்து ஊர்ந்தேன். அருகே சென்றதும் அவன் ஒரு கையைத் தன் சட்டைக்குள் நுழைத்தபடியே விழுந்து கிடப்பதைக் கண்டேன். எனக்கு உடனே ஒரு எண்ணம்தோன்றியது. சட்டைப் பித்தான்களை அவிழ்த்தேன். நான் எதிர் பார்த்தபடியே அவன் ஒரு போட்டோவைத் தன் மார்பிலே வைத்திருந்தான். அந்தப் போட்டோவைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேதான் உயிரை விட்டிருந்தான். அவன் ரத்தத்தில் தோய்ந்திருந்த அந்தப் போட்டோவை இருட்டிலே சரியாகப் பார்க்க முடியவில்லை. அதைச் சட்டைப் பைக்குள் செருகிக்கொண்டு நண்பனைத் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு ஓட ஆரம்பித்தேன். அடுத்தகணம் 'பட் பட்' என்று 'மிஷின் கன்'களின் பயங்கர ஓசை கேட்டது. இருட்டும் நண்பனின் உடலும் சேர்ந்து என்னைக் காப்பாற்றின. ஆம், என் மீது சுடப்பட்ட தோட்டாக்களை என் முதுகில் தொங்கிக் கொண்டிருந்த ரஞ்சித் சிங்கின் உடல் ஏற்றுக் கொண்டது. உயிருக்குப் பயந்து ஓடியதில் ரஞ்சித்சிங்கின் உடல் கனத்தைக்கூட நான் பொருட்படுத்தவில்லை.

''முகாமில் எனக்காக 'காப்டன்' காத்திருந்தார். அதிகாரிகளுக்குக் கீழ்ப்படியாததால் தான் ரஞ்சித் சிங் இறந்துபோனான் என்றும் அதே தவற்றை நானும் செய்வதாகவும் எல்லோர் எதிரிலும் கோபித்துக்கொண்டார். பின்னால் ஒருவருக்கும் தெரியாமல் என் முதுகில் அன்புடன் தட்டிக் கொடுத்து தனக்கும் மனித இதயம் இருக்கிறது என்று காண்பித்துக் கொண்டார்.

''மறுநாள் ராணுவ மரியாதையுடன் நண்பனை அடக்கம் செய்தோம். அது முடிந்த பிறகு நண்பன் இறக்கும் தறுவாயில் தன் கையிலே கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த படத்தின் ஞாபகம் வந்தது. அதை எடுத்துப் பார்த்தேன்.

''அவள் ஓர் இளம் பெண். அழகிய பஞ்சாபிப் பெண். யௌவனத்தைப் பறைசாற்றும் எழிலுருவத்தோடு ஒட்டியதுபோல அவள் பஞ்சாபிப் பாணியில் மேலங்கி அணிந்திருந்தாள். அதற்கும் மேல் ஒரு சல்லாத் துணி உடலைச் சுற்றி வளைந்து அணைத்திருந்தது. வட்டவடிவமான முகத்தையும், பிரிந்திருந்த உதடுகளையும் அதனூடே தெரிந்த வரிசையான பற்களையும் பார்த்தபோது நிஜமாகவே அவள் என் எதிரே நின்று 'கலகல'வென்று சிரிப்பது போலத் தோன்றியது. அந்தச் சூழ்நிலையில் அவளுடைய சிரிப்பு விநோதமாகப் பட்டது எனக்கு. போட்டோவுக்கு நடுவேயோ ரத்தக் கறை. அதை மறுபடியும் பைக்குள் போட்டுக் கொள்ளப் போன நான் தற்செயலாக அதன் பின் பக்கத்தைப் பார்த்தேன்.

'''அருமை நண்பனுக்கு. நான் இறந்து போக நேரிட்டால் இவளைக் காப்பாற்று' - ரஞ்சித்சிங் எழுதியிருந்தான்.

'''சத்தியமாகக் காப்பாற்றுவேன்!' என்று நான் வாய்விட்டுச் சொன்னேன்.

''அதற்குப் பிறகு நான் ஈடுபட்ட பல போர்களிலும் சாவைப் பற்றிய பயமே இல்லாமல் எந்த இக்கட்டான நிலையிலும் புகுந்து சண்டையிட்டேன். நண்பனுடைய மரணம் சாவைப் பற்றிய சிந்தனைக்கே இடமில்லாமல் செய்து விட்டது. ரஞ்சித்சிங் இறந்து விட்டான். ஆனால் அவனுடைய வீரம் இறக்கவில்லை. அது என்னுள் புகுந்து என்னை ஆட்டி வைத்தது. வீரசக்கரமும்வாங்கிக்கொடுத்தது.

''பாராமுலாவுக்குள் வெற்றி வீரர்களாக நாங்கள் நுழைந்தோம். ஆனால் நகரம் வெற்றிக் கோலத்தில் இல்லை. வீட்டுக்கு வீடு ஓலக்குரல், இடிந்த சுவர்கள், சாம்பராகிப் புகையும் வீடுகள், மானத்தைப் பறிகொடுத்த பெண்கள். அரக்கர்களின் அட்டூழியத்தில் அந்த நகரமே அலறிக் கொண்டிருந்தது.

''பட்டாணியர்கள் ஓடி விட்டார்கள். அவர்கள் செய்துவிட்ட பயங்கரச் செயல்கள் எங்கே ஓடும்? பதினாலாயிரம் மக்கள் நிரம்பிய நகரத்தில் இப்போது மிஞ்சியிருந்தவர்கள் ஆயிரம் பேர்கள்தான்!

''அந்த ஆயிரத்தில் ஒருத்தியாக ரஞ்சித் சிங்கின் மனைவி இருக்கக் கூடாதா? அவன் டைரியிலிருந்து விலாசத்தைத் தெரிந்து கொண்டிருந்தேன். வீட்டை (அதை வீடு என்று இன்னும் சொல்லலாமென்றால்) நான் அடைந்தபோது போட்டோவில் நான் கண்ட பெண் கதவைத் திறந்தாள். அதே பெண் தான். அதே இளமை. அதே பால் வடியும் முகம். அதே யௌவனப் பூரிப்பு. ஆனால் அந்தப் புகைப்படத்தில் கண்ட குதூகலத்தை, கலகலப்பான சிரிப்பை அவளை நேரிலே கண்டபொழுது காண முடியவில்லை.

"'உங்கள் கணவர் ரஞ்சித் சிங்...!' என்று ஆரம்பித்தேன்.

"அவள் முகத்தில் புன்னகையின் சாயல் நெளிந்தது. 'கணவரல்ல; அப்பா! எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லையே!' என்றாள் அவள்.

"என்னுடைய முட்டாள்தனத்தை நொந்து கொண்டேன். இந்தச் சின்ன விஷயம் எனக்கு ஏன் தெரியாமல் போய்விட்டது? மார்போடு ஒரு புகைப்படத்தை ஒருவன் அணைத்துக் கொண்டால் அது காதலியாகவோ அல்லது மனைவியாகவோதான் இருக்க வேண்டுமா என்ன? மகளாக இருக்கக் கூடாதா?

"அவளிடம் எப்படி ஆரம்பித்து விஷயத்தைச் சொல்வது என்று புரியாமல் விழித்தேன். ரஞ்சித்சிங்கின் மனைவியாக இருந்திருந்தால் என் வேலை சுலபமாக முடிந்திருக்கும் என்று தோன்றியது.

"'அப்பா...' என்று ஆரம்பித்தேன்.

"'வரமாட்டாரா?' என்று அலறினாள் அவள். நான் கோழையாகக் கூறத் தயங்கி நின்றதை அவளே உள்ளுணர்வினால் அறிந்து கொண்டு விட்டாள்.

"அவளுடைய அழுகையை நிறுத்த முயலுவதோ அல்லது சமாதானப்படுத்த முற்படுவதோ அசம்பாவிதம் என்று தீர்மானித்தவனாய், 'நாளை மறுபடியும் வருகிறேன்' என்று கூறிவிட்டுப் புறப்பட்டேன்.

"மறுநாள் நான் போனபோது அசலா அழவில்லை. உணர்ச்சியற்ற மரக்கட்டையாக 'வாருங்கள்' என்றழைத்தாள். நான் உட்கார்ந்து கொண்டு ரஞ்சித் சிங் அடைந்த வீர மரணத்தை விரிவாக எடுத்துச் சொன்னேன். அவள் கண்கொட்டாத ஆர்வத்துடன் கவனமாகக் கேட்டாள். அந்த முகத்தில் பெருமித ஆனந்தமும் துயரத்தின் கனலும் மாறி மாறித் தோன்றின. ரஞ்சித் சிங் மார்புறத் தழுவியிருந்த போட்டோவைப் பற்றி நான் சொன்னதும் அவள் முகத்தில் மலர்ச்சியையே பார்த்து விட்டேன் நான். போட்டோவில் கண்ட முகம் அப்போதுதான் உயிர் பெற்று என் எதிரே நின்றது!

"போட்டோவுக்குப் பின்னால் அவர் எழுதியிருந்ததை அவளுக்குக் காண்பித்தேன். 'உன்னை நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்து விட்டு நான் ஊர் திரும்ப வேண்டும். அது வரை உன்னை நான் காப்பாற்றுவேன்' என்றேன்.

"மலர்ந்திருந்த அந்த முகம் மறுபடியும் வாடி விட்டது. 'அந்தப் பொறுப்பிலிருந்து உங்களுக்கு விடுதலை யளிக்கிறேன். என்னைப் பற்றி நீங்கள் கொஞ்சம் கூடக் கவலைப்பட வேண்டாம். நிம்மதியாகப் போய் வாருங்கள்' என்றாள் அசலா.

"'என்ன? என்ன?'—ஒன்றும் புரியாமல் கேட்டேன் நான். 'அசலா! அப்பாவின் இறுதி வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டியது என் கடமை; ஒரு புனிதத் திருப்பணி. அதைப் பற்றி அலட்சியமாகப் பேசாதே!'

"'இதோ பாருங்கள்! நீங்கள் கனவுலகில் இருக்கிறீர்கள்; கனவு காண்கிறீர்கள். நான் பூவுலகில், பராமுலாவில் இருக்கிறேன். உண்மையில் நடக்கக் கூடியதையும் கூடாததையும் பார்க்கிறேன். எனக்குக் கல்யாணத்தைப் பண்ணி வைத்து விட்டு நிம்மதியாகப் போவது என்பது நடக்காத காரியம்.'

"'ஏன்? ஏன்?'

"அவள் சிரித்தாள். வெறுப்பும் விரக்தியும் நிரம்பிய சிரிப்பு. பராமுலாவில் பட்டாணியர்கள் செய்த அட்டூழியங்கள் உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் இன்று இந்த நகரத்தில் தெய்வாதீனமாக உயிர் பிழைத்திருக்கும் அனைவருக்கும் தெரியும். அவர்களில் ஒரு ஆண்மகனும் என்னை மணக்கச் சம்மதிக்க மாட்டான்!

"'கேளுங்கள்! முன்னேறி வரும் இந்தியத் துருப்புக்களைக் கண்டு தப்பி ஓட முற்பட்ட பட்டாணியர்கள் வஞ்சம் தீர்க்கும் வகையிலே இவ்வூரில் எத்தனையோ அக்கிரமங்களைச் செய்தார்கள். என் அன்னையைக் கொன்று போட்டார்கள். என்னையும் கட்டுக் கொன்று விடுமாறு கெஞ்சினேன். கண்களில் நீர் மல்க மன்றாடினேன். ஆனால் அவர்களின் தலைவன் அதை விரும்பவில்லை. இன்ப நினைவுடனேயே திரும்பிச் செல்ல விரும்பினானாம். இன்பத்தை அழித்தால் இன்ப நினைவும் அழிந்து போகுமாம்! போய் விட்டான், சண்டாளன்!'

"அசலா விம்மினாள். உடல் கூனிக் குறுகிப் போக ஒடுங்கி நின்று அழுதாள். பச்சாத்தாபம் என் நெஞ்சை நிறைத்தது. ஒரே வினாடியில் நான் செய்யப் போகும் காரியத்தைத் தீர்மானித்து விட்டேன். யோசிக்கவே இடமில்லை. குலுங்கும் தோள்களைப் பற்றி அவளை நிமிர்த்தி 'நான் மணந்து கொள்கிறேன் அசலா! உன்னை நான் கல்யாணம் செய்து கொள்கிறேன்' என்றேன்.

"அசலா என் வாயைப் பொத்தினாள். என் அன்பைப் பெறத் தான் தகுதியற்றவள் என்ற நினைப்பிலே எழுந்த செயல் அது. அவளது எதிர்ப்பைச் சமாளித்து வெற்றி பெற எனக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

"யாரிடமாவது சரணடையக் காத்திருந்த அவள் என் பரந்த மார்பிலே சாய்ந்தாள். நண்பனுக்கு என் கடமையைச் செய்து விட்ட திருப்தியில் என் கரங்கள் அவளை ஆதரவாக அணைத்துக் கொண்டன.

"திருமணம் நடப்பதற்கு முன்னால் மறுபடியும் என்னைப் போர்க்களம் அழைத்தது. பராமுலா வெற்றிக்குப் பின், தொடர்ந்து பட்டாணியர்களையும் போரிலே இப்போது நேரடியாக இறங்கி விட்ட பாகிஸ்தான் துருப்புகளையும் துரத்தியடித்தோம்.

"ஸ்ரீநகரிலிருந்து ஐம்பது மைல் தூரத்திலுள்ள ஊரி வரை எதிரிகளைப் பின் வாங்கச் செய்தோம். காஷ்மீரப் போரில் இறங்கிப் பத்து மாதங்களுக்குப் பிறகு ஐ. நா. சபையின் போர்நிறுத்த ஒப்பந்தம் ஏற்பட்டது. போர்க் களங்களிலே நான் புரிந்த வீரச் செயல்களுக்காக வீர சக்கரமும் எனக்குக் கொடுத்தார்கள். அத்துடன் நாலு மாதங்கள் லீவும் எடுத்துக் கொண்டு பராமுலாவுக்குத் திரும்பினேன். அங்கே அசலா என்னைக் குதூகலமாக வரவேற்றாள். ஜம்முவுக்குச் சென்று அவள் இஷ்டப்படி ஒரு கோயிலில் மணம் புரிந்து கொண்டோம்.

"இரண்டு மாதங்கள் இன்ப வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தேன். இடையே ஒரு நாள் அசலா, 'நீங்கள் ஊருக்குத் திரும்ப வேண்டும்.

உங்கள் காதலி உங்களுக்காக ஏங்கிக் காத்திருப்பாள். அவளை நேரில் சந்தித்து எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லி விட்டு வாருங்கள்' என்றாள்.

''எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'அசலா! உனக்கு எப்படித் தெரியும்?' என்று திகைப்புடன் கேட்டேன்.

'' 'சத்தியமாகச் சொல்லுகிறேன். நமக்குக் கல்யாணமான இரண்டாம் நாள்தான் அந்தப் புகைப்படத்தை நான் பார்த்தேன். முன்னமேயே பார்த்திருந்தால் அக்காளுக்குத் துரோகம் செய்திருக்க மாட்டேன். உங்கள் இன்ப வாழ்க்கைக்கு இடையூறாகப் புகுந்திருக்க மாட்டேன். அதை அக்காளிடம் தெளிவாகச் சொல்லுங்கள். நான் அறியாமல் செய்து விட்ட பிழையை மன்னித்து விடச் சொல்லுங்கள்.'-அவள் குரல் தழுதழுத்தது.

''கமலி! அவளுடன் நடத்திய இல்லறத்தின் இன்ப மயக்கத்தில் பழைய நாட்களை நான் அடியோடு மறந்து போனேன். அந்த உத்தமி தான் உன்னைப் பற்றி எனக்கு நினைவு படுத்தினாள்.

''இங்கே வருவதற்கே வெட்கப் பட்டுக் கொண்டிருந்த என்னை அவள்தான் அனுப்பி வைத்தாள். 'போரிலே வீரன்; வாழ்க்கையிலே கோழை நீங்கள்! அவளைப் பார்த்து உண்மையைச் சொல்லத் தைரியமில்லாமல் இங்கேயே பயந்துபோய் உட்கார்ந்திருக்கிறீர்களே! அவளுடைய தவிப்பை என்னால் தான் உணர முடியும். போய் வாருங்கள்' என்று கூறி அனுப்பினாள்.

''இதோ வந்து விட்டேன் கமலி! அவள் விருப்பப்படியே நடந்ததையெல்லாம் ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லிவிட்டேன். என்னை மன்னித்துவிடு! மறந்துவிடு!''

சிங்காரவேலு தன் மார்பில் தொங்கிய வீர சக்கரத்தைப் பார்த்தான். அந்தப் பதக்கத்தைக் கெட்டியாகப் பிடித்துச் சொடுக்கி இழுத்தான். அது பிய்த்துக் கொண்டு வந்த போது சட்டையும் தாறுமாறாகக் கிழிந்து தொங்கியது.

வீர சக்கரத்தைக் கண் கொட்டாமல் சில விநாடிகள் பார்த்தான் சிங்காரவேலு. பிறகு அதைக் கமலியின் கைகளிலே வைத்து விரல்களை மூடினான். கமலியின் உடல் அக்காளுடைய ஸ்பரிசத்தால் நடுங்கியது.

''கமலி! நீ கூடிய சீக்கிரம் ஒரு நல்ல புருஷனை அடைந்து சந்தோஷமாக வாழ வேண்டும். அதுதான் என் வேண்டுகோள்; பிரார்த்தனை. எப்போதாவது வருத்தத்துக்கு ஒருமுறை இந்த வீர சக்கரத்தை எடுத்துப் பார்! அது தியாகத்தின் சிறப்பை உனக்கு எடுத்துச் சொல்லும். நான் போய் வருகிறேன், கமலி!''

சிங்காரவேலு நடந்தான், ஆற்றங்கரையோடு. அவளுடைய வாழ்க்கையை விட்டுப் பிரிந்து போய்க் கொண்டேயிருந்தான்.

கமலியின் கண்களிலிருந்து பெருகிய கண்ணீர் வீர சக்கரத்தை நனைத்தது. இருப்பினும் இதய அந்தரங்கத்திலே அவளுக்கு ஓர் ஆனந்தம். தியாகம் புரிவதால் மனிதனுக்கு ஏற்படும் அலாதியான ஆனந்தம்தான் அது.

அடுத்த வீட்டு குழந்தை க்ரைப்பினலை சாப்பிடும்பொழுது நான் சாப்பிடவேண்டாமா..





முற்றிலும் சுவையுள்ள
அநுகூலமான க்ரைப்பினலை
நான் ஒருபொழுதும்
சாப்பிட தவறியதில்லை.
வயிற்று உபாதைகள்
ஒன்றும் அணுகாதபடி
என்னை பாதுகாக்கிறது.
எல்லாவற்றிற்கும் மேலாக,
நான் சந்தோஷமாக
இருப்பதைப் பார்க்கும்
என் தாய் என்னிடம்
மிகவும் அன்பாக இருக்கிறாள்

க்ரைப்பினலில் மயக்கம்
தரக்கூடிய மருந்து ஒன்றும்
இல்லை. அநேக தாய்மார்கள்
அபாயமின்றி
உபயோகித்துவரும்
சிறந்த க்ரைப் மிக்சர்
இதுவேதான்.
நீங்களும் இதையே
உபயோகித்து
உங்கள்
குழந்தைகளையும்
இன்புறச்
செய்யுங்கள்.

ஜண்டு

# க்ரைப்பினல்

மிகச்சிறந்தது......சக்தி வாய்ந்தது

ஜண்டு பார்மஸூடிகல் வொர்க்ஸ் லிட்.,
கோகலே ரோட் ஸௌத். பம்பாய்-28

ஸ்டாக்கிஸ்டுகள்
தாமோதர் & கம்பெனி
113, தைனியப்ப நாயக்கன் தெரு
சென்னை - 3

கிளை ஆபீஸ்:
129, ஒப்பணக்கார வீதி
கோயமுத்தூர்



# பாவமன்னிப்பு

கோமதி நாகராஜன்

இரு கரைகளையும் உடைத்துச் சாடிக் கொண்டு, 'ஹோ' வென்ற இரைச்சலுடன் பொங்கிய நதியின் கோலாகல ஓட்டம் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. பொங்கி வரும் உணர்ச்சிகள் நாளங்களிலே தெறிக்கப் பாய்ந்து வரும் சினம் கொண்ட பெண் போல் இயற்கைத் தேவர்களின் பலப் பரீட்சையிலே சீற்றம் கொண்ட தாமிரவர்ணி, தான் தவழ்ந்து விளையாடிய பூமி அன்னையின் மடியை முட்டிச் சிதைத்துக் கொண்டு கரை புரண்டோடிக் கொண்டிருந்தாள். நொங்கும் நுரையுமாகச் செந்நீர்ப்பரப்புக் குருதிபோலப் பளபளத்தது. வேரோடு சாய்ந்த தாவரங்களும், ஜீவராசிகளும் அதன் வேக நதியிலே அலைப்புண்டு மிதந்தன. கரையின் மீது மரங்களின் தூரிலும் கொப்புக்களிலும், வாராவதியின் சுவர் மீதும் வேடிக்கை பார்க்க வந்த ஜன வெள்ளத்தின் ஆரவாரம், நதியின் பேரிரைச்சலையும் உள்ளடக்குவதாக இருந்தது.

பாலத்தின் சுவர் ஓரமாகப் பாதிரி சந்தோஷம் நின்று கொண்டிருந்தார். செந்நீர்ப் பரப்பின் மீது தவழ்ந்த கண்களிலே, இதய அடிவாரத்திலிருந்தும் திரண்ட செம்மை படர்ந்தது. சரசரவென்று இறங்கி மேகத்திலிருந்தும் நீர்த் துளிகள் சிதறின. இமைச் செழுக்குள் தேங்கிய பனித் திவலைகளைத் துடைத்துக் கொண்டே திரும்பினார்.

"அடே, சைக்கிள் ஒன்று மிதந்து வருது பார்!" என்று தொடர்ந்து கேட்கவே, நாலைந்து உடல்கள் தண்ணீருக்குள் பாய்ந்து கெண்டைகள் போலத் துள்ளி நீந்தின.

"ஆச்சி, எம்மாம் வெள்ளம் இப்போ சாடுது பார்த்தாயா?"

"ஹூம்! இருபது வருசத்துக்கு முன்னாலே அவ ஆடி அழிச்ச கூத்துக்கு முன்னாடி இது என்ன பிரமாத வெள்ளமா? அடியம்மா, வெள்ளம் வடியவே பத்து ராப்பகல் பத்தலே!" பேசிக் கொண்டே சென்ற மூதியின் கூற்று சந்தோஷத்தின் நெஞ்சிலே நினைவு அலைகளாக ஆர்த்தன.



"இருபத்து மூன்று வருஷங்களுக்கு முந்திய வெள்ளத்திலேயும் இதே ஊழிக் கூத்துத் தான்! இதே அழிவுக்களத்தின் முன்பாக..... சந்தோஷம் இன்று நின்று கொண்டிருக்கும் வாராவதிச் சுவர் அருகே, தந்தை பெரிய விசுவாசம் நின்று கொண்டிருந்தார். இதே தூய வெள்ளை ஆடை! ஆனால் அந்த வெண்மைக்குப் பின்னே நெஞ்சிலே சேற்றைப் பூசிக் கொண்டு நிற்கவில்லை அவர்! உடையே ஒரு தூய வெண்மை! உள்ளமோ களங்கமற்ற தனித் தூய்மை! உலகத்துக் கயமை யாவும் பட்டுப் போய் விடும் பார்வைக் கூர்மை!

தாயின் சினத்தைக் கண்டு நொந்த இதயத்துடன், உணர்ச்சிகளால் துன்புறுத்தப்பட்டு, அழியும் உயிரினங்களுக்காக மாலை மாலையாகக் கண்ணீர் சொரிந்தபடியே நின்றார் அந்த நற்போதகர்!

அவரது நெஞ்சக் கசிவுக்கும் ஒரு சோதனைக் குறுக்கீடு! தத்தளித்து மிதந்து வந்த ஒரு சிறுவனைக்கண்டு ஓவென அலறிய மனிதக் கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு வெள்ளத்துக்குள் புகுந்தார். தூய வெள்ளுடையிலே செங்காவிக் கறை; பூரித்த தோள்கள் மீது சிறுவனின் துவண்ட உடல்! ஆடையைப் பற்றிய செங்காவிக் கறைபோல; அந்தச் சிறுவனும் அவரது மாசுமறுவற்ற உள்ளத்திலே கறையாக ஒட்டிக் கொண்டு விட்டானோ? எத்தனையோ உயிரினங்களை அழித்த அன்னை அந்த ஒரு சிறுவனின் வாழ்க்கைச் சுமையை மட்டும் அந்த முதியவர் தோளிலே தள்ளி விட்டு, ஒரு ஜீவனின் ஏட்டில் ஓர் அத்தியாயத்தை ஆரம்பித்து வைத்த பெருமிதத்தோடு பாய்ந்தோடிக் கொண்டிருந்தாள்.

மேலே வந்து மோதிய ஜனக்கூட்டம் சிந்தனையைச் சிதறடிக்கவே, சந்தோஷம் மெல்ல விலகி நடந்தார். நடையைப் பின்னுக்கு இழுத்த மிதியடிகளைக் கழற்றிப் பையில் போட்டுக் கொண்டார். வீரராகவபுரம் பஸ் ஸ்டாண்டில் சில நிமிஷங்கள் காத்திருந்து பார்த்தார். எங்கிருந்துதான் இவ்வளவு கூட்டம் வருகிறதோ? நெட்டுயிர்த்த பஸ்ஸினின்றும் கண்டக்டரின் கை மட்டும் நீண்டு விரிந்து 'இல்லை' முத்திரை காட்டியது.

சாலையோரமாகக் கால்நடையாகவே வண்ணாரப்பேட்டை வந்து விட்டார் சந்தோஷம். பாதசாரிகளின் வாயிலும் வெள்ளப் பிரதாபம்தான் புரண்டு கொண்டிருந்தது. குன் கொட்டியவராக சந்தோஷம் நடையைத் துரிதப்படுத்தினார். முருகன்குறிச்சி தாண்டியதும், வாய்க்காலின் சலசலப்பு ஒலி பிரவாகத்தின் சுதியைச் செவிப்பறையிலே சாடியது. வெள்ளமும், மழையும் இழைத்த நாச சக்தியினால் தெருவின் மின் விளக்குகளும் கண்ணை மூடிவிட்டன. கருத்திரையிலே தீட்டிய ஓவியம்



போலப் பள்ளிக் கட்டடம் மட்டும் அந்த இருள் திரைக்குள் பளீரென்று இலங்கியது.

காம்பவுண்டுக் கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தார் சந்தோஷம். மீண்டும் மனம் கடந்த காலத்தில் போய் மோதியது.

"இருபத்துமூன்று வருடங்களுக்கு முன்பு தந்தை பெரிய விசுவாசம் இதுபோல் தனி மனிதராக நுழையவில்லை. தோளிலே கிடந்த உயிர்ச் சுமைக்கு வாழ வழிவகுத்தாரே அந்தத் தினத்தில், புது உலகில் அடி எடுத்து வைத்த சிறுவன் தனது இன்ப துன்ப உணர்ச்சிகள், இளமை, முதுமை ஆகிய எல்லா நிலைகளும் அந்தப் பள்ளிச் சுவருக்குள்ளேயே கழித்துவிடும் என்று எண்ணியிருப்பாரா? அந்த வட்டாரமே போற்றும் தந்தை சந்தோஷமாக அவனது புனர்வாழ்வு மலரப் போவதை அந்த ஞானி அறிந்திருந்தாரோ?

பையனுக்குப் பிரக்ஞை தெளிந்து சூடான தேநீரைப் பருகச் செய்ததும் அவனைக் கனிவோடு வருடிக் கொடுத்தார். "தம்பி! உன் பெயர் என்ன?"

"பாண்டியன்."

"நீ எப்படி வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டாய்? உன் பெற்றோர் இப்பொழுது எங்கிருக்கின்றனர்?"

சிறுவன் மௌனமாக இருந்தான். கண்களிலே வயதுக்குமீறிய கடுமை சேர்ந்துவிட்டது.

"பாண்டியா! உனது மனக் கவலைகளைக் களைவதுபோல், உனது பெற்றோரின் வருத்தத்தை நீக்குவதும் எனது கடமை அல்லவா? உண்மையை மறைக்காது சொல்." அந்தக் குரலின் கனிவு நெஞ்சிலே எத்தனை ஆயிரம் கவர்ச்சிகளைப் பூட்டி, உயிர்ச் சக்தியைத் திண்டி சார்த்ததுவோ? சிறுவன் அவரது காலடியிலே சுருண்டு விழுந்து விம்மி அழுதான்.

"ஐயா! இந்த வெள்ள விபத்தோடு எனது பழைய பிறப்பை நான் மறந்து விட்டேன். என்னைப் புது மனிதனாக்குங்கள்."

துளிர்த்து வந்த இளம் பயிர்மீது மூதிய உள்ளம் அன்பு மழையைப் பொழியத் தொடங்கியது.

மழைத் துளிகள் பட்டுச் சிலிர்த்து ஆடிக் கொண்டிருந்த ரோஜாமலர் ஒன்றைத் தமது கையை நீட்டி வெடுக்கென்று பறித்தார் சந்தோஷம். கூரிய முள்ளொன்று விருக்கென்று விரலுக்குள் பாய்ந்தது. பொலபொலவென்று சிந்திய ரத்தத்துளிகளை வெறித்து நோக்கினார் சந்தோஷம். நாசி வழியே உள்ளே புகுந்த மலரின் மணம் நெஞ்சுக்குள் புகுந்து வருடியது.

"இதே அனுபவந்தான் சிறுவனின் மனத்தைத் தைத்தது. ரோஜா மலரைப் பறிக்கும் பொழுது முள் குத்திய சிறுவன், மலரின் மணத்தையும், அழகையும் எட்டு நோக்காது அதனை வீசி எறிவதுபோல், இளமை நாட்களில் ஏற்பட்ட கசப்பு அனுபவங்களின் வெறுப்பில் பழைய வாழ்க்கைத் தொடர்புகளைத் துண்டித்து எறிந்தான் மூடச்சிறுவன்." கண்களை இறுக மூடி அந்த விரக்தி நிலையிலே ஒன்றிவிட்டார் சந்தோஷம்.

* * *

சேனூர்பட்டி பள்ளிகொண்டானின் பின்பே மகன் என்ற பெருமையோடு, [illegible] சுற்றி வந்து, உண்டு உறங்கிவந்த பாண்டியனின் வாழ்க்கையிலும் கவலைகள் புகுந்து கொண்டன. இல்லையெனில் ஐந்து வருடங்களாக வியாதியோடு உறவாடி, விதியோடு போராடிய அந்த அன்னையின் படுக்கை காலியான இருபத்திரண்டு தினங்களுக்குள்ளேயே பள்ளிகொண்டான் பின்னே சாரங்கையின் கைத்தலம் பற்றுவாரா?

அவர்மீது தவறு என்ன? மூத்த மனைவியின் படத்துக்கு முன்பு சீட்டுப் போட்டு, மகனை

அதிகமாகிப் பிரக்ஞை தவறி விட்டது. தச்ச நல்லூர் டாக்டரம்மாளை அழைத்து வரச் சொல்லிச் செல்லனை அனுப்பினேன். இன்னும் வரக் காணோம். தொடியிலே போய், கையோடு வண்டியிலே இட்டாந்திரு. அவன் உயிர் உன் கையிலேதான் இருக்குது...'' என்றார் துக்கம் பொங்கிவர. பையிலிருந்து மூன்று பத்து ரூபாய் நோட்டுக்களை அவன் கையிலே திணித்து அனுப்பினார்.

பாண்டியனின் குரோதம் கொட்டும் பார்வை, தந்தையின் தவிப்புப் படர்ந்த முகத்தோடு இணைந்து மீண்டது. மகனின் அல்ப ஆசையைப் பூர்த்தி செய்யத் தயங்கிய கரங்கள், இப்பொழுது மனைவியின் உதவிக்கு நோட்டு நோட்டுக்களாக வாரி வழங்கத் துடிக்கின்றன! சாரம்மை... என் அன்னையின் இடத்தை அழித்தவளே, ஆண்டவன் எனக்கு அளித்த முதலும் கடைசியுமான சந்தர்ப்பத்தை இழக்க முட்டாள் மகனல்ல நான்?

பலமாகத் தலையாட்டிவிட்டுத் தச்ச நல்லூர் சாலையில் விரைந்தான். துணிவைத் தாண்டத் தோளோட்டி இரு நண்பர்கள். மகிழ்ச்சி உரையைத் தடை செய்தது மாடுகளின் சலங்கைச் சத்தம்! அரை பர்லாங் தூரத்தில் மாட்டு வண்டி ஒன்று குதிநடை போட்டு வந்தது. உள்ளே டாக்டர் அம்மாள் உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

பாண்டி அவளருகே சென்று வணங்கினான். ''சேனூர்பட்டி பள்ளிகொண்டான் பிள்ளையின் மகன் நான். அவர் மனைவிக்குச் சுகப்பிரசவமாகித் தாயும், குழந்தையும் சுகமாக இருக்கிறார்கள். தாங்கள் வந்து அலைய வேண்டாமென்று சொல்லி வரும்படி என் தந்தை என்னை அனுப்பி வைத்தார்!'' என்றான் அடக்கமாக.

''அப்படியா? கூப்பிட்ட அவசரத்தையும் நெருக்கடியும் கண்டு பயந்தே போனேன். நல்லவேளை கர்த்தர் கிருபைக்குச் சந்தோஷம். சரி, வண்டியை வந்த வழியே திருப்பு'' என்றாள் உண்மை மகிழ்ச்சி நிறைவோடு.

''வண்டிச் சத்தத்தையாவது பெற்றுக் கொள்ள வேண்டும்.'' விரும்பாதவன்போல அவள் நீட்டிய இரண்டு ரூபாய்களை வாங்கிக் கொண்டான். வண்டி எதிர்த்திசையில் திரும்பியது. அந்த வினாடியிலிருந்துதான் அந்தச் சிறுவனின் வாழ்க்கைச் சக்கரமும் எதிர்த்திசையில் திரும்பியதோ?

மூன்று நாட்கள் நண்பர்களோடு பாளையங்கோட்டை வட்டாரத்தையே சுற்றி விட்டுக் கையிருப்பு கரைந்ததும் பாண்டியன் தச்ச நல்லூர் பஸ்ஸில் ஏறினான்.

முகப்பிலேயே கடையில் பெரிய பூட்டுத் தொங்கியது. தயங்கியவாறு வீட்டை நெருங்கினான். தெருவெங்கும் நிலவிய அமைதி மனத்துள் எதையோ வரையவிட்டுப் பிறண்டியது. மகனைக் கண்டதும் பிள்ளை முதுகைத் திருப்பிக் கொண்டார்.

''அப்பா!''

''உம்!'' ஒரு சிறு உயிர்ப்பு உறுமலாக வெடித்து வந்தது.

''அப்பா...டாக்டர் அம்மாள்...'' மனத்திலே பின்னிய கற்பனையைச் சொந்தமாகத் தொடுப்பதற்குள் காலன் போலக் கோபத்துடன் எழுந்தார் தந்தை.

''ஏலே பாண்டி! அறிந்தோ அறியாமலோ நீ செய்த இந்தக் காரியத்துக்கு மன்னிப்பே கிடையாது. என் கண் முன்னாலே நிக்காதே. ஓடிப்போ...'' என்றார் வெறி தாண்டவமாடும் குரலில்.

''இல்லே...அப்பா!''

''ஏலே: கொடுத்த பணத்தைக் கூத்தாடி விட்டு....சவம் கணக்க வந்து நிக்குதே...'' மூலையிலிருந்து பிரம்பைத் தூக்கி முதுகிலும் தோளிலும் மாறி மாறி விளாசினார். வரிவரியாக அடிபட்ட தழும்பில் குருதிக் கோடு! அவரை விட்டுப் பிரிந்து சென்ற ஏதோ ஒரு வெறியின் சக்தி அவரை அதமறுக்கியது. உள்ளே யிருந்து குழந்தையின் அழுகைப் பிரலாபம் தவழ்ந்து வந்தது. தண்டனையைத் தவிர்க்கச் சிற்றன்னை துடித்து வரவில்லையே? ஏன்?..... அவள் எங்கே?

திரும்பிக் கூடப் பார்க்காது ஓடி வந்த சிறுவன் வெறுப்பின் எல்லையிலேயே தாமிரவர்ணியின் மடியில் சரணடைந்தான். அவனுக்கும் ஓர் அடைக்கலம் சந்து விட்டாள் தாமிரவர்ணி அன்னை!

காலதேவன் நீட்டிய கோலத்தில் புனர்வாழ்வு பெற்றுவிட்டார் தந்தை சந்தோஷம். புடமிட்ட வாழ்க்கை லட்சியங்களால் கொஞ்சம் தாசியையும், துருவையும் ஓரளவுக்கு

# பூச்சிப் பத்திரிகை

## சாக்கடைத் தொட்டியில் படுகொலை!



### ப்ளிட்டால் ஆறு பேர் மரணம்!

நேற்று மாலையில் ஒரு கோர சம்பவம் நடந்தது. சாக்கடைத் தொட்டியில் ஆனந்தமாக வாழ்க்கை நடத்தி வந்த கரப்பான் தம்பதிகளையும் அவர்களுடைய நான்கு குழந்தைகளையும் ப்ளிட் ஆயுதபாணி மூச்சுத் திணறச்செய்து படுகொலை செய்தான்.

அமைதியும் அசுத்தமும் நிரம்பிய இந்த இடத்தில் இந்த கிருமிநாசினி திடீரெனத் தோன்றியதன் மர்மம் இன்னும் விளங்கவில்லை. வீட்டிலிருக்கும் கிருமிகளையும் பூச்சிகளையும் ஒழித்துக்கட்ட எடுக்கப்பட்டிருக்கும் பொது நடவடிக்கையின் ஒரு அம்சமே இந்தப் படுகொலையென விஷயம் தெரிந்த வட்டாரங்களில் நம்பப்படுகிறது.

ப்ளிட்டின் சக்தியை வெல்ல ஒரு வழி கண்டு பிடிக்க இரவும் பகலும் ஆராய்ச்சி செய்த விஞ்ஞானிப் பூச்சிகள் 'பயனில்லை' என்று முயற்சியை கைவிட்டுள்ளார்கள்.







ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)



நாடகம் முடிந்தவுடன் நான்தான் முதன் முதலில் வெளியே ஓடுவேன். சைக்கிளை எடுப்பதற்காக அல்ல! காரைக் கிளப்புவதற்காக அல்ல. என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளத் தான். நான்தானே நாடகத்தில் கதாநாயகன்.

அரற்ற முடிந்தது. பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு மனச்சாட்சிக்கு மீண்டும் ஒரு சோதனை ஏற்பட்டது!

தந்தை பெரிய விசுவாசம் நோயிலே விழுந்த ஆறு மாதங்களாக, அவரது பணிகளும் சந்தோஷத்தின் மேற்பார்வையில் தான் நடந்தன. விடுதி ஆதரவு கோரி வந்த விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்து கொண்டிருந்தார். அந்த விண்ணப்பத்தாளின் மீது பதிந்த அவர் பார்வையில் நெருப்புக் கொழுந்து மின்னியது. "நச்ச நல்லூர்... பின்னேயின் இளைய மகன் இதயராஜ்..." மேலே நீட்டியிருந்த வரி வடிவங்கள் ஒன்றும் அகக் கண்களுக்குப் புலனாக வில்லை. நெஞ்சு வரை முட்டி எழுந்த அகங்காரமும் கொதிப்பும் செயலாக வடிந்தன. நீண்டு விரிந்த கைகள் வத்திச்சுடரை நெருங்கின. விண்ணப்ப மனு நெருப்பிலே பொசுங்கிய நெடியின் வெம்மையில், இதயத்துக்குள் நீராகிக் கிடந்த உணர்ச்சிகள் குபீரென்று ஜ்வாலையாகக் கனன்றன. விசுவாசம், "ஏன் அவ்வாறு செய்து விட்டாய்?" என்றார்.

"நான், இந்தப் புதிய பாதைக்கு வந்த பின், கடந்த காலத்தின் நிழல் பொறி கூட என்னைப் பின் தொடர்ந்து வருவதை நான் விரும்பவில்லை." சொற்களின் அழுத்தத்துக்குள் மனிதத் தன்மையையும் வைத்துப் பூட்டினார் சந்தோஷம்.

விடுதியிலிருந்து பிரார்த்தனை மணி ஏழேகால் ஒலித்தது. இன்னும் கால் மணி நேரத்தில் குருடர் பள்ளி ஆண்டு விழாவில் கலந்து கொள்ள வேண்டுமே! நினைவு ஓட்டத்தின் கதியிலே காலந்தாழ்ந்து விட்டதைக் கூட உணராத பிரக்ஞையற்ற நிலை! தமது தாமதத்துக்குத் தம்மைத் தாமே தண்டித்துக் கொள்பவர் போல, உடலை விரட்டி நடையைத் துரிதப் படுத்தினார்.

வண்ண மலர்களின் மணம் அறையை நிறைத்தது. மின்மினிக் கொத்துப் போல் மெழுகுவர்த்தியின் தண்ணொளி கண்ணுக்குள் புகுந்து விளையாடியது. குழந்தைகளின் நாடகம், தேசப் பயிற்சி என நிகழ்ச்சி நிரலோடு கலந்து விட்ட கலையின்பம் மயிர்க் கால் வரை பொடித்தது.

ஆடலுக்கேற்ற இசை! இசையின் நெருக்கமும், இனிமையும் நெஞ்சிலே ஆர்ந்தன. உடலிலுள்ள அணுக்கள் யாவும் உருகி வழிவது போன்ற கனிவு பீறிட்டெழுந்தது. கண்ணீர் முத்துக்கள் உருண்டன.

"இந்த இசைக்குரியவர் யார்?"

"புதிதாகப் பணியாற்ற வந்திருக்கும் இசையாசிரியர்..." பதிலைத் தொடர்வதற்குள் சந்தோஷம் மேடையின் மீது ஏறினார்.

"இத்தனை அருமையான இசை வரம் பெற்ற உன் கரங்களைக் கொடு" இளைஞனை நோக்கி நெகிழ்ச்சியோடு கைகளை நீட்டினார்.

இளைஞனும் தட்டுத் தடுமாறியவாறு நடந்து வந்து அவரது கரங்களோடு தன் கரங்களை இணைத்துக் கொண்டான்.

"அப்பா உன் பேர் என்ன? உன் பிறப்பிடம் எது?" என்றார் தந்தையின் தவிப்போடு.

"ஐயா. என் பெயர் இதயராஜ். நச்ச நல்லூர் பள்ளிகொண்டான் பின்னேயின் இளைய மகன் நான்..." நெஞ்சக் கபாடமே இடம் பெயர்ந்து விட்டாற் போன்ற பேரதிர்ச்சியில் அவரது சரீரம் ஆடிக் குலுங்கியது. சிதைந்த கனவொன்றின் தொடர்பு நிகழ்ச்சியாக இனம் புரியாத ஓர் புலப்பாடு நினைவைத் தழுவியது.

உள்ளத்தே பொங்கிய துடிப்பையும், தவிப்பையும் அவனுள் புகுத்த முயலுபவர் போல் அவரது பிடி இறுகியது.

நெஞ்சிலே நெருப்புக் கோடு கிழித்தாற் போல் அரற்றி கண்களைக் கூட்டியது. விரல்கள் இமைகளை வருடி. "அப்படியானால் நீ...?" என்றார் வேதனையோடு.

"ஆம் ஐயா, பார்வை ஒளியை இழந்தவன் யான். உரிய மருத்துவ உதவியின்றி, நான் பூமியை முகர்ந்த கணமே உயிர் நீத்தாள் என் தாய். வலிப்பு வியாதி வந்து கண்ணை வெட்டி இழுக்கவே, கிழவி ஒருத்தி வேப்பெண்ணெய்க் குப் பதிலாகத் திராவகத்தைப் போட்டுவிட்ட தால் கண்ணை இழந்தேன். பலருடைய தவறுதல்களின் பின்னணியிலே ஜீவனப் போராட்டமும் நடந்து வருகிறது." வெறுப்பின் கைப்பிலேயே தோய்ந்து வந்தது பதில்.

சந்தோஷத்தின் கண்கள் குளமாயின. தவறு இழைத்த குறுகுறுப்பு உடலைச் சாணாகக் குறுக்கியது. "தம்பி! ஒளியால் வாழ்வைப் பறித்தாலும் கர்த்தர் இசையைக் கொடையாக அருளியிருக்கிறார். வாழ்வைப் பறித்த தவறு யாருடையதாக இருந்தாலும், அவரது திருச்சபையிலே அந்த ஓர் ஆத்மாவுக்காக மன்றாடி நீ பாடு. அந்த ஜீவனின் பாவங்கள் கழுவப்பட்டு, மன்னிக்கப் படும் வரை பாடிக் கொண்டேயிரு தம்பி, நீ பாடிக் கொண்டேயிரு..." அவரது துடித்த உதடுகள் முணுமுணுத்தன. மனக் கதவு படீரென்று திடீரென்று திறந்து கொண்ட வேகத்தில் ஒரு ஜோதி அருள் வியாபித்தது.

அவரது வேண்டுதலின் எதிரொலியாக இதயராஜின் இசை அறையிலே தவழ்ந்தது!

Printed and Published by R. Anantha narayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras-10
Managing Editor, T. Sadasivam.

# அன்பின் வற்ரு ஊற்று!

இந்தப் பருவத்தில் உங்கள் கண்மணியின் சுகம், சந்தோஷம், எல்லாம் உங்களிடந்தான் பொறுத்திருக்கிறது. அவனுக்கு இனிமையான சுகத்தை அளிக்க குழந்தைகளுக்கான ஜான்ஸனின் தயாரிப்புகளே சிறந்த சாதனங்கள். ஏனெனில் அவை 60 ஆண்டு அநுபவத்தையும் ஆராய்ச்சிப் பயிற்சியும் அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப் பட்டுவரும் சாதனங்கள்.

ஜான்ஸனின் பேபி சோப்: குழந்தையை குளிப்பாட்டுவதற்கு. ஜான்ஸனின் பேபி பவுடர்: குளிப்பாட்டிய பிறகும் அவன் ஜெட்டியை மாற்றும் பொழுதும் தூவுவதற்கு. இந்த மிக்க மென்மையான பவுடர் அவனுக்கு சுகமும் இதமும் அளிக்கும்.

இன்றும், அவனுக்கு உபயோகிக்க ஜான்ஸனின் பேபி ஆயிலும் க்ரீமும் உள்ளன.




**ஜான்ஸன் அண்டு ஜான்ஸன்**

60 ஆண்டுகளுக்கு மேலாக குழந்தைகளுக்கான
சாதனங்களை தயாரித்து வருபவர்கள்

ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிட்.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon